# ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன்

ஆசைக் குழந்தைகளுக்கு

அருமைப் பவுடர்




**இலவச புத்தகம்:** ஜான்ஸனின் குழந்தை பராமரிப்பு புத்தகத்தின் இலவசப் பிரதிக்கு எழுதுங்கள். பெற்றோர்களுக்கு உபயோகமான அநேக விஷயங்கள் இதில் அடங்கியுள்ளன. இங்கிலீஷ் அல்லது ஹிந்தி பிரதிகளில் எது வேண்டுமென்று குறிப்பிட்டு எழுதவும்.

ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன், பி.ஓ. பாக்ஸ் 1076, டிபார்ட்மெண்ட் 36 R பம்பாய்

# கல்கி

## பொருளடக்கம்

### அரசியல்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 17
இதழ் 21

தமிழ்த்திரு நாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா—பாரதியார்

ஹேவிளம்பி
மார்கழி 7

# ஈ. வெ. ரா.

திரு ஈ.வெ.ரா. அவர்களைச் 'செஷன்ஸ்' நீதிபதி குற்றவாளி என்று தீர்மானித்து விட்டார். சட்டப்படி அவர் குற்றவாளியாவாரா என்று அதிகார பீடத்தில் இருப்பவர் களைத் தவிர வேறு யாருக்குமே சந்தேகம் இருக்கவில்லை.

செஷன்ஸ் நீதிபதி திரு சிவசுப்பிரமண்யநாடார் அவர்களுடைய தீர்ப்பில் ஒருபகுதி யாருக்கும் வியப்பளிக்கவில்லை. புதுச் சட்டத்தின்படியின்றி, மிகப் பழைய மெக்காலே சட்டத்தின்படியே குற்றவாளி என்று நிரூபிக்கப்பட்டதாக நீதிபதி அறிவித்திருக்கிறார்.

திரு ஈ. வெ. ரா. பல இடங்களில் தீயையும் கொலையையும் பிரசாரம் செய்து பேசி யிருக்கிறார். ஆனால் மூன்று இடங்களில் பேசிய பேச்சுக்களைப் பற்றித்தான் விசாரணை நடத்தப்பட்டது. சட்டத்தின்படி தண்டனையும் கொடுக்கப்பட்டது.

பழைய மெக்காலே சட்டத்தின்படி திரு ஈ. வெ. ரா. அவர்கள் மீது சுமத்தப்பட்டு நிரூபிக்கப்பட்டுள்ள குற்றம் மிகப் பெரிய குற்றம். கடுந் தண்டனை விதிக்கக் கூடிய அளவுக்குப் பெருங்குற்றமாகும்.

விசாரணை நடைபெற்று வந்தபோதுகூடத் திரு ஈ. வெ. ரா. "இதுவே என் னுடைய கொள்கை; இது என்னுடைய தர்மம். இதை நான் விட்டுக் கொடுக்கமுடியாது" என்று சொல்லி வந்தார். சிறைச்சாலை வாயிலில் நுழையும் வரையிலும் இதையே வற்புறுத்தித் திரும்பத்திரும்பப் பேசிவந்திருக்கிறார். நீதிபதியின் நல்லுபதேசத்தையும் கேளாமல் விசாரணை காலத்திலும்கூட, "நான் சும்மாயிருக்க முடியாது; அந்த உறுதி மொழியைக் கொடுக்க எனக்கு மனமில்லை" என்று வாதாடி வந்தார். நிர்ப்பந்தத்தின் பேரில் கடைசியாகக் கையெழுத்துப் போட்டார்.

இது அவருடைய மன உறுதிக்குச் சான்றாகும்.

திரு ஈ. வெ. ரா. அவர்களே கடுமையான தண்டனையை எதிர்பார்த்தார். அவர் பெற்றிருக்கும் அறிவும் அனுபவமும் அவரை அப்படி எதிர்பார்க்கச் செய்தன. கடும் தண்டனையைத் தவிர வேறு ஏதும் அவர் எதிர்பார்க்கவில்லை.

ஆயினும் நாட்டில் அனைவரும் வியக்கத்தக்க முறையில் இலேசான தண்டனையை நீதிபதி விதித்தார். இது நீதிபதியின் பெருந்தன்மைக்கு ஓர் எடுத்துக் காட்டு! குற்ற வாளியின் அந்தஸ்தையும், நிலைமையையும் மனத்தில் கொண்டே தண்டனை விதிக்க வேண்டும் என்பது பழைய விதி. அதை அனுசரித்தே நீதிபதி தீர்ப்பு அளித்திருக்கிறார்.

ஒருவிதத்தில் இது முற்றிலும் நியாயமாயினும், இத்தீர்ப்பு திரு ஈ. வெ. ரா.வின் கோபத்துக்கு ஆளான கூட்டத்தாருக்கு அதிருப்தியும் பீதியும் தரும் என்பதில் ஐயமில்லை. திரு ஈ. வெ. ரா. அச்சடித்துக் கொடுத்த அரசியல் சட்டக் காகிதத்தைச் சுட்டெரித்துச் சந்தோஷப்பட்ட சிலருக்குப் பதினெட்டு மாத கடுங்காவல் தண்டனை விதிக் கப்பட்டிருக்கிறது. அரசாங்கத்தை அவமதித்ததற்காக அந்தத் தண்டனை. ஆனால் திரு ஈ. வெ. ரா. அவர்களின் பேச்சில் "அரசாங்க அவமானம்" எத்தனையோ முறை நிகழ்ந்துள்ளது. இது உலகமறிந்த விஷயம். ஆறுமாத வெறுங்காவல் தீர்ப்பைக் கண்டு, மக்கள் வியப்பதில் ஆச்சரியமில்லை! ஆனாலும் சென்னை அரசாங்கத்தார், திரு ஈ. வெ. ரா. அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட தண்டனையை அதிகப்படுத்த வேண்டும் என்று கோரிச் சென்னை உயர்நீதி மன்றத்தில் வழக்குப் போடுவார்கள் என்று நாம் எதிர்பார்க்கவில்லை!

# வளர்க ஒழுக்கம்!

கும்பகோணம், மதுரை, திருச்சி முதலிய பல ஊர்களில் சேவாதளங்கள் அமைத்து வருவதாக அறிகிறோம். ஊரில் காலித்தன மான, கீழ்த்தரமான செயல்கள் நடைபெற் றால் அவற்றைச் சமாளித்து, ஈடு கொடுக்க இத்தகைய சங்கங்கள் அவசியம். தமிழ் நாட்டு மக்கள் என்றும் காலித்தனங்களுக்கு இடம் கொடுத்தவர்கள் அல்ல. ஆகவே காலித்தனமான செய்கைகளைக் கண்டிக்கவும், தடுக்கவும் தமிழ் மக்கள் அனைவரும் சாதி வித்தியாசமின்றி முழுமூச்சுடன் ஆதரவளிப் பார்கள் என்பதில் நமக்குச் சிறிதும் ஐயமில்லை.

தமிழரசுக் கழகத் தலைவர் திரு ம. பொ. சி. நீண்ட நாட்களாக இந்தக் காரியங்களைக் கண்டித்து வருகிறார். சமீபத்தில் காஞ்சிபுரத் தில் நடைபெற்ற தமிழரசுக் கழக மகா நாட்டில் திராவிடக் கழகத்தின் போக்கைக் கண்டித்து மிகவன்மையாகப் பேசியிருக்கிறார்.

ஆகவே, கட்சி பேதமின்றி, சாதிபேத மின்றிக் காலித்தனங்களை ஒடுக்க ஏற் பாடு செய்யப்படும் அந்தச் சங்கங்களுக்கு முழு மனத்துடன் ஆதரவளித்துத் தமிழ் நாட் டின் பண்பைக் காப்பாற்றுவது தமிழ் மக்களின் கடமையாகும்.

# புத்தக விற்பனையில் புதிய சகாப்தம்

ஒன்றரை ரூபாய் விலையில் சிறந்த தமிழ் நூல்கள் கிடைக்கும் புது சகாப்தம் ஆரம்ப மாகிவிட்டது.

பத்து ரூபாய் விலை வைத்து விற்கப்பட்டு வந்த 'வியாசர் விருந்'தை ஒரு ரூபாய் விலை வைத்து விற்றுக் காட்டியது இந்தியன் எக்ஸ்பிரஸ் திரு கோயங்கா: எடுத்த எடுப்பி லேயே நாற்பதாயிரம் பிரதிகள் அச்சிடச் சொன்னார். தமிழ் மக்கள் ஒரே நாளில் அவ் வளவு பிரதிகளையும் வாங்கி விட்டார்கள். ஆகவே இன்னொரு பதிப்பாக ஐம்பதினாயிரம் பிரதிகள் திரு கோயங்கா அவர்களுக்குப் போட வேண்டியதாகிவிட்டது. கிட்டத்தட்ட ஒரு லட்சம் பிரதிகள் "வியாசர் விருந்து" மலிவுப் பதிப்பு விற்பனையாகி விட்டது. இன்னும் 'வியாசர் விருந்து மலிவுப் பதிப்பு கிடைக்குமா? கிடைக்குமா?' என்று தமிழ் வாசகர்கள் புத்தகக் கடைகள்தோறும் ஏறிக் கேட்டுக் கொண்டு வருகிறார்கள்.

இதற்குப் பிறகு அதிக விலை வைத்து விற்பதில் தனிப் பெயர் பெற்றிருந்த பதிப் பாளர்கள் மலிவுப் பதிப்புகளில் கவனம் செலுத்தத் தொடங்கினர்.

ஏற்கனவே பல பதிப்புகள் வந்து விட்ட பாரதியாரின் கவிதைகள் ஒன்றரை ரூபாய் விலைக்குக் கிடைக்கக் கூடிய மலிவுப் பதிப் பாக வெளிவந்தன. பிரதாப முதலியார் சரித்திரம் வெளி வந்தது. இன்னும் பல நூல்கள் வெளி வந்திருக்கின்றன. இன்னும் பல நூல்கள் வெளி வர இருக்கின்றன.

ஆனால் பதிப்பாளர்களுக்கு ஒரு விஷயம் எச்சரிக்கை செய்ய விரும்புகிறோம். தமிழ் மக்கள் மலிவுப் பதிப்பு என்று எந்த நூலை வெளியிட்டாலும் வாங்கி விடுவார்கள் என்று ஏமாற வேண்டாம். மட்டமான கருத்துக்கள் கொண்ட, ஆபாசமான நூல்கள் வெளியிட் டால் இவ்வளவு விற்பனையாகாது. நல்ல நூல்களை வெளியிட்டால்தான் தமிழ் மக்கள் ஆயிரக்கணக்கில் அல்ல, லட்சக் கணக்கில் வாங்கிப் படிப்பார்கள்!

இந்த உண்மையை முதன் முதலில் எடுத்துக் காட்டி, தமிழ் நாட்டுப் புத்தக விற்பனைத் துறையில் புதிய சகாப்தத்தைத் துவக்கி வைத்தவர்கள் ராஜாஜியும், "இந்தியன் எக்ஸ் பிரஸ்" அதிபர் திரு ராமநாத்கோயங்காவும்.

இதனால் நல்ல புத்தகங்களைக் குறைந்த விலையில் தமிழ் மக்கள் வாங்கிப் படிக்கும் அருமையான வாய்ப்பு இப்பொழுது ஏற்பட் டிருக்கிறது.

பேராசிரியர் கல்கி அவர்களின் நினைவு நாளைச் சென்ற 5-ம் தேதி தமிழ் எழுத் தாளர் சங்கத்தினர் திரு ம. பொ. சி. தலை மையில் சிறப்பாகக் கொண்டாடினர். அந்த வைபவத்தின் போது, பேராசிரியர் கல்கி அவர்களின் "பார்த்திபன் கனவு" மலிவுப் பதிப்பின் இரண்டாவது பதிப்பு வெளியிடப் பட்டது. அந்தப் புத்தகம் ஏற்கனவே ஆறு ரூபாய் விலையில் பல பதிப்புகள் வெளியாகி யிருக்கின்றன. சுருக்கப்பட்ட நூலாகவும் பல பதிப்புகள் வெளியாகி யிருக்கின்றன. இப் பொழுது (சுருக்கப்படாத) மலிவுப் பதிப் பாக இரண்டாவது முறையாக வெளியா கிறது என்றால், தமிழ்மக்கள் நல்ல புத்தகங் களைப் படிக்க வேண்டும் என்பதில் எவ்வளவு ஆர்வம் காட்டுகிறார்கள் என்பதையே காட்டு கிறது அல்லவா?

தமிழ் நாட்டில் பிரசுரகர்த்தர்கள் நீண்ட நாட்களாகத் தமிழில் நல்ல புத்தகம் போட் டால் விற்பனையாகாது என்று தமிழ் மக்களைக் குறை கூறி வந்தார்கள்.

தமிழ் வாசக நேயர்களைக் கேட்டால், "தமிழில் நல்ல புத்தகம் என்றால் யானை விலை குதிரை விலையாக அல்லவா இருக்கிறது? இவற்றை யாருக்கு வாங்கச் சாத்தியப்படும்? நல்ல உயர்தரமான ஆங்கில நூல்கள் எல் லாம் ஒரு ரூபாய் விலைக்குள் கிடைக்கும் போது, சாதாரணத் தமிழ்ப் புத்தகத்துக்குக் கூட ஐந்து ரூபாய், பத்து ரூபாய் விலை கொடுத்து வாங்க வேண்டியதாக இருக் கிறதே" என்று குறை சொல்லி வந்தார்கள்.

பிரசுரகர்த்தாக்களோ, "தமிழில் எவ்வளவு நல்ல புத்தகமாயினும் ஆயிரம் அல்லது இரண் டாயிரம் பிரதிகளுக்கு மேல் விற்பனையாவ தில்லை. அவையும் புத்தகம் வெளியிட்டவுடன் விற்பனையாவதில்லை. பல ஆண்டுகள் பிடிக் கின்றன, விற்பனையாகி முடிவதற்கு. மேலும்



*பிரிட்டிஷ் தொழிற்கட்சித் தலைவர் கெயிட்ஸ்கெல், சமீபத்தில் இந்தியாவுக்கு வந்திருந்த போது, காஷ்மீர் பிரச்னையில் பிரிட்டிஷ் ஆளும் கட்சி பாகிஸ்தானுக்குச் சாதகமாகவும் இந்தியாவுக்குப் பாதகமாகவும் கடைப்பிடிக்கும் கொள்கையை வன்மையாகக் கண்டித்தார்.*

---

புத்தக வியாபாரிகளுக்குப் பெருந் தொகை கழிவு அளிக்க வேண்டியதிருக்கிறது. இவற்றின் காரணமாகப் புத்தகத்தின் விலை உயர்த்தியே வைக்க வேண்டியதிருக்கிறது'' என்று சொல்லி வந்தார்கள்.

பிரகாரகர்த்தர்களின் இந்தக் கருத்து தவறு என்று எடுத்துக் காட்டியவர் ராஜாஜி. இதற்குத் துணையாக இருந்தவர் எக்ஸ்பிரஸ் பத்திராதிபர் திரு கோயங்கா.

ஆயிரம், இரண்டாயிரம், மூவாயிரம் பிரதிகள் விற்று லாபம் சம்பாதித்த புத்தகப் பதிப்பாளர்களுக்குப் பதினாயிரம், இருபதினாயிரம் என்று விற்று லாபம் சம்பாதிக்க வழி வகுத்துக் கொடுத்து விட்டார் ராஜாஜி.

# தென்னகத்தின் எதிர்ப்பு வலுக்கிறது!

ஆங்கிலத்துக்குப் பதிலாக இந்தி மத்திய சர்க்காரின் ஆட்சி மொழியாக வேண்டும் என்ற முடிவுக்கு எதிராகப் பலத்த கிளர்ச்சி நடைபெற்று வருகிறது.

வங்க மக்கள் இந்தி ஆட்சி மொழியாகக் கூடாது என்று பலத்த கிளர்ச்சி செய்து வருகிறார்கள். இந்தியைத் தாய்மொழியாகப் பெற்ற பீகார் சட்டசபையில், இந்தி அரசாங்க மொழியாவதற்குரிய தகுதி இன்னும் பெறவில்லை என்று கூறப்பட்டது.

உத்தரப் பிரதேசத்தைச் சேர்ந்த ஒரு மக்கள் சபை அங்கத்தினர் இந்தி ஆட்சிமொழியாகவேண்டும் என்று எண்ணுகிற தீவிரவாதி: அவர் மக்கள் சபையில் எழுந்திருந்து ஏதோ பேசினார். அதே ராஜ்யத்திலிருந்து வரும் நேருஜிக்கு ஒன்றுமே புரியவில்லை! அப்படியானால் இந்தி ஆட்சி மொழியாகி விட்டால், கண்ணைக் கட்டிக் காட்டில் விட்ட மாதிரிதான். இந்தியைத் தாய்மொழியாகப் பெற்றவர்கள் பாடே இப்படியானால் மற்றவர்களைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. நாட்டில் அராஜகம்தான் ஏற்படும்.

ஆனால் வடநாட்டில் இந்தி வெறியர்கள் அதிகம். அவர்களுக்குத் தென்னாட்டு மக்கள் அடையக்கூடிய கஷ்டம் சரியாக விளங்குவ

இல்லை. ஆகவே, தென்னாட்டு மக்கள் அனைவரும் இந்தி ஆட்சி மொழியாவதை எதிர்த்து ஒருமுகமாகக் குரல் கொடுக்க வேண்டியது அவசியம்! விந்திய பருவதத்துக்குக் கீழ் இந்தி பேசுபவர்களே கிடையாது! இந்த மக்களின் உணர்ச்சிகளுக்கு மதிப்புக் கொடுக்காமல் இந்தி வெறியர்கள் இந்தியை ஆட்சி மொழியாக்க முயன்று வருகிறார்கள். அதனால் தென்னாட்டு மக்களின் உணர்ச்சிகளையெல்லாம் ஒரு உருவாக்கித் தரத் தென்னாட்டுப் பிரமுகர்கள் ஒரு மகாநாடு டிசம்பர் 22-ம் தேதி அன்று கூடுகிறார்கள். மகாநாடு சென்னை சீனிவாச சாஸ்திரி ஹாலில் கூடுகிறது.

மகாநாட்டின் வரவேற்புக் குழுவின் தலைவர் எம். ரத்தினசுவாமி வரவேற்புரை நிகழ்த்துவார். மைசூர் மாஜி திவான் மிர்ஸா இஸ்மெயில் அவர்கள் மகாநாட்டைத் துவக்கி வைப்பார். ஸர் ஸி. பி. ராமசுவாமி அய்யர் தலைமை வகிக்கிறார். ராஜாஜி முதலிய பிரமுகர்கள் கலந்து கொள்கிறார்கள்; அன்று மாலை கோகலே மண்டபத்தில் பொதுக் கூட்டம் நடைபெறுகிறது.

# சென்னையில் இசை விழா

**வா**னமழை பொய்த்தாலும் கான மழை பொய்க்காத நாடு தமிழ் நாடு. அடுத்தவாரம் முதல் தமிழ் நாடு சங்கீதப் பெருவெள்ளத்தில் அழுந்தப் போகிறது!

சென்னையில் மியூஸிக் அகாடமி, தமிழிசைச் சங்கம், பைன் ஆர்ட்ஸ் சொஸைட்டி ஆகிய இடங்களில் நிகழும் கச்சேரிகளை ஆயிரக்கணக்கான பேர் நேரில் கேட்டுத் துய்ப்பார்கள்! அதைவிட வானொலி மூலம், லட்சோப லட்சம் மக்கள் கேட்டு அனுபவிப்பார்கள்.

சங்கீதக் கலைக்குச் சென்ற முப்பது வருஷங்களாக சங்கீத வித்வத் சபையார், அரும்பணியாற்றி வந்திருக்கிறார்கள். தமிழ் நாட்டின் மூலைமுடுக்குகளிலிருந்து கொண்டு, சங்கீதக் கலைக்கு, யாதொரு பயன்கருதாமல் தொண்டு புரிந்து வந்துள்ள மாபெரும் வித்வான்களை வரவழைத்துக் கௌரவித்துள்ளார்கள். சங்கீதக் கலையிலுள்ள பழம்பெரு முறைகளையும் வழிகளையும் மறைந்து ஒழிந்து போகாமல் பலரும் தெரியச் செய்ய, சங்கீத சர்ச்சைகள் நடத்தி வந்திருக்கிறார்கள். பொதுவாகச் சங்கீத அகாடமியார், கர்நாடக சங்கீதத்தின் தூய தன்மையை, சாஸ்திரீயமான முறையைக் காப்பாற்றி வரப் பெரு முயற்சிகள் எடுத்து வந்திருக்கிறார்கள்.

இந்தச் சங்கீத வித்வத் சபையின் முப்பத்தொராவது ஆண்டு விழா சென்னை பி. எஸ். ஹைஸ்கூலில் அமைக்கப்பட்டுள்ள விசாலமான பந்தலில் டிசம்பர் 21 ம் தேதி கோலாகலமாக ஆரம்பமாகிறது.

இவ் வருஷத்தின் விழாத் தலைவர் பிடில் வித்வான் ஸ்ரீ டி. சௌடய்யா. இவர் ஏழு தந்திகள் கொண்ட வயலினை வைத்துக் கொண்டு கம்பீரமாக வாசிப்பவர். அபாரமான வேலைமானங்கள் எல்லாம் காண்பிப்பவர். எனினும் "ஏழு தந்தி கொண்ட பிடிலைக் கையாளுவது சம்பிரதாயத்துக்கு விரோதம்!" என்று பல வருஷங்கள் இவரை வித்வத் சபைக்கு அழைக்காமலே இருந்தார்கள். ஆனால் ஸ்ரீ சௌடய்யா, அதற்காகத் தமது வழியை விட்டுக் கொடுக்கவில்லை. பூரண கலைஞராக, தாம் கண்ட வழியை விடாப்பிடியாகப் பின்பற்றி வந்தார்; அதன்காரணமாகஇப்பொழுது "சௌடய்யா பாணி!" என்று பொதுமக்கள் அவர் முறையைக் குதூகலமாக ஏற்றுக்கொண்டு விட்டனர். வித்வத் சபையாரும் ஸ்ரீ சௌடய்யாவைச் சங்கீத கலாநிதி என்று கௌரவப் பட்டமளித்துப் பாராட்ட முன்வந்துவிட்டனர்.

இது வித்வத் சபையின் பரந்த மனப்பான்மையையும், ஸ்ரீ சௌடய்யா அவர்களின் கலைப் பண்பையும் நன்கு விளக்குகிறது!



வித்வான் ஸ்ரீ சௌடய்யா

**ம**ற்றொரு நல்ல செய்தி. அரும் கலை விநோதர் மைசூர் ராஜ்ய கவர்னர் ஸ்ரீ ஜெய சாமராஜ உடையார் அவர்கள் இவ் வருஷத்திய அகாடமி விழாவை ஆரம்பித்து வைக்கிறார். மைசூர் மகாராஜா அவர்களின் உள்ளம் ஆண்டவன் நினைவில் தோய்ந்த உள்ளம், சங்கீதக் கலையில் தோய்ந்த உள்ளம். அவர் சொந்தமாகவே பல சாகித்தியங்கள் இயற்றிச் சங்கீதக் கலைக்கு மிகச் சிறந்த தொண்டு புரிந்து வருகிறார். இவர் இவ்வருஷத்திய சங்கீத அகாடமியின் ஆண்டு விழாவைத் திறந்து வைத்துச் சிறப்பிப்பது எவ்வளவு பொருத்தம்!

இப்படி ஆரம்பமாகும் அகாடமியின் சங்கீத விழாவில் அமெச்சூர்களுக்கு இவ்வருஷம் அதிக வாய்ப்பு அளித்திருக்கிறார்கள். பிற்பகல் இரண்டரை முதல் மூன்றரை வரை ஒரு நிகழ்ச்சியும் மூன்றரை முதல் ஐந்து வரை ஒரு நிகழ்ச்சியும் ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

இத்தகைய அருங்கலை விழாவைத் துவக்கி வைக்கும் கலாரஸிகரான மைசூர் மகாராஜா இவ்விதழ் அட்டையை அலங்கரிக்கிறார்.

# அருள் வாக்கு

'பரமசிவன் தலையில் கங்கையையும், சந்திரனையும் தரித்திருக்கிறார். கங்கை நீர், சந்திரக் கிரணம் இரண்டும் குளுமையானவை. அவரது கைகளிலும், கால்களிலும், கழுத்தைச் சுற்றியும் ஜில் என்றிருக்கும் பாம்புகள் சுற்றியிருக்கின்றன. அவரது இடது பாகத்தில் பார்வதி இருக்கிறாள். அவள் பனி மயமான ஹிமய பர்வதத்தினின்றும் உதித்தவள். எல்லோரும் லோக மாதாவின் குழந்தைகளாதலின், அவர்களது அல்லல்களைக் கண்டு அவளது தாய் நெஞ்சம் உருகுகிறது.

குளுமை யுண்டாக்கும் இவ்வளவும் போதாதென்று, சிவனுக்குக் குளிர் மிகுந்த மார்கழி மாதத்தில் தினசரி விடியற்காலையில் குளிர்ந்த நீரும், பாலும் அபிஷேகம் செய்யப்படுகிறது. மழைபோல் பனி பெய்யும் குளிர்ந்த வேளை இது. இதுவும் போதாதென்று சிவனது சரீரம் முழுவதும் குளுமையான சந்தனம் பூசப்பட்டிருக்கிறது. இதை நினைத்து பக்திமயமான ஒரு கவிஞர் சிவனைப் பார்த்துக் கேட்கிறார்: 'தங்கள் சரீரத்திலும் இவ்வளவு குளுமை; வெளியிலிருந்து தங்களிடம் வந்து சேர்வதிலும் இவ்வளவு குளுமை! இந்தக் கடுமையான குளிரைத் தங்களால் எப்படித் தாங்க முடிகிறது?'

அந்த பக்தரே அதற்குப் பதிலும் சொல்லுகிறார்: 'தங்களுக்குத் தெரியாது அதன் மர்மம், பிரபுவே! அது எனக்குத்தான் தெரியும். இதுதான் அது. கவலைகளாலும், துக்கங்களாலும் கொதித்துப் போய்க் கிடக்கும் எனது ஹிருதய குகைக்குள்ளே தாங்கள் நிரந்தரமாக வாசம் செய்கின்றீர்கள். என் ஹிருதயத்திலிருக்கும் கொதிப்பைச் சகித்துக் கொள்ளத் தங்களுக்கு இவ்வளவு குளுமையுண்டாக்கும் சாதனங்கள் எல்லாம் அவசியம்தான்.'

இதன் படிப்பினை யாதெனில் நமது துக்கங்கள், கவலைகள் எல்லாம் நீங்க வேண்டுமென்றால், நாம் சிரத்தையுடன், பக்தியுடன் சிவனைப் பூஜித்து, இந்தக் குளிர்ந்த பொருள்களைக் கொண்டு அவருக்கு அபிஷேகம் செய்ய வேண்டும் என்பதுதான். நமது ஹிருதயத்தில் அமர்ந்துள்ள ஈச்வரனே வெளியில் லிங்க ரூபமாகத் தென்படுகிறார். அந்த லிங்கம் அபிஷேகத்தால் குளிர்ந்தால் அந்தக் குளுமை நமது ஹிருதயத்திலுள்ள ஈச்வரனை அடைகிறது. அவருடைய அனுக்கிரகத்தால் நமது துயரங்களெல்லாம் நீங்கி விடுகின்றன.

ஸ்ரீ சங்கராச்சாரியார், காஞ்சி காமகோடி பீடம்

# திருப்பணிக்கு உதவுங்கள்

கொழும்பு, டிசம்பர், 13உ.

இலங்கை ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் கட்டட நிதிக்கு உதவி புரிவதற்காகக் கோகில கான இசைவாணி ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி இவ்வாரம் இலங்கைக்கு விஜயம் செய்கிறார். அவரும் அவரது கணவர் ஸ்ரீ சதாசிவம் அவர்களும் இம்மாதம் 20ந் தேதி வெள்ளிக்கிழமை பிற்பகல் விமான மார்க்கமாகக் கொழும்பு வந்து சேருகிறார்கள். ஸ்ரீமதி எம். எஸ். பல ஆண்டுகளுக்குப் பின்னர் இங்கு வருவதினால் அவரை வரவேற்கவும் அவரது தேவகானத்தைக் கேட்டு ரஸிக்கவும் ஈழத் தமிழ்ப் பெரு மக்கள் எவ்வளவு உற்சாகத்துடனும் ஆவலுடனும் இருக்கிறார்களென்பதைச் சொல்லத் தேவையில்லை. கொழும்பில் இரண்டு கச்சேரிகளும் கலை வளர்க்கும் யாழ்ப்பாணத்தில் ஒரு கச்சேரியும் நடத்த ஏற்பாடாகியிருக்கிறது. ஸ்ரீமதி எம். எஸ். ஸுக்கு நீண்ட காலமாகவே இலங்கைக்கு வர வேண்டுமென்று ஆசை. ஆனால் ஒவ்வொரு முறை அவர் இலங்கை வர நினைக்கும் பொழுதெல்லாம் ஏதாவது



ஸ்ரீமதி எம். எஸ். எஸ். — ஸ்ரீ சதாசிவம்

ஒரு இடையூறு குறுக்கிட்டு வந்துள்ளது. இம் முறையும் இலங்கையில் வேலைநிறுத்தங்கள் பரவிக் கிட்டத்தட்ட அராஜக நிலைமை உருவாகிக் கொண்டிருந்தபடியாலும் ஸ்ரீமதி எம். எஸ். ஸின் விஜயம் மீண்டும் ரத்தாகி விடுமோ என்று பலரும் அஞ்சிக் கொண்டிருந்தார்கள். அவரைத் தருவிப்பது ஒரு ஆத்மீக ஸ்தாபனமாகையினால் தெய்வத் திருவருள் அதன் பக்கத்திலிருந்து உதவியது. நாட்டைச் சீரழித்து வந்த வேலை நிறுத்தப் பூசல்களெல்லாம் மறைந்து விட்டதுடன் டிஸம்பர் 16ம் தேதி ஆரம்பமாக விருந்த தொடர் வேலைநிறுத்தங்களும் நடக்கா தென்பதற்கான அறிகுறிகள் காணப் படுகின்றன. பல ஆண்டுகளுக்குப் பிறகு அவரது இன்னிசையைக் கேட்டு மகிழும் சந்தர்ப்பத்தை ஏற்படுத்திக் கொடுத்ததற்காக ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் தலைவர் ஸ்ரீ ஜத் சுவாமி பிரேமாத்மானந்தஜி அவர்களுக்கு இலங்கைத் தமிழ் மக்கள் பெரிதும் கடமைப் பட்டிருக்கிறார்கள்.

இலங்கையில் ராமகிருஷ்ண மடம் ஆற்றி வரும் தொண்டைப் பற்றி அதிகம் சொல்ல வேண்டியதில்லை. இலங்கையின் சிறப்புக்கும் செல்வாக்குக்கும் கல்விக்கும் ஆஸ்திகத்துக்கும் ராமகிருஷ்ண மடம் ஆற்றும் பணியைப் பற்றி ஈழ நாட்டு மக்கள் எல்லாரும் அறிவார்கள். 'கல்விக்கு ஆற்றும் தொண்டே கடவுள் தொண்டு' என்னும் சீரிய கொள்கையைப் பின்பற்றி வருபவர் சுவாமி பிரேமாத்மானந்தஜி. இலங்கை ராமகிருஷ்ணமடத்தின் புனிதமான தொண்டில் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு மேல் ஈடுபட்டு உழைத்து வந்த சுவாமி சித்தாத்மானந்தா அவர்களும் இப்பொழுது சுவாமி பிரேமாத்மானந்தஜி அவர்களுடன் இருப்பது பெரிய பாக்கியம்தான்.

ஈழ நாட்டு மக்கள் எல்லாரும் மிகுந்த குதூகலத்துடன் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் சங்கீதக் கச்சேரியில் கலந்து கொண்டு ராமகிருஷ்ண மடத்தின் உதவி நிதிக்கு உதவியளிப்பார்கள் என்று நம்புகிறோம். இந்தக் கச்சேரிக்கு விஜயம் செய்வதன்மூலம் இலங்கை மக்கள் இரண்டுவித பலனைப் பெறலாம். கிடைத்தற்கு அரிய இனிய கானத்தைக் கேட்டு மகிழ்வதுடன் ஒரு உத்தமத் திருப்பணிக்கு உதவி செய்த பெரும் புண்ணியத்தையும் பெறலாம்.

கல்கி காரியாலயத்தி லிருந்து பலர் பல முறை இலங்கைக்கு வந்து போயிருந்த பொழுதிலும் அதன் அதிபரும் ஆசிரியருமான ஸ்ரீ சதாசிவம் அவர்கள் இங்கு வந்து எவ்வளவோ ஆண்டுகளாயின. கல்கியின் பல்லாயிரக்கணக்கான அபிமானிகளுடன் நேரில் அளவளாவி அவர்களது விருப்பு வெறுப்புகளை நேரில் அறிந்து கொள்ளுவதற்காக ஸ்ரீ சதாசிவம் இப்பொழுது இலங்கைக்கு வருகிறார். கொழும்பு, கண்டி, யாழ்ப்பாணம் ஆகியமூன்று இடங்களிலும் கல்கி அபிமானிகளையும் கல்கி ஏஜண்டுகளையும் அவர் சந்தித்துப் பேசுவதற்கு ஏற்பாடாகி யிருக்கிறது.

* * *

சங்கீதத்தைப் பற்றி எழுதும்பொழுது பாட்டுக்கு ஒரு புலவன் பாரதி என்று தமிழ் கூறும் நல்லுலகம் போற்றும் அமரகவியின் ஞாபகம் நமக்கு வருகிறது. அமரகவி பாரதியாரின் ஜயந்தி விழாவைப் பாரதி இளைஞர் சங்கத்தினர் எப்பொழுதும்போல இவ்வருடமும் ஏகத் தடபுடலாகக் கொண்டாடி விட்டார்கள். அவர்கள் நடத்திய மூன்று நாள் கூட்டங்களும் தமிழ் விழாவாகப் பரிமளித்தன. விழாவின் பொழுது அமரர் கல்கியின் திருவுருவப்படமும் திறந்து வைக்கப்பட்டு, அஞ்சலி செலுத்தப்பட்டது. — ரஜனி.

# வள்ளுவர் வாசகம்

## ராஜாஜி

### 9

பெறுமவற்றுள் யாம்அறிவது
இல்லை அறிவுஅறிந்த
மக்கள்பேறு அல்ல
பிற.

இல்லற வாழ்க்கையானது, அதன் முழுப் பண்பை எப்போது அடையும்? நல்ல மக்களைப் பெற்றால்தான் அடையும். சாதாரண நடையை மாற்றி, "யாம் அறிவது இல்லை" என்று சாட்சி முத்திரை போட்டுப் பாடியிருப்பது குறிப்பிடத் தக்கது. "யாமறிந்த மொழிகளிலே" என்று பாரதியார் பாடியிருப்பதும் இப்படித்தான்.

ஒருவன் அடையக் கூடிய எல்லாப் பாக்கியங்களுக்குள்ளும் பெரும் பாக்கியமாகும், தான் பெற்ற மக்கள் அறிவடைந்து வளர்வதைப் பார்க்கும் மகிழ்ச்சி. இதற்குச் சமானமான வேறு எந்த இன்பமும் ஒருவன் அடையக்கூடும் என்று எனக்குத் தெரியவில்லை என்கிறார் முனிவர். மக்களைப் பெற்றால் மட்டும் போதாது. அவர்கள் எல்லா விதத்திலும் அறிவை அடைந்து நல்ல மக்களாக விளங்க வேண்டும். இல்லாவிடில் மக்கள் துன்பத்துக்குத் தான் காரணமாவார்கள். அதைக் குறிப்பாகச் சொல்லியிருக்கிறார்.

இல்லற வாழ்க்கை என்பது தன் சுகத்துக்கு மட்டும் அல்ல. அதன் பயன் சமூகத்துக்கு உண்டாக வேண்டும். அதனாலேதான் மக்கட்பேற்றுக்கு இல்லற வாழ்க்கையில் சிறப்பான இடம். நல்ல மக்களைச் சமூகத்துக்குத் தந்துவிட்டு, இல்லறம் நடத்தியவன் மறைகிறான். அவர்கள் "அறிவு அறிந்தவர்"களாக இருக்க வேண்டும். 'அறிவு' என்பது கல்வி மட்டுமல்ல, ஞானம்.

தான் பெற்ற குழந்தைகளோடு குடும்ப வாழ்க்கையில் ஒருவன் காணும் இன்பத்தைச் சித்திரிக்கிறார்.

அமிழ்தினும் ஆற்ற
இனிதேதம் மக்கள்
சிறுகை அளாவிய
கூழ்.

செல்வ நிலையில் தன் வாழ்க்கை எவ்வளவு தாழ்ந்ததாயினும், உண்பது கூழாயினும், தன் மக்களின் சிறு கை அந்தக் கூழில் அளாவியதனால், அந்தக் கஞ்சியானது அமிழ்தத்தைவிட மிக இனிதே ஆகும். அமிழ்தத்துக்கு மேல் இனிப்புக்குச்சொல்லக் கூடிய பொருள் வேறு இல்லை!

* * *

குழல்இனிது யாழ்இனிது
என்ப தம் மக்கள்
மழலைச்சொல் கேளாத
வர்.

தாம் பெற்ற மக்களுடைய மழலைச் சொல்லைக் கேட்டு அந்த இன்பத்தை அனுபவித்த தாயும் தகப்பனும் அதை விட்டுக் குழலையும் யாழையும் கேட்கப் போகமாட்டார்கள். அவற்றின் இசையொலியில் அதிக இன்பத்தைக் காணமாட்டார்கள். பேசப் பக்குவம் அடையாத குழந்தைகளின் மழலைச் சொல் பெற்றோருக்குத் தரும் இன்பத்தை, இரண்டே வரிகளில் எவ்வளவு அழகாகப் பாடியிருக்கிறார்! சிறந்த வாத்தியங்களின் ரஸம் கண்டு, மழலைச் சொல்லில் ரஸம் காணாதவர் மடையர்கள் என்கிறார். குழந்தைகளைப் பெறாமல் அவர்கள் மழலைச் சொல்லைக் கேட்கும் பாக்கியம் இல்லாதவர்களைக் கண்டு, முனிவர் இரங்குகிறார். மழலைச் சொல்லில் உள்ள இசையைப் பெற்றோர்கள் காண்பது போல் மற்றவர்கள் காணமாட்டார்கள். ஏன் இதை இவ்வளவு அனுபவிக்கிறார்கள் என்றுகூட வியப்பார்கள். குழந்தையைப் பெற்ற தாயும் தகப்பனும், பேச முயலும் தம் குழந்தையின் மழலைச் சொல்லைக் கேட்டு அடையும் இன்பத்தை முனிவர் உணர்ந்து, அதை வாத்தியங்களின் இன்னோசைக்கு ஒப்பிட்டுச் சித்திரிக்கிறார். இந்த இன்பம் அவற்றில் இல்லை என்றும் சொல்லி விடுகிறார்!




பொருளாதார ஏற்பாடுகளின் முதல் நோக்கம் மக்களின் உணவு எப்பொழுதும் குறைவின்றி அனைவருக்கும் கிடைக்கச் செய்வதே. 'தனி ஒருவனுக்கு உணவில்லை எனின் ஜகத்தினை அழித்திடுவோம்' என்று பாரதியார் ஆவேசத்துடன் கூறினார். நாட்டின் மக்கள் அனைவருக்கும் போதிய உணவு கிடைக்கும் தேசங்கள் உலகில் இப்பொழுது பல இருக்கின்றன. பொதுவாக, அமெரிக்கா கண்டத்தில் உணவு மிகுந்திருக்கிறது. ஆஸ்திரேலியாவிலும் அப்படியே. இதற்கு மாறாக ஆசியாவில் பெரும் பாகத்திலும், ஆப்பிரிக்காவில் பல பாகங்களிலும், உணவுக்காகக் கஷ்டப்படும் ஜனங்கள் கோடிக் கணக்கில் இருக்கின்றனர். ஐரோப்பிய கண்டத்தில் சில இடங்களில் போதிய உணவு உற்பத்தியாகாத போதிலும் அதிகக் கஷ்டமில்லை. இயந்திரத் தொழில்கள் மிகுந்திருப்பதால், அவைகளால் பெருவாரியாக உற்பத்தி செய்யப்படும் சாமான்களைக் கொண்டு வேண்டிய உணவுப் பொருள்கள் வாங்கிக் கொள்வதற்கு வசதிகள் இருக்கின்றன. யுத்த காலங்களில் மட்டும் ஐரோப்பிய நாடுகளில் மக்களுக்கு உணவுக் கவலை ஏற்படும்.

மனிதனுடைய உடல் மிகவும் சூக்ஷ்மமான யந்திரம். மூச்சு விட்டு, உயிர் பிழைத்திருப்பதற்குக்கூட ஓயாமல் சக்தியைச் செலவிட வேண்டும். ஆதலால் இழக்கும் சக்தியை அவ்வப்போது நிறைவு செய்யாதிருந்தால் உடல் நலன் கெட்டு முடிவில் நசித்து விடும்; இவ்வாறு உடல் நலனுக்குத் தேவைப்படும் சக்தியை காலரி (Calory) என்னும் அளவினால் கணக்கிடப்படுகிறது. 1 கன சென்டிமீட்டர் ஜலத்தை 1 டிகிரி (சென்டிகிரேட்) உஷ்ணமாக்கவேண்டிய சக்தியை ஒரு காலரி என்று கணக்கிட்டு, ஒரு மனிதன் உட்கொள்ளும் உணவில் எவ்வளவு காலரி அளவு சக்தியடங்கியிருக்கிறதென்று கணக்கெடுக்கப்படுகிறது. உலகில் சில முக்கிய நாடுகளின் மக்கள் தினசரி உட்கொள்ளும் உணவின் சராசரி காலரி அளவு பின்வருமாறு :

| | 1954-55 விகிதம் காலரிகள் |
|---|---|
| அமெரிக்க ஐக்கிய நாடு | 3090 |
| ஆஸ்திரேலியா | 3040 |
| பிரிட்டன் | 3230 |
| பிரான்ஸ் | 2785 |
| ஜப்பான் | 2165 |
| பாரதம் | 1840 |

இரண்டாவது உலக மகா யுத்தத்துக்கு முன் பாரத மக்களின் சராசரி காலரி அளவு 1970 ஆக இருந்தது. நமது நாடு உஷ்ணப் பிரதேசமாக இருப்பதால் குளிர் மிகுந்த நாடுகளைவிடக் குறைவான காலரிகள் போதும். ஆயினும் தற்போதைய சராசரி மிகவும் குறைவு. வயது வந்த எந்த இந்தியனுக்கும் தினசரி இரண்டாயிரத்துக்குக் குறையாத காலரி கொண்ட உணவு கிடைக்கும்பொழுதே நாம் ஓரளவு திருப்தி அடையக் கூடும்.

மனித உணவில் நான்கு முக்கிய அம்சங்கள் இருக்கின்றன. அவைகளை உழைப்புச் சத்து (கார்போ ஹைட்ரேட்); ஜீவசத்து (ப்ரோடீன்); கொழுப்புச் சத்து(பாட்),நோய் தடுப்புச் சத்து (வைடமின்) என்று வகுக்கலாம். தானிய வகைகள் உழைப்புச் சத்தை மிகுதியாக உடைய முக்கிய பொருள்கள். பருப்பு வகைகள், பால், முட்டை, மாமிசம், மீன் முதலியவற்றிலிருந்து ஜீவசத்தை உடல் கிரகித்துக் கொள்கிறது. நெய், எண்ணெய், மாமிசம் முதலியவை கொழுப்புக்கு ஆதாரமானவை. காய்கறிகள், பழங்கள், இலைகள், மீன் எண்ணெய் முதலியவற்றிலிருந்து தேகத்துக்கு இன்றியமையாத வைடமின்கள் கிடைக்கின்றன. வைடமின்களின் அவசியம் சமீப காலத்தில் தான் கண்டு பிடிக்கப்பட்டது. அவை இல்லாவிடில், நோய்களைத் தடுக்கக் கூடிய சக்தியை நமது ரத்தம் இழந்து விடுகிறது. குறு வயிறு, கால் கைகள் வீம்புதல், வயிற்றுக் கோளாறுகள் முதலிய நோய்கள் வைடமின் குறைவால் ஏற்படுகின்றன. எலுமிச்சம் பழம், தக்காளிப் பழம், சாத்துக்குடிப் பழம், கீரைகள், பசும்பால், காட்லிவர் ஆயில் முதலியவைகளில் நமக்குச் சாதாரணமாக வேண்டிய வைடமின்கள் கிடைத்துவிடும்.

ஆதி மனிதன் பெரும்பாலும் மாமிசத்தைப் புசித்து வந்தான் என்பதற்குப் போதிய ஆதாரங்கள் இருக்கின்றன. கால்நடைகளைப் போல் புல் பூண்டுகளைத் தின்று ஜீரணம் செய்து கொள்ள அவனால் முடியாது. குரங்குகளைப் போல் எளிதில் மரங்களில் ஏறிக் காய்கனிகளைத் தின்றும் பிழைக்க முடியாது. மரங்களிலிருந்து உதிரும் பழங்களைக் கொண்டும், புல்லரிசி முதலிய காட்டுப் பயிர்களின் பலன்களைக் கொண்டும் ஓரளவு வயிற்றை வளர்த்திருக்கலாம். ஆனால் காட்டு மிருகங்களைக் கொன்று தின்பதே சுலபமான வழியாக இருந்திருக்கும். பின்னர் ஆடுமாடுகளைப் பிடித்து வளர்க்கும் பழக்கம் ஏற்பட்டது. மந்தைகளைப் புல்லிருக்கும் இடங்களில் மேய்ப்பதும், அவற்றிலிருந்து கிடைக்கும் பால், நெய், மாமிசம், ரோமம் முதலியவற்றைக் கொண்டு ஜீவிப்பதும் சாதாரண வாழ்க்கை ஆயிற்று. விவசாயம் தோன்றிய பிறகே தானியமும், காய்கிழங்குகளும் மனித உணவின் முக்கிய அம்சங்களாயின. இன்றும் இந்தியாவைத் தவிர இதர நாடுகளில் எல்லா மக்களும் மாமிசம் புசிப்பவர்க




ளாகத்தான் இருக்கின்றனர்; பாரதத்திலும் எவ்வித மாமிச உணவையும் ஏற்காத மக்கள் சிறுபான்மையரே. உணவில் தானியம் காய்கறிகளின் பாகமும், மாமிசம், மீன் முதலிய வற்றின் பாகமும் நாட்டுக்கு நாடு வித்தியாசமாக இருக்கும். பாரதத்தில் பெரும்பான்மையோர் மாமிசத்தைப் புசிக்கக் கூடியவர்களாக இருப்பினும் உண்மையில் அவர்களுடைய உணவின் முக்கிய பாகம் தானியங்கள், பருப்புகள், காய்கறி, பழங்கள், பால், நெய், எண்ணெய் முதலியவைகளே. கடற்கரை ஓரங்களில் வசிப்பவர்கள் மீன் உணவுகளை உபயோகிக்கின்றனர். மாமிசம் புசிப்போர் பெரும்பாலும் ஆட்டுமாமிசத்தையே உண்ணுகின்றனர். கோழி, வாத்து முட்டைகளை நடுத்தர வகுப்பினர் விரும்புகின்றனர்.

ஒரு இந்தியன் ஆண்டில் உட்கொள்ளும் உணவுக்கும் இதர நாட்டு மக்கள் புசிக்கும் ஆகாரத்துக்கும் உள்ள தாரதம்மியம் பின் வரும் புள்ளி விவரங்களிலிருந்து புலப்படும்.

ஒரு வருஷத்தின் அளவு கிலோகிராமில் (2.2 ராத்தல்)

| | தானியம் | பருப்பு கொட்டை | மாமிசம் | பால் பண்டங்கள் | எண்ணெய் முதலிய கொழுப்புச்சத்து |
|---|---|---|---|---|---|
| அமெரிக்க ஐக்கிய நாடு | 72 | 7 | 37 | 240 | 22 |
| ஆஸ்திரேலியா | 94 | 4 | 108 | 175 | 19 |
| பிரிட்டன் | 92 | 6 | 57 | 210 | 23 |
| பிரான்ஸ் | 109 | 6 | 71 | 160 | 15 |
| மேற்கு ஜெர்மனி | 98 | 3 | 42 | 170 | 24 |
| ஜப்பான் | 149 | 5 | 3 | 10 | 2 |
| சைனா | 172 | 25 | 13 | ... | 6 |
| பாரதம் | 118 | 23 | 1 | 47 | 3 |

இந்திய உணவில் மாமிசப் பொருள்களின் அளவு மிகவும் குறைவு என்பது இந்த அட்டவணையிலிருந்து விளங்கும். பால் பண்டங்களில் சைனா, ஜப்பான் முதலிய ஆசிய நாடுகளைவிட இந்நாட்டின் நிலைமை மேலாக இருந்தாலும், அமெரிக்கா, ஐரோப்பிய நாடுகளைக் காட்டிலும் மிகவும் மோசமே இருக்கிறது. எண்ணெய் முதலிய கொழுப்புச் சத்துக்களும் நமது மக்களுக்குப் போதாது.

சராசரிக் கணக்கை வைத்துக் கொண்டு ஒரு சமூகத்தின் நிலையை அளப்பதில் அபாயமுண்டு. சராசரி என்பதிலிருந்தே அதற்கு மேலும் கீழும் பலர் இருப்பார்களென்று தெளிவாகிறது. சராசரி, அவசியத்தைக் காட்டிலும் அதிகமாக இருந்தால், சமூகத்திலுள்ள அனைவருக்கும் தேவையான பொருள்கள் கிடைக்கின்றனவென்று ஊகிக்கலாம். சராசரியும், அவசியமும் ஒரே அளவில் இருந்தால், சராசரிக்குக் குறைவான உணவில் மக்களில் ஒரு பாகம் வசிப்பார்கள். அவர்களுக்கு அவசியமான உணவு கிடைப்பதில்லை என்று நிச்சயிக்கலாம். இதுவே பாரதத்தின் தற்போதைய நிலை. மேற்கண்ட சராசரிப்படி எல்லா இந்தியருக்கும் உணவு கிடைத்தால் சுமாராக வாழக் கூடும். இது சாத்தியமில்லை. ஆதலால், லட்சக்கணக்கான குடும்பங்கள் எப்பொழுதும் போதிய உணவின்றிச் சதா பசியுடனும், புஷ்டிக் குறைவினால் ஏற்படும் வியாதிகளுக்குட்பட்டும் வாழ்கின்றன. சராசரி உயரக்கூடிய அளவில் நமது உணவு உற்பத்தியை அதிகரிக்க வேண்டியது நாட்டின் இன்றியமையாத கடமையாக இருக்கிறது. நாட்டின் ஜனத்தொகை ஆண்டுதோறும் சுமார் 80ல் 1 பங்கு விருத்தியடைகிறது. ஆதலால் தற்போதைய சராசரி குறையாமலிருப்பதற்கே இந்த அளவில் உணவு உற்பத்தி அதிகரிக்கப்பட வேண்டும். அதற்குமேல் விருத்தியாவதே நிலைமையைச் சீர்ப்படுத்த உதவும்.

பாரதத்தில் 1955—56ல் 3661 லக்ஷம் ஏக்கரா நிலத்தில் உணவுப் பொருள்கள் சாகுபடி செய்யப்பட்டன. மொத்த விளைவு 635·4 லக்ஷம் டன். முக்கிய பொருள்களின் விவரம் பின்வருமாறு:

| உணவுப்பொருள் | சாகுபடி நிலம் லக்ஷம் ஏக்கராக்கள் | உற்பத்தி லக்ஷம் டன்கள் |
|---|---|---|
| அரிசி | 763·5 | 254·7 |
| கோதுமை | 292·3 | 83·5 |
| ஜவார் (மக்காசோளம்) | 427·2 | 69·4 |
| கம்பு | 270·3 | 34·0 |
| சோளம் | 89·1 | 25·2 |
| கேழ்வரகு | 55·3 | 18.4 |
| சிறுதானியம் | 131·0 | 21·0 |
| பார்லி | 81·5 | 27·2 |
| கொத்துக்கடலை | 227·0 | 48·7 |
| துவரை | 57·6 | 18·1 |
| இதர பருப்புகள் | 264·4 | 35·1 |

உற்பத்தியாகும் எல்லாத் தானியங்களும் பாரத மக்களின் உணவுக்கு உதவுமென்று எண்ணலாகாது. ஒரு பாகம் விதைக்கு வைத்துவிட வேண்டும். சரியான சேமிப்பு இல்லாததால் சிறுபாகம் நஷ்டமாகிவிடும். மழை, காற்று, வெள்ளம், வறட்சி முதலியவற்றால் வருஷாந்திர உற்பத்தி ஏறி இறங்கிக்

கொண்டிருக்குமாதலால் எப்பொழுதும் நாட்டில் தானியம் கைவசம் இருப்பது இன்றியமையாததாகும். சமீப காலத்தின் அனுபவத்தை உதாரணமாக எடுத்துக் கொள்ளலாம்.

| வருஷம் | உணவு உற்பத்தி லக்ஷம் டன்கள் |
|---|---|
| 1952—53 | 582·7 |
| 1953—54 | 687·2 |
| 1954—55 | 666·0 |
| 1955—56 | 635·4 |

தவிர, நாட்டின் உணவு உற்பத்தி எல்லா ராஜ்யங்களிலும் ஒரே அளவில் இல்லை. ராஜ்ய வாரியாக 1955—56ல் உற்பத்தி பின்வருமாறு :

லக்ஷம் டன்கள்

| பிரதேசம் | அரிசி | கோதுமை | மொத்த தானியம் |
|---|---|---|---|
| ஆந்திரப் பிரதேசம் | 29·5 | 0·1 | 52·4 |
| அஸ்ஸாம் | 16·3 | ... | 16·4 |
| பீகார் | 25·5 | 4·1 | 35·9 |
| பம்பாய் | 14·0 | 6·7 | 61·8 |
| கேரளம் | 9·3 | ... | 9·4 |
| மத்தியப் பிரதேசம் | 28·7 | 13·6 | 58·4 |
| மதராஸ் | 25·3 | ... | 43·5 |
| மைசூர் | 10·9 | ·8 | 34·2 |
| ஒரிஸ்ஸா | 21·3 | ... | 22·2 |
| பஞ்சாப் | 2·0 | 17·1 | 28·8 |
| ராஜஸ்தான் | ·9 | 9·0 | 30·3 |
| உத்தரப்பிரதேசம் | 24·3 | 29·8 | 88·1 |
| மேற்கு வங்காளம் | 41·5 | ... | 42·6 |

சாதாரணமாக, கேரளம், சென்னை, வங்காளம் ராஜ்யங்களில் போதிய உணவு உற்பத்தி இல்லை. மத்தியப் பிரதேசம், ஒரிஸ்ஸா பஞ்சாப் பிரதேசங்களில் தேவைக்கு அதிக உற்பத்தி; மீதிப் பிரதேசங்களில் நல்ல வருஷங்களில் போதுமளவும், வெள்ளம், வறட்சி ஏற்பட்டால் உணவுக் குறைவும் உண்டாகின்றன.

உணவு உற்பத்தியை அதிகரிப்பதற்கு முக்கியமாக மூன்று வழிகள் உள்ளன. தரிசு நிலங்களைச் சாகுபடிக்குக் கொண்டு வரலாம். விவசாய முறைகளைச் சீர்திருத்தி உற்பத்தி விகிதத்தை விருத்தி செய்யலாம். நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்கிப் புஞ்சை நிலங்களை நன்செயாகச் செய்து அதன் மூலம் உற்பத்தியை அதிகரிக்கலாம். ஐந்தாண்டுத் திட்டங்களில் இம்மூன்று முறைகளும் கையாளப்பட்டு வருகின்றன. அவற்றைப் பற்றிச் சிந்திப்பது அவசியமாகும்.

1951—52 லிருந்து 1955—56 முடிய ஐந்து வருஷங்களில் சுமார் 260 லக்ஷம் ஏக்கரா விஸ்தீரணமுள்ள தரிசு நிலங்களில் உணவுப் பொருள்கள் சாகுபடிக்குக் கொண்டுவரப்பட்டன. பாரதத்தில் அவ்வித நிலம் 880 லக்ஷம் ஏக்கராக்கள் மீதி இருப்பதாகக் கணக்கிடப்பட்டிருக்கிறது. ஆனால் நல்ல நிலங்களெல்லாம் ஏற்கனவே சாகுபடி செய்யப்பட்டு விட்டபடியால், இப்போது நிலங்களைச் சாகுபடி செய்யச் செலவு அதிகமாகும். அவற்றின் உற்பத்தியாகும் தானியத்தை அதிக விலைக்கு விற்றால் தான் சாகுபடி லாபகரமாக இருக்கும். தானிய விலைகள் நாடு முழுதும் ஏறக்குறைய ஒரேவிதமாக இருக்குமாதலால், புதிய நிலங்களைச் சாகுபடி செய்வதால் ஜனங்களுக்கு உணவு அதிகமாக கிடைக்குமாயினும் அதன் விலையும் அதிகரித்து வரும். ஆதலால், இத்துறையில் மிகுந்த அபிவிருத்தியை எதிர்பார்க்க முடியாது.

நமது நாட்டில் உற்பத்தி விகிதம் மிகவும் குறைவு. ஒரு ஏக்கராவில் அரிசி 748 ராத்தலும், கோதுமை 641 ராத்தலும், புஞ்சை தானியங்கள் 750 ராத்தலும் தற்சமயம் அறுவடையாகின்றன. இதர நாடுகளில் இதைவிட இரண்டு மடங்கும், அதற்கு மேலும் அறுவடையாகின்றன. நல்ல மாசூலுக்குப் பொறுக்கிய விதை, உரம், தகுந்த கருவிகள், ஜலவசதிகள் தேவை.

நமது நாட்டில் பெரும் பகுதியான நிலம் சிறு குடியானவர்கள் வசம் இருக்கிறது; மெலிந்த உழவு மாடுகளையும், புராதனக் கலப்பைகளையும் வைத்துக் கொண்டு, ரசாயன உரங்களையும் விஞ்ஞான முறைகளையும் உபயோகிக்க வழியின்றிச் சாகுபடி செய்து வரும் வரையில் உற்பத்தி விகிதத்தை விருத்தி செய்வது சுலபமன்று. கூட்டுறவுச் சங்கங்கள் மூலம் விவசாயம் செய்யப்பட வேண்டும் என்று மத்திய சர்க்கார் தீர்மானம் செய்திருக்கின்றனர். ஆனால் அதை அமுல் செய்வது கிராமத்து ஜனங்களின் ஒத்துழைப்பைப் பொறுத்திருக்கிறது.

நீர்ப்பாசனத்தைப் பற்றி அடுத்த பகுதியில் ஆராயப்படும். இதை முடிப்பதற்கு முன், மேலே குறிப்பிடாத சில உணவுப் பொருள்களைப் பற்றி வாசகர்கள் அறிந்து கொள்வது அவசியமாகும்.

வெல்லம், சர்க்கரை இன்றியமையாத உணவுப் பொருள்களாகாவிட்டாலும், உணவுக்கு ருசி கொடுக்கும் முக்கிய பதார்த்தங்கள். அமெரிக்கா, ஆஸ்திரேலியா போன்ற நாடுகளில் தலைக்குச் சராசரி 100 ராத்தல் வருஷத்தில் சர்க்கரை சாப்பிடுகிறார்கள். இந்தியாவில் 25 ராத்தல் உட்கொள்ளப்படுகிறது. 45 லக்ஷம் ஏக்கராக்களில் கரும்பு உற்பத்தியாகிச் சுமார் 59 லக்ஷம் டன் வெல்லம் செய்யப்படுகிறது. இதில் மூன்றில் ஒரு பங்கு வெளுப்புச் சர்க்கரையாக்கப்படுகிறது.

வருஷம் 56 லக்ஷம் டன் எண்ணெய் விதைகள். 295 லக்ஷம் ஏக்கராக்களிலிருந்து கிடைக்கின்றன.

மிளகாய் 15 லக்ஷம் ஏக்கரா, புகையிலை 9 லக்ஷம் ஏக்கரா, மிளகு 27,000 ஏக்கராவில் சாகுபடியாகின்றன.

மணிலாக் கொட்டை முக்கியமானது. 126 லக்ஷம் ஏக்கராக்களில் 38 லக்ஷம் டன் கொட்டை உற்பத்தியாகிறது. தென்னம் தோப்புகளின் விஸ்தீரணம் 16 லக்ஷம் ஏக்கரா, தேயிலைத் தோட்டங்கள் 8 லக்ஷம். காப்பிக் கொட்டை 2.3 லக்ஷம் ஏக்கராக்களில் பயிராகிறது.

உணவுப் பொருள்களைத் தவிர, இதர முக்கிய விவசாயப் பண்டங்கள் பருத்தியும் சணலும். பருத்தி 202 லக்ஷம் ஏக்கராக்களிலும், சணல் 16 லக்ஷம் ஏக்கராக்களிலும் பயிர் செய்யப்படுகின்றன. இந்தியாவின் தொழிலுக்கும், வெளிநாட்டு வியாபாரத்துக்கும் இவை முக்கியமானவை.

"கல்கி" பத்திரிகையின் ராஜாஜி ஜெயந்தி இதழ் வெளியானதிலிருந்து, தமிழ் நாட்டில் பல ஊர்களிலும் ராஜாஜியின் ஜெயந்தி விழா வெகு குதூகலமாகக் கொண்டாடி வருகிறார்கள். அந்தச் செய்திகள் நமக்குத் தினம் வந்த வண்ணமிருக்கின்றன. ராஜாஜி ஜெயந்தி மலரைப் பாராட்டியும் ஏராளமான கடிதங்கள் வந்துள்ளன. அவற்றில் சிலவற்றை இங்கே தருகிறோம். —ஆசிரியர்

# எங்கும் குதூகலம்

இன்று எங்கள் பள்ளியில் கனம் ராஜாஜி பிறந்த தினக்கொண்டாட்டம் திரு எழிலரசன் தலைமையில் நடைபெற்றது. அவ்வமயம் ராஜாஜியும் அவர் சேவையும் பற்றித் திரு அ. தமிழரசன் சொற்பொழிவாற்றினார். பிறகு பிள்ளைகளுக்கு இன்சுவை வழங்கப்பட்டது. நாட்டு வாழ்த்துடன் கூட்டம் முடிவுற்றது.

பாத்தம்பட்டி
8—12—57

இ. அ. ரத்தினசாமி

★

வெள்ளியன் விடுதியில் 8-12-57 யன்று கொண்டாடப்பட்டது. அவ்வமயம் தோழர் இரா. தமிழரசன், மு. கரிகாலன் முதலியோர் ராஜாஜியின் தொண்டு என்பது பற்றிச் சொற்பொழிவாற்றினார்கள். குழந்தைகளின் கதம்ப நிகழ்ச்சிகள் இடம் பெற்றன. நாட்டு வாழ்த்துடன் விழா முடிவுற்றது.

இரா. தமிழரசன்

★

சக்கரவர்த்தி திரு இராஜகோபாலாச்சாரியார் அவர்கள் பிறந்த தின நன்னாளை இவ்வூர் கழக உயர்நிலைப் பள்ளியில் ஜனாப் எஸ். எஸ். கல்தான் முகம்மது அவர்களின் தலைமையில் வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. அவ்வமயம் ஆசிரியர்கள் ராஜாஜி அவர்களின் தொண்டு என்பது பற்றி நீண்ட சொற்பொழிவாற்றினார்கள். புலவர் க. இராமலிங்கம் கூட்டத்துக்கு நன்றி கூறினார்.

ஆலங்குடி
8-12-57

கோ. சீனிவாசன்

[இவை தவிர கல்லாலங்குடி, மேலாத்தூர், கரையப்பட்டி, மேலக்கோட்டை, சிக்கப்பட்டி முதலிய பல ஊர்களில் ராஜாஜி ஜெயந்தி விழா கொண்டாடியிருப்பதாகச் செய்திகள் வந்துள்ளன. —ஆசிரியர்]

★

மேதை 'ராஜாஜி மலர்' மிக நன்றாக உள்ளது. பல சுவையான விஷயங்களும், புதுச் செய்திகளும், திரு ம. பொ. சி. அவர்களின் கட்டுரையும் மலரில் மணத்தைப் பரப்புகின்றன. மலரை வெளியிட்டதற்கு என் பாராட்டுதல்கள்.

புதுப்பேட்டை
9—12—57

சொ. விமணன்

★

நெடுங்காலமாகக் கல்கி படித்து வரும் நேயர்களில் நான் ஒருவன்; சென்ற 8-12-57 இதழை "ராஜாஜி ஜெயந்தி இதழாக" வெளியிட்ட தங்களை என்னால் பாராட்டாமல் இருக்க முடியவில்லை. தமிழ் நாட்டின் தவப் புதல்வர் ராஜாஜியைத் தமிழ் நாட்டின் முன்னணிப் பத்திரிகை 'கல்கி' பாராட்டுவது முற்றிலும் பொருத்தமே. இதை நான் ஒரு பொக்கிஷமாகவே வைத்துப் பாதுகாத்து வரப் போகிறேன். ஆசிரியர்களாகிய எங்களைப் போன்றோருக்குக் கல்கி ஒரு வரப்பிரசாதமாகவே திகழ்ந்து வருகிறது.

பறக்கை
9—12—57

இ. முருகன்

★

ராஜாஜி ஜெயந்தி இதழ் மிக அற்புதம். ம. பொ. சி. அவர்களின் "உலகுக்கு ஒரு மேதை"யைப் படித்தவுடன் என் உள்ளம் பூரிப்படைந்தது. நான் போற்றிவரும் யோகியைப் பற்றி, உள்ளன்போடு எழுதி இருக்கிறார். அன்னாருக்கு நன்றி. டாக்டர் மோனிகா பெல்டன், ஒரு கம்யூனிஸ்ட் ராஜாஜியைப் பற்றி கொண்டுள்ள அபிப்பிராயத்தை எழுதி இருப்பதைப் படித்தவுடன், ஸ்ரீ நாகிரெட்டி ஆந்திர சட்டசபையில் ராஜாஜி அவர்களைப் பாராட்டிச் சொன்ன வார்த்தைகள் ஞாபகத்துக்கு வருகின்றன.

ஜபல்பூர்
7—12—57

பி. எஸ். சீதாராமன்

★

கருத்துக்கும் கண்களுக்கும் களிப்பைத் தந்து, நறுமணம் மிக்க அழகு மலராக 8-12-57 இதழ் பூத்தது. அழகான வரலாற்றுப் புகைப் படங்களையும், கருத்து நயம் செறிந்து பண்புடன் இருந்த கட்டுரைகளைப் படித்து ரசித்துப் பாராட்டாமலும் இருக்க முடியவில்லை. அட்டைப் படச் சித்திரம் கருத்து நிறைந்து அற்புதமாகப் பொலிந்திருக்கிறது. அதில் பொதிந்துள்ள கருத்துக்கள் மனத்துக்கு மகிழ்ச்சியை ஊட்டுகின்றன.

மேட்டூர்
9—12—57

விசாலாட்சி-பத்மநாபன்

★

டிசம்பர் 8-ந் தேதி இதழ் 'ராஜாஜி மலரா'க "மிகச் சிறந்த முறையில்" வெளி வந்தது கண்டு அளவில்லாத மகிழ்ச்சி யடைகிறேன்; தாங்கள் இந்த இதழில், ராஜாஜியின் அழகான உருவப் படத்தை நல்ல ஆர்ட் பேப்பரில் வெளியிட்டு, ராஜாஜியின் மீது அளவற்ற அன்புள்ள தமிழன்பர்களின் நெடு நாளைய ஆவலைப் பூர்த்தி செய்ததற்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஸ்ரீவில்லிபுத்தூர்
9—12—57

கே. ராகவன்



# ராஜாஜி ஜயந்தி



ராஜாஜியின் பிறந்த நாள் விழா சென்னையில் மிக அழகாகக் கொண்டாடப்பட்டது.

1. ராஜாஜியினிடம் அன்பு கொண்ட சில அன்பர்கள் திரு டி. எஸ். ராமஸ்வாமி அய்யர் தலைமையில் மயிலாப்பூர் கோவில்களுக்குச் சென்று அர்ச்சனை ஆராதனைகள் செய்து, ஆண்டவனின் பிரசாதத்தை ராஜாஜி அவர்கள் இல்லத்துக்குக் கொண்டு சென்று அளித்து, ராஜாஜியை வணங்கி ஆசியைப் பெற்றனர். 2. மறுநாள் மாலை தியாகராயநகர் கலைக் கழகத்தினர் ராஜாஜி ஜெயந்தி விழாவைத் திரு க. சந்தானம் அவர்கள் தலைமையில் கொண்டாடினர். 3. திரு காசா. கப்பாராவ் பேசுகிறார். 4; திருவாளர்கள் புருஷோத்தம் சட்டசபை எதிர்க் கட்சிகளின் தலைவர் ராமசுவாமி முதலியார், கே. எஸ். ராமஸ்வாமி சாஸ்திரிகள், கலைமகள் ஆசிரியர் கி. வா. ஜகந்நாதன், ஸ்ரீமதி மோனிகா பெல்டன் முதலியோர் பேசினார்கள்!





# கலைச் சங்கங்கள்

கோலாலம்பூரில் இந்தியர்களாலும் இலங்கைத் தமிழர்களாலும் நடத்தப்படும் சங்கங்கள் பல உள்ளன. ஈஸ்டர்ன் ஆர்ட்ஸ் சொஸைட்டி, அசோகன் நாடகக் குழு, கோபால் ஷெட்டி நடனக் குழு, கைரளி ஆர்ட்ஸ்கிளப், சுதந்திர கான சபை, சிவதாஸ் வத்ஸலா நாடகக் குழு, சிலாங்கூர் இந்திய இலங்கை இளைஞர் சங்கம், பாரத் பைன் ஆர்ட்ஸ் சொஸைட்டி, மறுமலர்ச்சி வாத்திய கோஷ்டி, கலைப்பண்ணை, வண்ணக்குமரி நாடகமன்றம் ஆகிய பதினொரு சங்கங்களும் ஒன்றாக இணைந்து நமது கலைக் குழுவுக்கு வரவேற்பு விருந்தும் பொதுக்கூட்டமும் நடத்துவதென்று முடிவு செய்திருந்தன.

ஒன்றோடொன்று போட்டி போட்டுக் கொண்டு இயங்கும் இத்தனை சங்கங்களும் எப்படி ஒன்று சேர்ந்தன என்று கோலாலம்பூர் மக்கள் அதிசயப் பட்டார்கள். எத்தனை வேற்றுமைகள் இருந்தாலும் கலையினால் ஒன்று படுத்தி விடலாம்; கலையினால்தான் ஒன்று படுத்தவும் முடியும் என்ற உண்மையை மேற்கண்ட இந்தியர், இலங்கையர் கலா சாரக் கழகங்கள் எடுத்துக் காட்டின.

இந்தக் கழகங்களின் சார்பில் மே மாதம் இருபத்திரண்டாம் நாள் நடைபெற்ற வரவேற்புத் தேநீர் விருந்து ஈஸ்டர்ன் ஹோட்டல் என்ற நாகரிக உணவு விடுதி மண்டபத்தில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

மலேயா மக்களின் பெருமதிப்புக்குரிய வழக்கறிஞர் திரு ஆர். ரமணி வரவேற்புக்குத் தலைமை வகித்தார்.

விருந்தின்போது சொற்பொழிவாற்றிய மலேயாவின் தகவல் இலாகா டைரக்டர் திரு இஞ்சே யாகூப் மகத்தான ஓர் உண்மையை வெளியிட்டார்.

''இந்தியாவிலிருந்து மலேயாவில் குடியேறி வசித்து வருபவர்களில் பெரும்பாலோர் தென் இந்தியர்களே. இந்நாட்டின் முன்னேற்றத்துக்கு அவர்கள் பெரிதும் உதவி யிருக்கிறார்கள். மலேயாவின் பெருவளத்துக்குத் தென்னிந்தியர்கள் காரணஸ்தர்களாக விளங்குகிறார்கள். நாடோடிக் கதைகள், மொழி, சமயம், சமூகப் பழக்க வழக்கங்கள், பொதுக் கலாசாரம் முதலிய துறைகளில் அந்த மாபெரும் நாடான இந்தியாவுக்கு மலேயா மிகவும் கடமைப்பட்டிருக்கிறது.''

இந்த உண்மையைத் தகவல் இலாகா டைரக்டர் வெளியிட்டது குறித்துத் திரு ரமணி தமது உரையில் மிகவும் பாராட்டி நன்றி தெரிவித்தார்.

''மலேயாவில் உள்ள ஆறு லட்சம் இந்தியத் தொழிலாளர்களின் கடும் உழைப்பினால்தான் ரப்பர்த் தோட்டங்கள் செழிப்பாக உள்ளன. ஆனால் அண்மையில் வெளியாகி யிருக்கும் ஆறு காசு அஞ்சல் முத்திரையில் இந்தியப்

பத்து மலைக் குகையும் படிக்கட்டும்



டி.கே.ஷண்முகம் - புத்தனேரி சுப்பிரமணியம்

பால் வெட்டும் தொழிலாளியின் உருவம் காணப்படாமல் வேறு உருவம் காணப்படுவது பெரும் வருத்தத்தைத் தருகிறது.''

இவ்வாறு வரவேற்புக்குழுத் தலைவர் கட்டிக் காட்டியதும் விருந்திலே கூடியிருந்தோர் அத்தனை பேரும் கைதட்டி ஆரவாரம் செய்து தமது உணர்ச்சியை வெளிப்படுத்தியதும் குறிப்பிடத் தக்கது.

மறுநாள் இந்தியர் — இலங்கையர் கலாசாரக் கழகங்களின் கூட்டுறவிலேயே ஒரு வரவேற்புப் பொதுக்கூட்டம் விவேகானந்தா ஆசிரமத் தமிழ்ப் பாடசாலை மண்டபத்தில் நிகழ்ந்தது. பெடரல் சட்டசபை உறுப்பினர் திரு எஸ். ஓ. கே. உபயதுல்லா தலைமை வகித்தார்.

மே மாதம் இருபத்திநாலாம் நாள் புதிய அரங்கிலே தமிழ் நாடக விழாவை மலேயாவின் கைத்தொழில் வர்த்தக மந்திரி டாக்டர் இஸ்மாயில் தொடங்கி வைத்தார். தமிழ் நாடகக் கலையைப் பற்றியும் நமது குழுவைப் பற்றியும் பல விவரங்களை ஆர்வமாகச் சேகரித்து அவர் வெளியிட்டது மிகுந்த உற்சாகத்தைத் தந்தது.

விழாவுக்குத் தலைமை வகித்த திரு ஓ. கே. உபயதுல்லா ஒரு சிறந்த தமிழ் நாவலர் என்பதை அவருடைய தெளிவான சொற்பொழிவிலே கண்டோம்.

ஆரம்ப நாளன்றே அரங்கிலே கூடியிருந்த மக்களின் நாடக ரசனையின் உயர்வைக் கண்டு மகிழ்ந்தோம். மலேயா மக்களுக்கும் 'இராஜ ராஜ சோழன்' நாடகத்துக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்பதை அறிவிக்கும் முறையில் ஒரு முன்னுரை தயாரித்து நாடகம் தொடங்கு முன் ஒலிபெருக்கியில் அதனைப் படிக்கும் வழக்கத்தைக் கையாண்டோம். ராஜேந்திர சோழன் வென்ற கடாரம் என்ற தேசம் மலேயாவின் வட பாகத்தில் உள்ள 'கெடா' என்ற மாகாணந்தான் என்பதைத் தெளிவாக்கினோம். இந்த முன்னுரையின் காரணமாக மக்கள் நாடகத்திலே அதிக ஈடுபாடு கொண்டு அணு அணுவாக ரசித்தார்கள்.

'இராஜ ராஜ சோழன்' நாடகத்தில் சீனத் தூதுக் காட்சி யொன்று வருகிறது. கடல் கடந்து வாழும் தமிழருக்குச் சோழவேந்தன் அந்தத் தூதரின் மூலம் செய்தி சொல்லியனுப்பும் காட்சி அது. தமிழ் நாட்டில் நாடகம் நடக்கும்போது பொதுவாக இந்த லட்சியக் காட்சி அவ்வளவாக ரசிக்கப்படவில்லை. ஆனால் மலேயா மக்கள் இந்தக் காட்சியை மிக நன்றாக அநுபவித்தார்கள்.

''கடல் கடந்து வாழும் தமிழர்கள் தாம் குடியேறியுள்ள நாட்டையே தங்கள் தாயகமாக எண்ணிப் போற்ற வேண்டும் என்று நான் சொன்னதாகச் சொல்லுங்கள்!'' என்று 'இராஜ ராஜ சோழன்' கூறியபோது, ரசிகர்கள் உணர்ச்சியின் சிகரத்துக்கே சென்று விட்டனர்.

பொதுவாகத் தமிழ், தமிழன், தமிழ்நாடு, தமிழ் நாகரிகம் என்பன பற்றிக் குறிப்புக்கள் வரும் வசனங்களை யெல்லாம் மலேயாவில் வாழும் தமிழ் மக்கள் உள்ளுணர்வோடு ரசித்தார்கள் என்று சொல்ல வேண்டும்.

''நமது தமிழ்நாட்டின் பாதுகாப்பு போர் வீரர்களின் எண்ணிக்கையிலோ, கோட்டை கொத்தளங்களின் கற்றளவுகளிலோ பொருளாதார நிலையிலோ இல்லை! அது நம் தமிழ் மக்களுடைய நெஞ்சத்தில்தான் இருக்கிறது'' என்று இராஜ ராஜ சோழன் கூறும் ஒரு வாக்கியம் கலையன்பர்களுக்கு எவ்வளவு உணர்ச்சி யூட்டியது என்பதை எழுத்தால் வருணிக்க இயலாது.

சிங்கப்பூரைவிடக் கோலாலம்பூரில் மக்களின் ரசனை பொங்கிப் பெருகியதற்குப் புதிய நாடக அரங்கமும், ஒலிபெருக்கியும் எவ்வளவு காரணமாக இருந்தன என்பதை எண்ணி மகிழ்ந்தோம்.

சீனர்களும், மலாய்க்காரர்களும், ஐரோப்பியர்களுங்கூடத் தமிழ் நாடக வளம் காண்பதற்காகப் பேரார்வத்தோடு அரங்கிலே கூடியிருந்ததைக் கண்டு எங்கள் தமிழ் உள்ளம் பெருமித உணர்ச்சி பெற்றது.

## 18. வெந்நீர்க் கிணறும் வேலன் குகையும்

கோலாலம்பூரில் எங்களைக் கவர்ந்த— ஏன்? ஊருக்குப் புதியவர் எவரையுமே கவரக் கூடிய—மற்றொரு சிறந்த அம்சம் வெந்நீர்க் கிணறு. இந்தக் கிணற்றைப் பற்றிக் கேள்விப்பட்ட உடனேயே இதனைக் காண வேண்டுமென்ற ஆவல் பிறந்து விட்டது.

நகரில் நாங்கள் தங்கியிருந்த மாளிகை மேட்டுப்பாங்கான இடத்தில் அமைந்திருந்தது. விசாலமான இட வசதியும் மெய்சிலிர்க்



தைப்பூசத் திருவிழாவில் பத்துமலைமீது ஏறும் பக்தர்களின் கூட்டம்.

ளும் காற்று வளமும் நிறைந்த அந்த இல்லத்திலே நீர்வசதி மட்டும் சற்றுக் குறைவாகவே கிடைத்தது. நகர நண்பர்களின் துணையால் தண்ணீர் வசதியைப் பெருக்கிக் கொள்ளும் வாய்ப்பும் கிடைத்தது. ஆயினும் தண்ணீரை வெந்நீராக்கிக் குளிக்கும் வழக்கத்தை எங்களில் சிலர் விலக்க முடியவில்லை.

இந்நிலையிலேதான் வெந்நீர்க் கிணறு பற்றிய செய்தி கிடைத்தது. 'பருத்தி புடவையாய்க் காய்த்தது' போன்ற உற்சாகம் எல்லோருக்கும் ஏற்பட்டது.

"அடுப்பைத் தேடாமல், அலையைப் போடாமல் அருமையான வெந்நீர் போட்டு வைத்திருக்கிறுள் பூமாதேவி! வெந்நீரில் நீராட விரைந்தோடி வாருங்கள்!" என்று இயற்கை அன்னையானவள் அன்பு அழைப்பு விடுப்பது போல் இருந்தது!

ஒருநாள் அதிகாலையில் வெந்நீர் ஊற்றுக்குச் சென்றோம்.

இந்தக் கிணறு நமது நாட்டில் உள்ள கபிலைக் கிணறுகளைப் போல மிகப் பெரியதாக அமைந்துள்ளது. அதிகாலையில் வெப்பத்தின் ஆவி கிணற்றுக்கு மேலே கப்பிக்கொண்டு கழுவுவதைக்காணலாம். ஆவியைக் கண்டதும் வெந்நீர் தாங்கமுடியாத சூடுடையதாகத் தோன்றும். நீரை வாளியிலே மொண்டு, தொட்டுப் பார்த்தால் உடம்பு பொறுக்கக் கூடிய சூடாகத்தான் இருக்கிறது என்றஉண்மைபுலனுகும்.

வாளியைக் கொண்டு கையினுல்எட்டி மொள்ளக் கூடிய முறையில் நீர் மட்டம் மேலெழுந்து நிற்கிறது. மூன் பக்கத்தில் கிணற்றோடு ஒட்டினுற் போல் குளிக்கும் அறைகள் கட்டப்பட்டுள்ளன. கிணற்று நீர் அறைகளுக்குள்ளும் வியாபித்து நிற்கும் முறையில் ஏற்பாடு செய்யப் பட்டுள்ளது. எனவே தொட்டியிலிருந்து நீரை மொண்டு குளிப்பதுபோல் கிணற்றிலிருந்து வெந்நீரை மொண்டு நீராடக் கூடிய அருமையான வாய்ப்புக் கிடைக்கிறது.

இருபது முதல் இருபத்தைந்து பேர்கள்வரை ஒரே சமயத்தில் தாராளமாக நின்று குளிப்பதற்கு ஏற்றவாறு கிணற்றைச் சுற்றிலும் தளம் போடப் பட்டுள்ளது.

வெந்நீர் உப்பு நீராக இல்லாமல் நன்னீராக விளங்குவதோடு கலங்கல் இன்றிப் பளிங்கு போல் தெளிவாக இருக்கிறது.

மலேயா முப்புறங்களிலும் கடல் சூழ்ந்த சிறிய நாடாயினும் எப்புறத்திலும் அங்குள்ள நீர்நிலைகளில் உப்பு நீரையே காண முடியவில்லை என்பதையும் குறிப்பிட வேண்டும்.

மலேயா வெளித் தோற்றத்துக்கு மிகப் பசுமையாக இருந்தாலும் அது ஒரு கந்தக பூமியென்றும், அதனுல்தான் வெந்நீர்க்கிணறுகள் சில இடங்களில் காணப்படுகின்றன என்றும் கேள்விப்பட்டோம். மண்ணியல் எவ்வாருயினும் வெந்நீர்க் கிணற்றை நன்ருகப் பயன்படுத்திக் கொள்ள நாங்கள் தவறவில்லை; எண்ணெய் தேய்த்துக் குளிப்பதற்கு வெந்நீர்க் கிணற்றில் உள்ள குளிக்கும் அறைக்கு ஈடாக வேறு எதுவும் கிடையாது!

"கோலாலம்பூர் முகாமிலே கண்டிப்பாகக் கண்டு மகிழ வேண்டிய மகத்தான மலைக் குகை உள்ளது. அந்த மலை வளங்காண அவசியம் வர வேண்டும்" என்று மகாமாரியம்மன் கோவில் தர்மகர்த்தா திரு க. பழனிவேல்பிள்ளை மலங்கனிந்து அழைத்தார்.

திரு பிள்ளையவர்கள் நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் அவர்களின் தலைமையின் இயங்

கிய இந்திய சுதந்திரச் சங்கத்தின் பொதுநலத் துறையில் நிர்வாக உறுப்பினராகப் பணி புரிந்தவர். அமைதியான தோற்றமும் அன்புப் பணி செய்ய ஆர்வமும் ஆற்றலும்வாய்ந்தவர்.

அவரது ஏற்பாட்டின்படியே நாங்கள் அனைவரும் மே௵ மாதம் இருபத்தெட்டாம் நாள் பொழுது புலருவதற்குமுன் வெந்நீர் ஊற்றில் குளித்து விட்டுப் பத்து மலைக்குச் சென்றோம்.

பத்துமலைக் குகை கோலாலம்பூரிலிருந்து ஏழு கல் தொலைவில் உள்ளது. அந்தக் குகையில் உள்ள வேலன்கோயில் மகாமாரியம்மன் கோயில் நிர்வாகத்தில் அடங்கியது.

மலையடிவாரத்தில் உள்ள கொட்டகையில் ஆலயப் பிரமுகர்கள் நமது குழுவினர் அனைவரையும் எதிர்கொண்டு அழைத்து வரவேற்றனர். மலைமேல் உள்ள குகைக் கோயிலை அடைவதற்கு 242 படிகளில் ஏறவேண்டும். ஆதலால் காலையுணவை முடித்துக் கொண்டு புறப்படுவதே சாலச் சிறந்தது என்று ஏற்பாடு செய்திருந்தனர்.

பசுமையான சூழலுக்கு இடையே படிகளின் தோற்றம் மிகக் கவர்ச்சியாக இருந்தது. மனக் குகையிலிருந்து பொங்கி யெழுந்த உற்சாகத்தோடு மலைக் குகையைக் காண்பதற்காகப் படிகளிலே விரைந்து ஏறினோம். படிகளில் ஏறுவதில் திரு 'குண்டு' கறுப்பையா உட்பட எவருமே சிறிதும் சலிப்படைந்து விடவில்லை.

மலையின்மேல் உள்ள கடைசிப் படியில் காலெடுத்து வைத்ததும் பிரும்மாண்டமான

குகையின் அற்புதத்தைக் கண்டோம். அற்புதம் என்னவென்றால் அது ஓர் இருளடைந்த குகையாக இல்லை; பாறைகளை விதானமாகக் கொண்டு இயற்கையாகவே அமைந்த மாபெரும் மண்டபமாகவே அந்தக் குகை காட்சியளித்தது. மிகப் பெரிய பொதுக் கூட்டமே நடத்தலாம். அவ்வளவு விசாலமானதாகக் குகை-மண்டபம் விளங்குகிறது. குகைக்கு மேலே பாறையானது உருகித் தோரணம் கட்டினாற்போல் தொங்கிக்கொண்டிருக்கிறது. அவ்வாறு உருகித் தொங்கும் பாறைகள் நம் மீது விழுந்துவிடுமோ என்ற அச்சமும் எழுகிறது.

குகை மண்டபத்துக்குள்ளே வேல் ஒன்று விளங்குகின்றது. இந்த வேல் 1872-ல் பிரதிஷ்டை செய்யப்பட்டதென்று தெரிகிறது. வேல் வழிபாடு நாள்தோறும் தவறாமல் நடைபெற்று வருகிறது.

மலைகள்தோறும் குடியிருக்கும் வழக்கத்தைக் கொண்ட தமிழ் முருகன் மலேயாவில் உள்ள பத்துமலைக் குகையையும் உரிமையாக்கிக் கொண்ட சிறப்பு எண்ணி வியத்தற்குரியது. இந்தியாவிலிருந்து மலேயாவில் குடியேறிய அன்பர்களின் மனம் என்னும் கலத்தில் ஏறிக் கடல் கடந்து பத்துமலையில் வேலன் முகாமிட்டானோ என்று எண்ணத் தோன்றுகிறது :

"ஆறுபடை வீடுடையான்
அழகு வடிவேலன்
அன்பர்அகக் கலம்ஏறி
அலைகடலைத் தாவி
வீறுமிகப் பத்துமலை
மேல்குகையில் ஏறி
வீற்றிருக்கும் காட்சிதனைப்
போற்றிடுவோம் வாரீர்!"

பத்துமலை முருகன் கோயிலில் ஆண்டுதோறும் தைப்பூசத் திருவிழா மிகச் சிறப்பாக நடைபெற்று வருகிறது. மலேயாவின் பல பாகங்களிலிருந்தும் ஆயிரக்கணக்கான மக்கள் விழாவிலே கலந்து மகிழ்வார்கள். காவடி எடுத்தல், அலகு குத்திக்கொள்ளுதல் முதலிய பிரார்த்தனைக் கோலாகலங்களில் ஈடுபடும் பக்தர்கள் தைப்பூசத்திருநாளில் ஏராளமாகக் கலந்து கொள்வார்கள். தமிழர்கள் மட்டுமல்லாமல் பிற இனத்தவரும் பத்துமலைக் கோயிலையும் தைப்பூச விழாவையும் புனிதமாகப் போற்றுவது உண்டாம்.

ஒரு சமயம், மாவட்ட அதிகாரியாக இருந்த ஆங்கிலேயர் ஒருவர் குகையிலுள்ள வேலை ஆத்திரத்தோடு இரண்டாக ஒடித்துவிட்டாராம்! இந்தச் சம்பவம் நடந்து இரண்டு நாட்களுக்குள் அவருக்கே ஏதோ மனக் கலக்கமும் பயமும் ஏற்பட்டுத் தம் சொந்தப் பொறுப்பிலேயே மீண்டும் வேலைப் பிரதிஷ்டை செய்து போற்றினாராம்.

1939-ல் குகைக் கோயிலுக்குப் படிக்கட்டு அமைக்கும் வேலை தொடங்கப்பட்டபோது கோயிலுக்கு நிதி எதுவும் இடையாது என்றும், நம்பிக்கையுடன் வேலை தொடங்கி ஐம்பது நாட்களுக்குள் தொழிலாளர்களின் மூலமே இருபத்தையாயிரம் வெள்ளிகள் நிதி வரலாகி விட்டதென்றும் திரு பழனிவேல் பிள்ளை குறிப்பிட்டார்.

ஆண்டுதோறும் தைப்பூசத்தின் போது சுமார் நாற்பதாயிரம் வெள்ளிகள் காணிக்கையாகச் சேர்கின்றன. எச் செலவும் போக முப்பதாயிரம் வெள்ளி மிச்சம் கிடைக்கிறது. இவ்வாறு சேரும் நிதி முழுவதும் அறவழிகளிலே செலவிடப்படுகிறது. பத்துமலை அடிவாரத்திலேயே ஒரு தமிழ்ப் பள்ளிக்கூடம் நடைபெற்று வருகிறது. கோயிலின் நிதியைக் கல்விக் கூடத்துக்காகச் செலவிட முன் வந்த நிர்வாகிகளை மனமார வாழ்த்தினேம்.

பின்னர் இல்லத்துக்குத் திரும்பும் வழியில் மகா மாரியம்மன் கோயிலார் நிர்வாகத்தில் இயங்கும் அப்பர் தமிழ்ப் பள்ளியைக் கண்டோம். இந்தப் பள்ளி சுவாமி ஆத்மராம் என்னும் முது தமிழ்க் கிழவரால் 1936-ல் குருகுல முறையில் தொடங்கப் பெற்று நாளடைவில் வளர்ச்சி யடைந்துள்ளது.

இப் பள்ளியில் உள்ள மாணவ மாணவிகள் பல இலக்கியப் பாடல்களை இனிமையுறப் பாடிக் காண்பித்தனர். தேவாரப் பாடல்களுக்கு அழகாக அபிநயம் பிடித்தனர். கல்வியிலும் கலையிலும் நன்றாக முன்னேறி வரும் இளந் தமிழ்ச் செல்வங்களின் சுறுசுறுப்பு எங்களை மிகவும் கவர்ந்தது.

"அப்பர் தமிழ்ப்பள்ளி
அன்புக் கலைப்பள்ளி
இப்பகுதி யில்வாழ்வோர்
எல்லோர்க்கும்—எப்பொழுதும்
செந்தமிழும் நல்லறமும்
சீரியநற் பண்பாடுந்
தந்துதவும் கூடமிதுதான்!"

என்று வாழ்த்தினேம்;

கோலாலம்பூரில் உள்ள தமிழ்ப் பள்ளிகளில் விவேகானந்தா தமிழ்ப்பாடசாலை மிகப் பெரியது. அழகான கட்டட வசதியும் பெற்றுள்ள கல்வி நிலையம் இது; இந்தப் பள்ளியில் பயிலும் மாணவிகள் மஞ்சள் நிறப் பொது உடையுடன் பொன்னுென காட்சி தருகின்றனர். ஆனால் மாணவர்களுக்குப் பொது உடை கட்டுப்பாடு இருப்பதாகத் தெரியவில்லை. இப்பள்ளியை இலங்கைத் தமிழர்கள் மிகத் திறமையாக நடத்தி வருகின்றனர்; கல்வியில் மட்டுமின்றி இசை நாடகத் துறையிலும் இந்தப் பாடசாலை நிர்வாகிகள் மிகுந்த கவனம் செலுத்தி வருகின்றனர். சங்கீத சபையொன்றும் இப் பள்ளியில் செம்மையாக இயங்கி வருகிறது.

நாடகக் கலை நிகழ்ச்சி ஒன்றும், இசை—நடன நிகழ்ச்சித் திட்டம் ஒன்றும் வெவ்வேறு நாட்களில் எங்களுக்காக நடத்திக் காண்பிக்கப்பட்டன. கலைநிகழ்ச்சிகளில் மாணவிகளின் ஆர்வம் போற்றத் தக்கதாக இருந்தது. சிலப்பதிகாரப் பாடல்கள் சிலவற்றைத் தொகுத்து அப்படியே நாடகக் காட்சிகளாக உருவாக்கிப் பெண்கள் சிலர் நடித்துக் காட்டிய சிறப்பு மறக்கவொண்ணுதது.

மேலே குறிப்பிடப்பட்டவைகளைப் போன்ற தமிழ்ப் பாடசாலைகளுக்கு மலேயா அரசாங்கம் ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவது பாராட்டத் தக்கது.

(தொடரும்)

மெரிக்காவின்

மிகக்கடின மோட்டார் பந்தயம்



## இந்த டயர் அபாயமின்றிச்

## செல்லக்கூடியதென நிரூபித்துள்ளது

கழ்பெற்ற இந்தியானுப்போலீஸ் "500" ந்தயத்தில், தொடர்ந்து 34 வருஷங்களாக யர்ஸ்டோன் டயர்கள் வெற்றி கண்டுள்ளன. ந்தயத்தில் வெற்றிபெற அவசியமான றுதிவாய்ந்த அந்த பயர்ஸ்டோன் டயர் ளைத் தயாரிப்பதிலுள்ள அதே உன்னத தர சாதனையும், வேலைத்திறனுமே, "பாமலி ர்" டயர் அபாயமின்றிச் செல்லுவதில் இணை ற்றது என்பதை உறுதிப் படுத்துகிறது.




# Firestone

## பயர்ஸ்டோன்

நியூ டிலக்ஸ் சாம்பியன்

யூப்லெஸ் அல்லது ட்யூபுள்ளது

ன நிம்மதியுடன் பிரயாணம்

செய்வதற்கென்றே தயாரித்த டயர்



திருப்பாவை
ஓங்கி உலகளந்த
உத்தமன் பேர்பாடி
நாங்கள் நம்பாவைக்குச்
சாற்றி நீராடினால்
தீங்கின்றி நாடெல்லாம்
திங்கள் மும்மாரிபெய்து
ஓங்கு பெருஞ் செந்நெல்
ஊடு கயலுகளப்
பூங்குவளைப் போதில்
பொறிவண்டு கண்படுப்பத்
தேங்காதே புக்கிருந்து
சீர்த்த முலைபற்றி
வாங்கக் குடம்நிறைக்கும்
வள்ளல் பெரும்பசுக்கள்
நீங்காத செல்வம்நிறைந்(து)
ஏலோர் எம்பாவாய்

# முன்கதைச் சுருக்கம்

தணிகாசலம் புதுமை இலக்கியங்களில் பற்றுதல் கொண்ட மாணவன். தனது காலஞ் சென்ற தந்தையின் நண்பர் சுப்பையாவின் வீட்டில் தங்கி, கண்ணபுரம் கல்லூரியில் பி. ஏ., முதல் வகுப்பு படித்து வருகிறான். சுப்பையாவின் விதவைத் தங்கை தேவகி அவனைத் தனிமையில் அணுகித் தன்னை மணம் செய்துகொள்ளும்படி கேட்கிறாள். தணிகாசலம் சில காரணங்களைக் கூறி அவளை மறுத்து விடுகிறான். ஆனாலும், தேவகிக்கு அவனிடம் அன்பு குறையவில்லை. பாசத்துடனேயே பழகுகிறாள்.

தணிகாசலத்தின் படிப்பு பாதியில் தடைப்படுகிறது. தேவகியுடன் இனி ஒரே வீட்டில் வாழ விரும்பாததாலும், பொன் வயலில் வசிக்கும் தன் தாயாரையும் தங்கையையும் காப்பாற்ற விரும்புவதாலும் அவன் கல்வியைத் தொடரவில்லை. பொன்வயலுக்கு வருகிறான். அவன் குடும்பம் பொன்வயலில் வறுமையில் வாடுகிறது. அவனுடைய மாமா பெண் கௌரியும் அங்கு வளருகிறாள்; முறைப் பெண்.



தணிகாசலம்

வேலை தேடித் தன் சித்தப்பாவிடம் புதுப்பட்டி கிராமத்துக்கு வருகிறான் தணிகாசலம். அங்கே கண்டிராக்டர் கன்னுச்சாமியிடம் கணக்கு வேலை கிடைக்கிறது. சித்தப்பாவின் வீட்டுக்கு அடுத்த வீட்டில் வசிக்கும் செங்கமலம் என்ற பேரழகியிடம் மனத்தைப் பறிகொடுக்கிறான். செங்கமலம் கோயிலுக்கு அடிமைப்பட்ட நாட்டியக் கணிகையின் மகள். அவர்களுடைய காதல் கிராமத்தின் நல்ல சூழ்நிலையில் குளத்தங்கரையில் வளருகிறது.

தன்னை அவள் மணந்து கொள்ளச் சம்மதிக்கிறாளா என்று கேட்டுச் செங்கமலத்திடம் கடிதம் எழுதிக் கொடுக்கிறான் தணிகாசலம். விரைவில் முடிவு சொல்வதாக அவள் வாக்களிக்கிறாள். செங்கமலத்தின் நடனம் புதுப்பட்டிக் கோயில் திருவிழாவில் அரங்கேறுகிறது. அன்றைக்கு இரவில் அவர்கள் இருவரையும் ஒன்றாய்க் கண்டு விடுகிறாள் செங்கமலத்தின் தாய். தன் பெண்ணை அழைத்துக்கொண்டு ஊரை விட்டே கிளம்புகிறாள்; செங்கமலமும் அவனிடம் சொல்லிக் கொண்டு போகவில்லை.

தன்னைச் செங்கமலம் ஏமாற்றி விட்டதாக நினைத்து ஆத்திரப்படுகிறான் தணிகாசலம். அந்த ஆத்திரம் ஒரு சிறுகதையாக உருவாகிறது. நடந்ததைக் கதையாக்கி 'மலர்-கொத்து' பத்திரிகைக்கு அனுப்புகிறான்.

இடையில் கண்ணபுரம் சமஸ்தானத்தில் அவனுக்குக் குமாஸ்தா வேலை கிடைக்கிறது. அங்கே தனக்கு லஞ்சம் கொடுக்க வந்த மனிதனைப் பற்றி மேலதிகாரி நாகநாதனிடம் புகார் செய்கிறான். நாகநாதன் லஞ்சம் கொடுக்க வந்தவனிடம் குழைந்து பேசி விட்டு, தணிகாசலத்தின்மீது சீறி விழுகிறார். அன்றிலிருந்து அவனிடம் கடுமையாக நடந்து கொள்ளுகிறார். இந்த நிகழ்ச்சியை வைத்துக் கொண்டு அடுத்த கதையை எழுதி விடுகிறான் தணிகாசலம்.

அவனுடைய முதல் கதை இந்தச் சமயத்தில் வெளிவருகிறது. அதைப் படித்துப் பார்த்த செங்கமலம் அவனுக்கு மன்னிப்புக் கடிதம் எழுதுகிறாள். தான் அவனை ஏமாற்றவில்லை என்றும், தன் தாயாரின் வற்புறுத்தலால் வேறொரு இளம் மிராசுதாரின் தாலி கட்டிக் கொள்ளாத மனைவியாக வாழ்வதாகவும், தன்னை மறந்து விடும்படியும் அதில் குறிப்பிடுகிறாள். முதல் கதை வெளிவந்த உற்சாகத்தில் செங்கமலத்தை மன்னித்து விடுகிறான் தணிகாசலம்.

பொன் வயலில் அவனுக்காக வளர்ந்து வரும் முறைப் பெண் கௌரியை வேறொரு பணக்கார இடத்தில் கேட்கிறார்கள். மாமா வீட்டாரும் கொடுத்துவிட நினைக்கிறார்கள். இந்த நிலையில் தாயார்-பாட்டி இவர்களின் வற்புறுத்தலுக்காகவும், கௌரி தன்னிடம் கொண்டுள்ள அன்புக்காகவும் அவளை மணந்து கொள்ளச் சம்மதிக்கிறான். ஆனால் பெண் வீட்டார் இரண்டாயிரம் ரூபாய் கல்யாணச் செலவுக்குக் கேட்கிறார்கள். பாட்டி ஆயிரம் தருகிறாள். அடுத்தாற்போல் ஆயிரம் வேண்டுமே! தனக்குக் கடன் கொடுப்பதாகச் சொல்லி

யிருந்த கண்டிராக்டர் கண்ணுச்சாமியை நம்புகிறான் தணிகாசலம். அவர், தமக்கு அவன் ஆபீஸ் ரகசியங்களை வெளியிட்டு, நிர்வாகத்துக்குத் துரோகம் செய்தால் கடன் கொடுக்க இசைகிறார். தணிகாசலம் மறுக்கிறான். அவரும் கைவிரிக்கிறார்.

கல்யாணம் நடக்காது என்று கலங்கிப் போயிருந்த தணிகாசலத்துக்கு, சுப்பையாவின் விதவைத் தங்கை தேவகி தக்க சமயத்தில் பணம் கொடுத்து உதவுகிறாள். கௌரிக்கும் தணிகாசலத்துக்கும் பொன் வயலில் கல்யாணம் நடைபெறுகிறது.

கல்யாணம் முடிந்து தனியாகக் கண்ணபுரத்துக்கு வந்த தணிகாசலம் தன் ஆபீசுக்குத் திரும்பவும் வேலை பார்க்கப் போகிறான். அங்கே அவனுக்கு வேலை இல்லை! மேலதிகாரி நாகநாதன் அவனுக்குச் சீட்டுக் கிழித்து வெளியே அனுப்புகிறார். லஞ்சத்தைப் பற்றி அவன் எழுதியிருந்த கதையே அதற்குக் காரணம்.

தணிகாசலம் திடுக்கிடுகிறான். அவன் எழுதிய முதல் கதை அவனுக்குச் செங்கமலத்தின் கடிதத்தைக் கொண்டு வந்தது. இரண்டாவது கதையோ அவன் பிழைப்புக்கே உலை வைத்து விட்டது. வேலை போன செய்தியை அவன் யாருக்கும் வெளியில் சொல்லாமல் கண்ணபுரத்திலிருந்து கொண்டு திண்டாடுகிறான்.

தணிகாசலத்தின் மனம் வெளி உலக நிகழ்ச்சிகளைக் கண்டு வேதனைப் படுகிறது. கண்ணபுரம் கடைத் தெருவில் ஒரு ஏழைப் பெண்ணுக்கு அரிசி விற்க மறுத்த வியாபாரியிடம் சண்டைக்குப் போய் அடி வாங்கிக் கொள்ளுகிறான். நாட்டின் விடுதலைக் கிளர்ச்சியில் மாணவர்களுடன் சேர்ந்து கொண்டு சிறைக்குப் போகும் நெருக்கடிக்கு வருகிறான்.



கௌரி

அந்த நெருக்கடியிலிருந்து அவனைக் காப்பாற்றிப் பொன் வயலுக்குப் புது மனைவியிடம் அனுப்பி வைக்கிறாள் தேவகி. அங்கே சில நாட்கள் இன்பமாய்க் கௌரியுடன் வாழ்கிறான்.

தேவகியின் உதவியால் அவனுக்குக் குற்றாலத்தில் பள்ளி ஆசிரியர் வேலை கிடைக்கிறது. பள்ளியை வைத்து நடத்தும் பெரியவர் மாணிக்கவாசகம். தேவகிக்கு அவர் மாமா. தணிகாசலம் தனியாக அங்கு வந்து வேலையை ஒப்புக் கொள்ளுகிறான். அங்கே சென்னையிலிருந்து வந்திருந்த பேராசிரியர் சந்திரசேகரனிடமும், அவருடைய பெண் உமாவிடமும் அவனுக்குப் பழக்கம் ஏற்படுகிறது. உமா ஒரு கதைப் பைத்தியம்; உல்லாச மனம் கொண்டவள்; தாயில்லாப் பெண்.

கௌரியையும் தாயாரையும் அழைத்துக் கொண்டு வந்து குற்றாலத்தில் குடும்பம் நடத்துகிறான் தணிகாசலம். கௌரியின் அன்பும் குற்றாலத்துச் சூழ்நிலையும் அவன் கற்பனைக்குத் தூண்டுகோலாகின்றன. கௌரியும் தணிகாசலமும் எதிர்பாராத வகையில் குற்றாலத்தில் செங்கமலத்தையும் அவள் கணவனையும் சந்திக்கிறார்கள்.

செங்கமலம் தனக்கு அவன் எழுதிய கடிதத்தைப் பத்திரமாக வைத்திருப்பதாகக் கூறுகிறாள். அதைக் கிழித்தெறியச் சொல்கிறான். அவள் கேட்கவில்லை. செங்கமலம் தன் கணவனுடன் ஊருக்குத் திரும்புகிறாள்.

அடுத்த சாரல் காலத்தில் உமா தன் தந்தையுடன் குற்றாலத்துக்கு வருகிறாள். தணிகாசலத்தின் குடும்பத்தாரோடு ஒன்றிப் பழகுகிறாள். அவனோடு இலக்கியச் சர்ச்சை செய்கிறாள்.

ஒருநாள் 'மலர்க் கொத்து' பத்திரிகாசிரியர் கந்தசாமி குற்றாலத்துக்கு வருகிறார். தணிகாசலத்திடம் காலத்தால் வெல்லமுடியாத கதைகளை எழுத வேண்டுமென்ற இலக்கிய உணர்வைத் தூண்டிவிட்டுச் செல்லுகிறார். அந்த லட்சியத்துக்குத் தூபம் போடுகிறாள் உமா. கலை உள்ளங் கொண்ட உமாவுக்குத் தணிகாசலம் லட்சியவாதி என்பது புரிகிறது. சென்னைக்குச் செல்வதற்கு முன்பு உமா தணிகாசலத்திடம் பிரியாவிடை பெற்றுக் கொள்ளுகிறாள். விளையாட்டுப் பெண்ணாகத் தோற்ற மளித்த அவளிடம் ஓர் வேதனை நிறைந்த நெஞ்சு துடிக்கிறது.

தணிகாசலம் குற்றால வாழ்க்கையில் சலிப்புக் கொண்டு, சென்னையைப் பார்க்க விரும்புகிறான். அவனுடைய எதிர்கால வாழ்க்கைப் போராட்டத்தில் உமா பங்கு கொள்ளப் போகிறாள் என்பது அவனுக்குத் தெரியவில்லை. சூழ்நிலைச் சுழலில் உமா என்ற சிறு துரும்பு அவனால் தவிர்க்க முடியாத ஓர் உயிராக உருவாகி வருகிறது.




முதல் அத்தியாயம்

# புது வாழ்வு

ஒவ்வொரு நாளும், வாரமும், மாதமும் மனிதனின் வாழ்வில் மற்றவர்கள் தெரிந்துகொள்ள வேண்டிய ருசிகரமான சம்பவங்கள் நடைபெறுவதில்லை. நடைபெறும் எல்லா விவரங்களையும் இங்கு அப்படியே கூற வேண்டுமென்பதும் இல்லை. ஆகவே, திடீரென்று மூன்று நான்கு ஆண்டுகள் தள்ளிவந்து இப்போது தணிகாசலத்தைத் திரும்பிப் பார்க்க வேண்டியிருக்கிறது.

இந்த மூன்று நான்கு ஆண்டுகளில் நடந்த ஒரு சில ரஸமான தகவல்களை மட்டும் கவனிப்போம் :—

'மலர்க்கொத்'தின் ஆசிரியர் அவனுடைய லட்சியக் கனவுகளைத் தூண்டிவிட்டு வளர்த்து வந்தார். கண்ணபுரத்திலிருந்து பசுபதி இன்னும் அவனைத் தம்மிடம் வேலைக்கு அழைத்துக் கொள்ளவில்லை. 'இன்றைக்கு-நாளைக்கு' என்று தள்ளிப் போட்டுக் கொண்டே வந்தார். இதற்கிடையில் தணிகாசலத்தை ரூபாய், அணா, பைசா விவகாரங்களில் உயர்த்தக்கூடிய சில அருமையான வாய்ப்புக்கள் வந்தும் அவற்றை அவன் மறுத்து உதறி விட்டான்.

அவனோடு கல்லூரியில் ஒன்றாய்ப் படித்த மாணவ நண்பர் ஒருவர் பெரிய நெசவாலை முதலாளியின் மருமகனாய்ப் போய்ச் சேர்ந்தார். தணிகாசலத்துக்கு அதிக வருவாயும் பொறுப்புமுள்ள வேலையைக் கொடுப்பதற்கு அவர் முன் வந்தார். தணிகாசலம், ''அங்கே இருந்தால் எனக்குக் கதை எழுத ஓய்வு கிடைக்குமா?'' என்று கேட்டான். அவர் சிரித்துக் கொண்டே, ''கதையில் வருவதைப் போல் பத்துப் பங்கு வருமானம் வரும்'' என்றார்.

''என்னை நீங்கள் மன்னிக்க வேண்டும்'' என்று சொல்லிவிட்டான்.

''எப்படியாவது வாழ வேண்டும் என்று நான் நினைக்கவில்லை; இப்படித்தான் வாழ வேண்டும் என்று முயற்சி செய்து பார்க்கிறேன்'' என்றான். அவர் அவனை வற்புறுத்தவில்லை.

கதை எழுதுகிறவர்களில் பல தரப்பட்டவர்கள் உண்டு. பெரிய பெரிய புத்தகங்களைப் படித்து விட்டு அவற்றின் போக்கில் சிந்தனை செய்கிறவர்கள் ஒரு சாரார்; புத்தகங்களில் உள்ளவற்றைத் தங்களுக்கு வாழ்வில் வழிகாட்ட வைத்துக் கொண்டு, வாழ்க்கையில் உள்ள மண்ணைக் குழைத்தெடுத்துக் கதை சமைப்பவர்கள் மற்றொரு சாரார். தணிகாசலம் வாழ்க்கையைத் தன் கதைகளுக்கு மூலப்பொருளாகக் கொண்டதால் அந்த வாழ்க்கை சில சமயம் அவனைப் பார்த்துச் சிரித்து வைத்தது! சில சமயம் சீறி விழுந்தது.

விமர்சகர்கள் அவனுக்குக் கதை எழுதத் தெரியவில்லை என்றார்கள்; வாசகர்கள் தெரியுமென்றார்கள். தணிகாசலத்துக்கோ தனக்குத் தெரிகிறதா இல்லையா என்பதே சந்தேகம்! என்றாலும் அவனால் எழுதாமல் இருக்கமுடியவில்லை. சொந்த மனத் தவிப்பைத் தணித்துக் கொள்வதற்காகவே எழுதினான். நாளடைவில் மற்றவர்களிடம் மனத் தவிப்பை அவை ஏற்படுத்திவிட்டதால் அவர்களும் இப்போது அவனைக் கதை எழுத வற்புறுத்தினார்கள்.

யார் பாராட்டினாலும் பாராட்டாவிட்டாலும் உமா இதில் முந்திக் கொண்டாள். பெரும்பாலும் அவனை வானத்தின் உயரத்துக்குத் தூக்கி வைத்துக் கூத்தாடுவாள். சில சமயங்களில் அவன் வெட்கித் தலை குனியும்படி விமர்சனம் எழுதுவாள். எல்லாம் கடிதங்களில் தான். உமாவிடம் ஒரு தனித் தன்மை இருந்தது. உயிருள்ள எந்தக் கதைக்கும் இருதயத் துடிப்பு என்று ஒரு சிறு பகுதி இருக்குமல்லவா? அதைப் பிடித்து, அனுபவித்துக் குலுக்கும் ரகசியத்தை


மாணிக்க வாசகம்


செல்லக்கண்ணு


செங்கமலம்


குமாரசாமி

அவன் அந்த இளம் வயதில் எங்கு தான் கற்றுக் கொண்டானோ?

கலைஞனின் பலவீனம் இங்கேதான் தொடங்குகிறது. கடவுள் என்ற மாபெரும் கலைஞனே புகழுக்கு அடிமைப் பட்டவனில்லையா? தன்னைப் புகழ்ந்து பாடச் சொல்லிப் பக்தர்களுக்கு வரம் கொடுத்ததாகக் கதைகள்கூட இருக்கின்றனவே? தணிகாசலம் என்ற இளம் கலைஞன் உமாவின் கடிதங்களைக் கண்டு பூரித்துப் போனதில் ஒரு சிறிதும் ஆச்சரியமில்லை. கலைஞர்கள் கிடக்கட்டும்; புகழ்ச்சிக்குக் குழைந்து கொடுக்காத மனிதர்கள் யார்? தணிகாசலத்தின் பலவீனம் இங்கேதான் தொடங்கியது. கதை வெளி வந்த மறுநாள் அவள் கடிதத்தை ஆவலுடன் எதிர்பார்க்கக் கூடிய அளவுக்கு அவன் முட்டாளாக மாறிக் கொண்டு வந்தான்.

புத்திசாலித்தனமுள்ள மனிதனும் அவனிடம் இல்லாமல் இல்லை. அந்தப் புத்திசாலியிடம் மாணிக்கவாசகம் ஒரு முக்கியமான வேலையை நினைவூட்டினார். அடிக்கடி அவர்களுடைய பேச்சில் அடிபட்ட விஷயம் அது. சில முக்கியமான அறிவு நூல்களை மக்களுக்குப் புரியும்படி எழுதி வெளியிடவேண்டுமென்ற கட்டத்துக்கு அவர்கள் வந்தார்கள்.

மாணிக்கவாசகம் ஒரு நாள் ஐந்தாறு நூல்களை அவனிடம் கொண்டு வந்து, "இந்தச் சிந்தனையாளர்கள் தங்களுடைய உழைப்பால் உலக சரித்திரத்தையே மாற்றியமைத்து விட்டார்கள்; இவர்களை நாம் ஆங்கிலம் படிக்காத தமிழர்களுக்கு அறிமுகப் படுத்த வேண்டும்" என்றார்.

ஏற்கெனவே ஓரளவு அவன் அவர்களைப்புரிந்துகொண்டிருந்தான். ஒரு சில உயர்ந்த மனிதர்களின் சிந்தனை தானே உலகத்தை உருவாக்குகிறது? "நேரம் கிடைத்தபோது சிறிது சிறிதாக நானே எழுதி உங்களிடம் காட்டுகிறேன். படித்துப் பாருங்கள். உங்களுக்குப் பிடித்திருந்தால் வெளியிட முயற்சிப்போம்.

மாணிக்கவாசகம் அதை மறுத்தார். "எனக்கும் தள்ளாமை வந்து விட்டது. இனிமேல் இதை உட்கார்ந்து எழுத முடியாது. நீயும் இதைச் செய்ய வேண்டாம். உன்னுடைய கற்பனைத் துறை வேறு, இந்தத் துறை வேறு. எல்லோரும் எல்லாக் காரியங்களையும் செய்வதென்றால் நன்றாக இருக்காது. கல்லூரியில் விஞ்ஞானம் படித்தவர்களைக் கொண்டு இதைச் செய்யச் சொல்ல வேண்டும். அவர்களுக்குத் தமிழும் எழுதத் தெரிந்திருக்க வேண்டும்."

தணிகாசலத்துக்கு உமாவின் நினைவு வந்தது. அவள் இப்போது பி.ஏ. முடித்து விட்டு, எம்.ஏ.யையும் முடிக்கும் தறுவாயில் இருந்தாள். பி.ஏ.யில் பௌதிகமும் ரசாயனமும் எடுத்துக் கொண்டு படித்தவள். ஏனோ அதைத் தொடர்ந்து படிக்காமல் அடுத்தாற்போல் ஆங்கில இலக்கியத்துக்குத் தாவினாள்; எம். ஏ. யில் அவளுக்கு இலக்கியப் பாடம். தமிழிலும் எல்லாருக்கும் விளங்கும்படி நன்றாக எழுதத் தெரிந்து கொண்டிருந்தாள்.

"உமாவைக் கொண்டு எழுதச் சொல்வோமா?" என்று கேட்டான் தணிகாசலம். மாணிக்கவாசகத்துக்கு அவளிடம் நம்பிக்கையில்லை.

"உமா விளையாட்டுப் பெண். அவள் எங்கே இதை நன்றாகச் செய்யப்போகிறாள்? ஓரளவு தகுதி வேண்டும்; தக்கவர்களைக் கொண்டு மெதுவாக எழுதச் சொல்வோம். அவசரமில்லை."

"வெறும் மாணவி என்று அவளை அலட்சியமாக நினைக்க வேண்டாம்; கூர்ந்து நோக்கி உண்மைகளைப் புரிந்து கொள்ளும் தன்மை அவளிடம் இருக்கிறது" என்றான் தணிகாசலம்.

மாணிக்கவாசகம் சிறிது விட்டுக் கொடுத்தார். "எதற்கும் உமாவிடம் ஒரு நூலைக் கொடுத்து முயற்சி செய்து பார். உன்னுடைய ஆவலை நான் ஏன் தடுக்க வேண்டும்?"

தணிகாசலம் அவர் கொடுத்த நூல்களைப் பத்திரமாக வாங்கி வைத்துக்



கொண்டான். மூல நூல்களின் தெளிவான சுருக்கங்கள் அவை. சிரமமின்றிப் புரிந்து கொள்ளும் வகையில் சுவையோடு ஆங்கிலத்தில் கொடுத்திருந்தார்கள். அவைகளை மீண்டும் படித்துப் பார்த்த தணிகாசலம், 'உலகத்தின் முன்னிலையில் தலைநிமிர்ந்து நிற்பதற்குத் தமிழர்கள் பழம் பெருமை மட்டும் பாடிக் கொண்டிருந்தால் போதாது; புதுப் பெருமை சேர்க்க வேண்டும்' என்று நினைத்துக் கொண்டான்.

இரண்டு வருஷங்களுக்கு மேலாக அங்கு வராமலிருந்த உமா எதிர்பாராத வகையில் ஒரு ஜனவரி விடுமுறையில் அங்கு தனியாக வந்தாள். மாணிக்கவாசகத்தின் மனைவி காய்ச்சலால் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்த சமயம் அது. அதைக் கேள்வியுற்றுக் கண்ணபுரத்திலிருந்து தேவகியும் வந்து சேர்ந்தாள். விருந்தாளிகள் இருவரையும் கண்ட பிறகு அந்தக் கிழவியம்மாளின் காய்ச்சல் மெல்ல விடைபெற்றுக் கொண்டது. காய்ச்சல் தீர்ந்த பிறகும் அந்த இரண்டு பெண்களும் அங்கே இரண்டு வாரங்களுக்கு மேல் தங்கியிருந்தார்கள். வீடு நிறைந்திருக்க வேண்டுமென்று விரும்பக் கூடியவர்கள் மாணிக்கவாசகம் தம்பதிகள். உமாவிடம் தணிகாசலம் தங்களுடைய மொழிபெயர்ப்புத் திட்டத்தைப் பற்றிச்சொல்லத் தொடங்கினான். அவன் பேசுவதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்து விட்டுப் பிறகு அலட்சியமாக உதட்டைப் பிதுக்கினாள் உமா. அதில் அவளுக்கு அக்கறை இல்லை.

''நான் இப்போது ஷேக்ஸ்பியரைக் கட்டிக்கொண்டு அழுகிறேன்; தயவு செய்து நீங்கள் எனக்குத் தொல்லை தராதீர்கள்'' என்றாள் உமா.

'''உயிர்ப் பிராணிகளின் வரலாறு' என்ற டார்வினின் நூலைப் படித்துப் பார்; பிறகு உனக்கே அதைத் தமிழில் எழுதத் தோன்றும்.''

உமா கேலியாகச் சிரித்தாள். ''நான் அதை ஏற்கனவே படித்துச் சிரமப்பட்டிருக்கிறேன். படித்தது போதாதென்று எழுதச் சொல்கிறீர்களா? உங்களுக்கென்ன வந்தது? நீங்கள் பாட்டுக்கு உல்லாசமாக உட்கார்ந்து கொண்டு கதை எழுதுங்கள்; நான் இதில் மண்டையைப் போட்டு உடைத்துக் கொள்ளுகிறேன்!...அப்பப்பா! என்னால் முடியாது: முடியவே முடியாது'' என்றாள்.

''உனக்கு மூளையே கிடையாது! அதை வளர்த்துக் கொள்ளவும் ஆசை இல்லை'' என்றான் தணிகாசலம்.

''மூளை இருந்தால் நான் எதற்காக உங்கள் கதைகளைப் படிக்கிறேன்?''

தணிகாசலம் அவளிடம் பேசாமல் முகத்தைத் திருப்பிக் கொண்டான். விளையாட்டுக்கும் வினைக்கும் வித்தியாசம் தெரியாதவளிடம் என்ன பேச்சு வேண்டிக் கிடக்கிறது? முட்டாள்!

உமா மெல்ல அவனைச் சாந்தப்படுத்த முயன்றாள். ''வேண்டுமானால் நிறையக் கதைகள் எழுதிக் கொடுங்கள்; நகல் எடுத்து அவைகளைத் தபாலில் அனுப்புகிறேன்; இலக்கிய சேவைக்கு இலவசப் பணியாளாக இருக்கிறேன்!''

''உன் உதவி தேவையில்லை!''

''போங்களேன்! நானே சொந்தமாகக் கவிதை எழுதப் போகிறேன்.''

''என்ன!'' தணிகாசலத்துக்குத் தூக்கி வாரிப் போட்டது.

''கவிதை! தமிழ்க் கவிதை!...''

''தமிழுக்கு ஆபத்து வந்து விட்டது!'' என்று நகைத்தான் தணிகாசலம்.

''போனால் போகட்டும்; நானே எழுதி, நானே படித்து, நானே கிழித்துப் போட்டுக் கொள்கிறேன். ஆண்டாள், மீரா, ஒளவை எல்லாம் கவிதை எழுதவில்லையோ?''

தணிகாசலம் விழுந்து விழுந்து சிரித்தான். ''தொலைந்தது! ஆண்டாள் என்று உனக்கு எண்ணமாக்கும்? உன்னுடைய அந்தக் கண்ணன் யார்?''

''உங்களுக்குப் பெரிய பிரம்மா என்று எண்ணம் இருக்கும்போது எனக்கு ஏன் இருக்கக் கூடாது? கலியுக பிரம்மாவாம்!...உங்களுக்குக் கர்வம் அதிகம்.''

''என் தலை இன்னும் அவ்வளவு கனமாகவில்லை. உனக்குத்தான் எங்கேயோ கோளாறு தொடங்கியிருக்கிறது. கவிதைப் பைத்தியம் முற்றுவதற்குள் கல்யாணம் செய்துகொண்டு விடு! யார் அந்தக் கண்ணன்? - நான் வேண்டுமானால் உன் அப்பாவுக்கு எழுதி அதே மாப்பிள்ளையைப் பார்த்துத் திருமணம் பண்ணி வைக்கச் சொல்கிறேன்.''

அவளுக்கு மூக்கின்மேல் கோபம் பொத்துக் கொண்டு வந்து விட்டது.

''என் கல்யாணத்தைப் பற்றி உங்களுக்கு என்ன அக்கறை? இல்லை, என் அப்பாதான் என்னை என்ன செய்து விடுவார்? - எனக்குப் பிடித்தால் பிடித்தவனைக் கல்யாணம் செய்து கொள்வேன். பிடிக்காவிட்டால் சும்மா இருப்பேன். யாரும் என் சொந்த விஷயத்தில் தலையிட முடியாது; கூடாது'' என்றாள்.

"'அவன்' என்று சொல்கிறாயே வரப் போகும் மாப்பிள்ளையை?"

"எந்தப் பயல் வருகிறான் பார்ப்போம்? எவனையுமே நான் கல்யாணம் செய்து கொள்ளப் போவதில்லை. பெண்ணாய்ப் பிறந்தால் கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமென்ற கட்டாயமா என்ன? என் கல்லூரியில் எத்தனைபேர் கல்யாணம் செய்து கொள்ளாதவர்கள் வேலை பார்க்கிறார்கள்! அவர்களுக்கு என்ன குறைந்து விட்டது!"

அவளிடம் வாய் கொடுத்து மீள வழியில்லை என்று தணிகாசலம் பேசாதிருந்து விட்டான். கல்லூரிகளில் வீசுகிற காற்று ஒரு வகையானது; அவனைக் கூடப் படிக்கும் பருவத்தில் அது அப்படித்தானே நினைக்க வைத்தது? தணிகாசலம் விவேகானந்தராக மாற விரும்பினான்; உமா ஆண்டாளாக மாறி ஔவைக் கிழவியாய் வாழ விரும்புகிறாள். தணிகாசலத்தின் தவக்கோலத்தை ஒரு கணப்பொழுதில் ஊதிப் பறக்க



விட்டாள் செங்கமலம். ஆண்டாள் என்று தன்னை நினைத்துக் கொண்டிருக்கும் இந்த அடங்காப் பிடாரியை எந்த இளைஞன் பெட்டிப் பாம்பாய் மாற்றப் போகிறானோ? அல்லது கட்டிக் கொண்டு அவதியுறப் போகிறானோ!

தணிகாசலம் கொடுத்த 'உயிர்ப் பிராணிகளின் வரலா'ற்றை அவன் முகத்தில் வீசி எறிந்து விட்டுப் போனாள் உமா. தணிகாசலம் அவளை, "உதவாக்கரை, சோம்பேறி, உழைக்கப் பயந்தவதாரி..." இப்படிப் பல சொற்களில் தன்னுடைய ஆத்திரம் தீர அர்ச்சனை செய்து அனுப்பினான்.

அடுத்த ஒரு மணி நேரத்தில் அவளாகவே அவன் அறைக்குள் நுழைந்து மேசையில் கிடந்த கதைக்கு நகல் எடுத்தாள். வெளியீட்டாளர்களிடமிருந்து வந்திருந்த அச்சுப் பிரதியைத் திருத்தினாள். கண்ட - கண்ட இடங்களில் கலைந்து கிடந்த நூல்களை ஒழுங்குபடுத்திக் காகிதங்களை அடுக்கிவைத்து, அறையைக் கண்ணாடிபோல் மாற்றியமைத்தாள். கூளமாக இருந்த மேசை 'பளிச்' என்று தோன்றியது.

வெளியில் சென்றிருந்த தணிகாசலம் அறைக்குத் திரும்பி வந்து தனக்குள் சிரித்துக் கொண்டான்.

உமா அங்கே தங்கிய நாட்களில் அந்த இரண்டு வீட்டுப் பெண்களையும் பம்பரமாக ஆட்டி வைத்தாள். அவள் ஆட்டி வைத்தாளா! இல்லை; அவர்களே அப்படி அவளைச் சுற்றி ஆனந்தமாய்ச் சுழன்றார்கள். மற்றப் பெண்களை மயக்கித் தன் அன்பு வலையில் விழச் செய்யும் மாய வித்தையை அவள் எங்குதான் கற்றிருந்தாளோ! கௌரியை அவள் கவர்ந்தது பெரிதில்லை; தேவகி உமாவுக்கு அடிமையாகி விட்டாள். பல ஆண்டுகள் நெருங்கிப் பழகிய தோழியைப் போல் வாய்க்கு வாய் உமாவைக் கூப்பிட்டுப் பேசினாள் தேவகி. எந்த நேரமும் அந்த மூன்று பெண்களும் ஒன்றாகவே இருந்தார்கள். "அல்லி ராணியின் ஆட்சி!" என்று பரிகசித்தான் தணிகாசலம்.

கடைசியில் இரண்டு பெண்களும் ஒன்றாகவே குற்றாலத்தை விட்டுக் கிளம்பினார்கள். தேவகியுடன் ஒருநாள் கண்ணபுரத்தில் தங்கிவிட்டுப் பிறகு உமா மட்டிலும் தனியாகச் சென்னைக்குப் புறப்பட்டுச் செல்வதாக ஏற்பாடு.

சில மாதங்கள் சென்றன.

எதிர்பார்த்து, எதிர்பார்த்து ஏமாற வைத்த அற்புதம் ஒன்று உண்மையிலேயே நடந்தது. பசுபதி அவனைத் தம்மிடம் வேலைக்கு வைத்துக் கொள்வதாகவும் உடனே புறப்பட்டு வருமாறு கடிதம் எழுதியிருந்தார். கடிதம் கண்ணபுரத்திலிருந்து வரவில்லை; சென்னையிலிருந்து வந்தது. "நம்முடைய பத்திரிகை இப்போது சென்னைக்கு மாறியிருக்கிறது. அடுத்த மாதத்திலிருந்து பல புதிய அம்சங்களுடன் அதைப் பிரமாதமாக வெளியிட விரும்புகிறேன். உங்களுடைய ஒத்துழைப்பு மிகவும் வேண்டும். ஒரு வாரத்துக்குள் சென்னைக்கு வந்து சேருங்கள். தனியாக வந்தால் போதும். சமயத்தைப் பார்த்துக்கொண்டு மெதுவாகக் குடும்பத்தை அழைத்துக் கொள்ளலாம். ஆரம்பத்தில் அதிகச் சம்பளம் எதிர்பார்க்க மாட்டீர்கள் என்று நினைக்கிறேன். இலக்கியப் பணியில் புகழ் உண்டு; வளர்ச்சியை அனுசரித்துப் பிறகு அதிக வருமானம் பெறலாம்."

தணிகாசலத்துக்கு ஆனந்தம் தாங்கவில்லை. 'இலக்கியப் பணி' என்ற எழுத்துக்கள் அவன் பசியைக்கூட மறக்க



அடித்து விட்டன. அத்துடன் சென்னையைப் பார்க்க வேண்டுமென்கிற நீண்ட நாளைய ஆவலும் சேர்ந்துகொண்டது. சென்னையில் வாழ்ந்துகொண்டு இலக்கியப் பணி செய்வதைப்போல் வேறு என்ன பெருமை கிடைக்கப் போகிறது? மாதம் குறைந்தது நூறு ரூபாயாவது கொடுக்காமலா இருக்கப் போகிறார்? ஓரளவு 'பெயர் பெற்ற' எழுத்தாளன்.

குற்றாலத்தில் மாணிக்கவாசகம் அவனுக்குப் பலவித வசதிகள் செய்து கொடுத்திருந்தார். சாப்பாட்டுக்கு நெல் போக மாதம் ஐம்பது ரூபாய் சம்பளம். வீட்டுக்கு வாடகையில்லை. இன்னும் ஏதாவது காரணங்களை ஏற்படுத்திக்

கொண்டு அவனுக்குத் தனியாக உதவிகள் செய்தார் மாணிக்கவாசகம். 'மலர்க்கொத்து', ஆசிரியர் அனுப்பிய அன்பளிப்புகளும் அவனைத் தாராளமாகச் செலவு செய்ய வைத்தன.

கல்யாணி அம்மாளும் கௌரியும் அவனிடம் எவ்வளவோ சொல்லித் தடுக்கப் பார்த்தார்கள். தணிகாசலம் ஏற்றுக் கொள்ளவில்லை. "உங்களைக் கொண்டு போய்ப் பொன்வயலில் விட்டு விட்டு நான் சென்னைக்குக் கிளம்பப் போகிறேன். அதிகமாய்ப் போனால் நாலு மாதங்களுக்கு மேல் ஆகலாம். பொறுத்துக் கொள்ளுங்கள். எப்படியும் நாம் பட்டணத்தில் குடும்பம் நடத்தலாம்."



மாணிக்கவாசகம் அவனுடைய உற்சாகத்தைத் தடைசெய்யவில்லை. "சென்னை வாழ்க்கை பிடித்திருந்து உனக்கு வளர்ச்சி தருமென்றால் அங்கேயே இருந்து கொள். இல்லாவிட்டால் சிறிதுகூடக் கவலைப்பட வேண்டாம். குற்றாலத்தில் நான் இருக்கும் வரை இந்தப் பள்ளிக்கூடம் உன்னுடையது; என் வீட்டை உன் பிறந்த வீடாக நினைத்துக் கொள்" என்றார்.

மாணிக்கவாசகம் தம்பதிகளை விட்டுப் பிரிவது தணிகாசலத்துக்குப் பேரதிர்ச்சி தந்தது. ஆசிரியராக, ஆதரவாளராக, அன்பராக, வழிகாட்டியாகப் பல வகைகளில் அவர் விளங்கினார். அவருக்காகச் செய்ய வேண்டிய கடமைகளில் ஒன்று எனத் தன் மொழிபெயர்ப்பு வேலையை மதித்தான். இரண்டு மூன்று ஆண்டுகளில் அவற்றைத் தமிழ்ப் புத்தகங்களாக அவரிடம் கொடுக்க வேண்டும்.

மனிதர்களைப் போலவே அந்த மண்ணும் அவனிடம் ஒட்டிக் கொண்டது. அந்த மண்ணில் பிறந்தவர்களை எண்ணிப் பார்த்தான்: மொழியன்பு, ரசிக உள்ளம், எளிமை, சிக்கனம் கொண்டவர்கள் அந்தச் சீமைக்காரர்கள்; தாமிரவருணித் தண்ணீரில் வங்கத்தில் ஓடும் கங்கை நதியின் உயர்ந்த உணர்ச்சி கலந்திருந்தது. தங்களைப் பற்றிப் பெருமை கொண்டு, மற்றவர்களையும் மதித்துப் போற்றி வந்தார்கள் அவர்கள்.

குற்றாலத்திடம் அவன் விடைபெற்றுக் கொண்டான். "மனிதர்களுடைய சந்திப்பெல்லாம் என்றாவது ஒருநாள் பிரிவதற்காகவே ஏற்படுகின்றன" என்று கலங்கிய கண்களுடன் மாணிக்கவாசகம் கூறியபோது, அவருடைய சொற்களில் சண்பகப் பூ மணந்தது.

பொன் வயலுக்கு வந்து சேர்ந்தது, தணிகாசலத்தின் குடும்பம். மங்களத்துப் பாட்டி இப்போது தன் மகன் வீட்டோடு வந்து விட்டாள். ரங்கநாயகி அத்தையும் தங்கமாக மாறித் தன் மகளை வரவேற்றாள். தங்கசாமி மாமா மறந்து விடாமல் விருந்துகளுக்கு ஏற்பாடு செய்தார். வீரம்மாள் பாட்டி கிராமத்துக்குப் போனவள் போனவள்தான்.

பொன்வயலை விட்டு உடனே புறப்படப் போகிறோம் என்ற நினைப்பில் தானோ என்னவோ தணிகாசலத்துக்குப் பொன்வயல் நன்றாகப் பிடித்திருந்தது. பொன் வயலே ஒரு புதுமை பெற்றுத் துலங்குவதாக எண்ணினான். குற்றாலத்தில் இருந்து விட்டு வந்த பிறகும் பொன் வயலில் இந்த உணர்ச்சி ஏற்படுவதை எண்ணி வியந்தான்.

தணிகாசலம் கௌரியிடம் சொல்லிக் கொண்டு சென்னைக்குக் கிளம்பியபோது, கௌரி அவனிடம் ஒரு சிறிய ரகசியத்தை நாணிக் கோணிக் கொண்டு வெளியிட்டு வைத்தாள். "நீங்கள் இன்னமும் சிறு பிள்ளை இல்லை, பட்டணத்துக்குப் போய் விட்டு நினைவு இல்லாமல் இருந்து விடாதீர்கள்; உங்களுக்கு ஒரு சிறு பிள்ளை பிறக்கப் போகிறது!"

குழந்தை மனைவி, ஒரு குழந்தைக்குத் தாயாகப் போகிறாள்! தணிகாசலம் அவளை அப்படியே குழந்தைபோல் தூக்கிக் கொண்டான். தன்னை மறந்து கூத்தே ஆடினான்.

(தொடரும்)



# பரோபகாரம்

தம்பி சீனிவாசன்

பொழுது விடிய இன்னும் இரண்டு நாழிகை இருந்தது. செங்கற்பட்டு-தாம்பரம் சாலையில் திருமதி மீனாட்சியம்மாள் செங்கற்பட்டிலிருந்து தாம்பரத்தை நோக்கி வேகமாகத் தமது காரைச் செலுத்திக் கொண்டிருந்தார். காலை ஆறாவது மணிக்குப் பரோபகாரிகள் சங்கத்தில் நடைபெறும் விசேஷ மகாநாட்டில் அவர்தான் கொடியேற்ற வேண்டும்.

இம்மாதிரி பொறுப்பு வகிக்க ஏற்றவர் தான் அந்த அம்மாள். அவர் இயற்கையிலேயே பரோபகாரி. வலியப் போய்ப் பிறருக்கு உதவி செய்வது அவர் இயல்பு. முன் பின் தெரியாதவரானாலும் அவர் உதவி செய்யத் தயங்க மாட்டார்.

இன்று விடியற்காலையில் போக்குவரத்து அதிகம் இல்லாத அகன்ற சாலையில் காரை வேகமாக ஓட்டிக் கொண்டு போனபோது அவர் மனம் இன்னும் ஒரு மணியில் தாம் செய்ய வேண்டிய சொற்பொழிவுக்குக் குறிப்பு எடுத்துக் கொண்டிருந்தது.

திடீரென்று சிந்தனையின் ஓட்டமும் அதோடு அவர் காரின் ஓட்டமும் தடைப்பட்டன. காரணம், முன்னே வழியை அடைத்துக்கொண்டு சென்ற ஒரு லாரிதான். எவ்வளவு பலமாக ஹாரனை அழுத்தியும் லாரி ஓட்டி விலகி வழி விடுவதாகத் தோன்றவில்லை. திருமதி மீனாட்சி தம் பொறுமையை இழக்கும் சமயத்தில் பொத்தென்று ஒரு சத்தம் கேட்டது. இருட்டில் ஒன்றும் தெளிவாகத் தெரியவில்லை. மீனாட்சி ட்டென்று தமது ாரை நிறுத்தி, 'ஹெட்லட்'டை அடித்துப் பார்த்தார். முன்னேயிருந்த லாரி சற்றுத் தூரம் போயிருந்தது. ஆனால் லாரி போய்க் கொண்டிருந்த இடத்தில் ஏதோ ஒரு பெரிய கட்டு, அந்தச் சாலையின் நடுவே கீழே விழுந்து கிடந்தது.



மீனாட்சியம்மாள் பரபரவென்று காரிலிருந்து இறங்கிச் சென்று பார்த்தார். கீழே விழுந்த பொருள் ஒரு வாழையிலைக் கட்டு. அது நிச்சயம் அந்த லாரியிலிருந்துதான் விழுந்திருக்க வேண்டும். ஆனால் அந்த லாரி ஓட்டியோ அதைக் கவனியாமல் போய்க் கொண்டே இருக்கிறானே, 'என்ன செய்வது?' சற்று யோசித்தார். பின்னர் ஒரு முடிவுக்கு வந்தவராக, அந்தக் கட்டைத் தூக்கித் தம் வண்டியின் பின் சீட்டில் போட்டார். அது அவ்வளவு எளிய காரியமாக இருக்கவில்லை. 'பரோபகாரம் என்றால் சற்றுப் பளுதான்' என்று மனத்துக்குள் சொல்லிக் கொண்டார்.

ஆக்ஸிலேடரை அழுத்தமாக மிதித்து வேகமாகச் சென்று லாரியை நெருங்கி விட்டார் மீனாட்சி. பலமாக ஹாரனை அடித்து லாரியை முந்திக்கொண்டு செல்வதற்காக முயன்றார். ஆனால் மீண்டும் தோல்வி.

என்னதான் முயன்றும் அவர் வண்டி பின்னும் லாரி முன்னும்தான் சென்று கொண்டிருந்தது.

தாம்பரம் அடையுமுன் மூன்று இடங்களில் இம்மாதிரி வாழையிலைக் கட்டு விழவே, அவற்றை மீனாட்சியம்மாள் எடுத்து எடுத்து, தம் வண்டியில் ஏற்றி வந்தார். அவர் வண்டியின் பின் ஆசனம் நிரம்பி வழிந்தது.

கடைசியாக 'உன்பாடு என்பாடு' என்று லாரியைப் பிடித்தே விட்டார்.

அவனை நிறுத்தி, அவன் அஜாக்கிரதையாக வண்டி ஓட்டுவதைப் பற்றி ஓர் அத்தியாயம் பேசினார். "நீ பாதி லாரி இலையை வழியிலே கொட்டி விட்டாயே! அவற்றை நான் எடுத்து வந்திருக்கிறேன்" என்று விஷயத்தை விவரித்தார்.

லாரி ஓட்டி பிரமை பிடித்தவன்போல் ஒரு கணம் நின்று விட்டான். "என்ன அம்மா, என்ன சொன்னீர்கள்? என் லாரியிலிருந்து விழுந்த இலைக் கட்டுகளைத் திருப்ப எடுத்தீர்களா?" என்று படபடப்புடன் கேட்டான்.

ஒரு புன்னகையுடன், "அது ஒன்றும் எனக்குச் சிரமம் இல்லை, டிரைவர்! இலைக்கட்டுகள் என் பின் சீட்டில் உள்ளன!" என்று அடக்கமாகப் பேசினார் மீனாட்சியம்மாள்.

"சிரமம் இல்லையா? யாருக்குச் சிரமமில்லை? வழியில் சாலை ஓரத்து ஓட்டல்களுக்கு நான் சப்ளை செய்த இலைக் கட்டுகளை உன்னை யார் எடுக்கச் சொன்னது? சற்று நேரம் பொறுத்திருந்தால் அந்தக் கட்டுகளின் சொந்தக்காரன் வந்து எடுத்திருப்பானே. ஐயோ! இப்போது யார் திரும்பப் போய் இவற்றைத் தருவது?" என்று கூவி, 'பரோபகாரி'யைக் கடும் கோபத்துடன் பார்த்தான் லாரி ஓட்டி.

அந்தக் கணத்தில் மீனாட்சியம்மாளுக்கு யாராவது ஒரு சோடா உடைத்துக் கொடுத்திருந்தால், நன்று யிருந்திருக்கும். ஆனால், பாவம்! அந்தப் பரோபகாரத்தை அப்பொழுது யாரும் செய்யவில்லை!

சிறுகுடி. பெயருக்கேற்றபடி சிறு கிராமம்தான். எண்ணிப் பார்த்தால் ஐந்நூறு வீடுகளுக்கு மேலிராது. அதிலும் வீடுகள் என்று சொல்லக்கூடியவை இருநூறுதானிருக்கும். மற்றவை யெல்லாம் சிறு குடிசைதான். அந்தச் சிறு கிராமத்திலும் இரண்டு பகுதிகள். மேற்குப் பக்கத்திலிருந்த வீடுகள் கொண்ட பகுதிக்கு மேலச் சிறுகுடி யென்றும், கிழக்குப் பகுதிக்குக் கிழச் சிறு குடி யென்றும் பெயர் ஏற்பட்டிருந்தன. மேற்கே ஒரு சிறு ஆறு சிலுசிலு வென்று ஓடிக்கொண்டிருந்ததால் கிராமத்தில் வசதியுள்ள குடியானவர்கள் அனைவரும் ஆற்றின் கரையை யடுத்தாற் போல வீடுகள் கட்டிக் கொண்டு சௌகரியமாக வாழ்ந்தார்கள். கிழக்கேதான் குடிசைகள். அவற்றில், அந்தக் குடியானவர்களின் நிலங்களில் உழுது பிழைக்கும் உழைப்பாளர்களின் குடும்பங்கள் வாழ்ந்தன. மேலச்சிறுகுடி குடியானவர்கள் கீழச் சிறுகுடிக்கு வரவே மாட்டார்கள். உழைப்பாளர்கள்தான் அவர்கள் வீடுகளுக்குச் சென்று மாடு கன்றுகளை ஓட்டிக் கொண்டும், கலப்பை, மண்வெட்டி முதலியவற்றை எடுத்துக் கொண்டும் வயல்களுக்குச் செல்வார்கள்.

ஒரு நாள் காலை நேரம். புளியமரத்தடியிலிருந்த குடிசைக்குள்ளிருந்து, தென்னங் கீற்றுகள் வழியே மேல் நோக்கிக் 'குபு குபு' வென்று புகை கிளம்பிக் கொண்டிருந்தது.

ராக்கம்மா, பறந்து பறந்து வேலை செய்தாள். அவளுடைய அவசரத்தைக் கண்டோ என்னவோ, அடுப்பும் அவளுக்கு அனுசரணையாக மட மடவென்று எரிய ஆரம்பித்து விட்டது. தண்ணீர் 'தள தள' வென்று கொதித்ததும் தயாராக வைத்திருந்த கேப்பைமாவை எடுத்துக் கொட்டி விட்டு, முந்திய நாளிரவு ஊறப் போட்டிருந்த மொச்சையை எடுத்துக் களைந்து சுத்தம் செய்தாள். அதற்குள் அடுப்பில் போட்ட மாவு கொதிக்க ஆரம்பித்து விட்டது. மொச்சையை அப்படியே வைத்து விட்டு, அகப்பையினால் மாவைக் கிண்டினாள். நல்ல பக்குவமாகக் களி வெந்ததும் அதை இறக்கி வைத்து விட்டு வேறொரு சட்டியில் மொச்சையைக் கொட்டிக் குழம்பாக வைக்க முற்பட்டாள். அதற்குள் தொட்டிலில் நன்றாய் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்த அவள் பையன் விழித்தெழுந்து அழ ஆரம்பித்து விட்டான். "இருடா ராசா, இதோ வந்து விட்டேன்..." என்று சொல்லிக் கொண்டே வேலையைத் துரிதமாகச் செய்தாள். ஆனால் பையன் தொடர்ந்து மேலும் மேலும் உரத்த குரலில் கத்தத் தொடங்கவே, அவள் மனம் கேட்கவில்லை. பையனைத் தூக்கி இடுப்பில் வைத்துக் கொண்டே அலுவலைக் கவனித்தாள்.

குடிசைக்கு வெளியே வந்து வெய்யிலைப் பார்த்தாள். 'பொழுது' கிளம்பி வெகு நேரமாகி விட்டதென்று தெரிந்தது. காலையில் பட்டினியோடு சென்ற தன் கணவன் இந்நேரம் வயலில் வேலை செய்து களைத்துப் போயிருப்பான் என்று யோசித்துக் கொண்டாள். உடனே உள்ளே வந்து, வயலுக்கு வழக்கமாகக் கொண்டு போகும் பாத்திரத்தை விளக்கிச் சுத்தம் செய்து கேப்பைக் களியையும் குழம்பையும் தனித் தனியாக எடுத்து வைத்துக் கொண்டாள். குழந்தையின் முகத்தையும் நன்றாகக் கழுவி, ஒரு கிழிந்த சட்டையை மாட்டி நெற்றியில் அதற்குப் பொட்டும் வைத்தாள்.

குடிசைக் கதவை மூடிப் பூட்டிச் சாவியை இடுப்பில் சொருகிக் கொண்டு, ஒரு கையில் பையனையும் மற்றொரு கையில் சாப்பாட்டுப் பாத்திரத்தையும்





தூக்கிக்கொண்டு வேகமாய்ப் புறப்பட்டாள். ஆற்றைக் கடந்து ஏரிக்கரை வழியே ராக்கம்மாள் ஓட்டமும் நடையுமாகச் சென்றாள்.

அவளது எண்ணமெல்லாம் வயலில் வேலை செய்து கொண்டிருக்கும் கண்ணப்பன் பேரிலேயே இருந்தது. வெகு தூரத்தில் வரும்போதே அவளைப் பார்த்து விட்டான் கண்ணப்பன். அவ்வளவு சீக்கிரம் அவள் வருவாளென்று அவன் எதிர்பார்க்கவில்லை. அவனுக்கும் பசி காதையடைக்க ஆரம்பித்தது. ஆகவே அவளைக் கண்டதும் கையிலிருந்த மண்வெட்டியை வரப்பின்மேலேயே வைத்துவிட்டு, அருகில் ஓடிக் கொண்டிருந்த வாய்க்காலில் கை கால்களிலிருந்த மண்ணைக் கழுவிக் கொண்டு ஒரு மரத்து நிழலில் வந்து நின்றான். ராக்கம்மாளும் அங்கே போய் நின்றாள். அவள் இடுப்பிலிருந்த சிறுவன் தன் தந்தையைக் கண்டதும் சிரித்துக் கொண்டே அவனிடம் செல்லக் கையை நீட்டினான். கண்ணப்பனும் அவனை ஆவலோடு தூக்கிக் கொண்டு, "என்ன ராக்கம்மா, இப்படியே மரத்து நிழல்லே உட்காரலாமா?" என்று கேட்டான். அவள் பதில் ஒன்றும் சொல்லவில்லை. கையிலிருந்த பாத்திரத்தைக் கீழே வைத்து விட்டு, சுமார் இரண்டு மைல் தூரம் வெய்யிலில் நடந்து வந்த களைப்பை ஆற்றிக் கொள்ள, முகத்தில் வழிந்த வியர்வையைத் துடைத்துக் கொண்டு நின்றாள். அவனும் தன் பையனின் தலையையும் முகத்தையும் துடைத்து விட்டான். "பாவம்! இந்த வெய்யிலில் எனக்காக நீயுமா கஷ்டப்படணும்?" என்று சிறுவன் மேல் இரக்கப்பட்டான்.

"இவனும் உங்களைப் போல உழைக்கப் பிறந்தவனதானே! இப்பொழுதே வெய்யிலில் அடிபட்டுப் பழக்கப்படுகிறது நல்லதுதானே!" என்றாள் ராக்கம்மாள்.

"நீ சொல்கிறதும் நெசந்தான். சரி, நேரமாகுது. மத்தியானத்துக்கு மேலே கரும்புத் தோட்டத்திலே கொஞ்சம் வேலையிருக்கு!"

"அப்படின்னு அங்கேயே போய்ச் சாப்பிடலாமே. இந்த மரத்து நிழலைவிட அங்கே குளு குளுன்னு இருக்குமே!"



"சரி, உன் இஷ்டம்: பாத்திரத்தை எடுத்துக்கோ!" என்று நடந்தான் கண்ணப்பன். அருகிலிருந்த கரும்புத் தோட்டத்துக்குள் அவர்கள் நுழைந்தார்கள். அதுவும் அவனுடைய முதலாளிக்குச் சொந்தமானதுதான். வேலி ஓரமாக முளைத்திருந்த கல் வாழைக் கன்றிலிருந்து இரண்டு இலைகளைப் பறித்து வந்து தரையில் விரித்து, அதில் களியை எடுத்து வைத்தாள் ராக்கம்மாள். அவனுக்குப் பிரியமான மொச்சைக் குழம்பை அதில் ஊற்றிக் கொண்டு பிசைந்து சாப்பிட்டான்.

"ரொம்ப நல்லாயிருக்கு, குழம்பு. இன்னைக்கு என்ன நாளு? ஏன் கடக் கடக் களி கிண்டி வந்திருக்கே ராக்கு? நேற்று ராத்திரி மீதம் ஒன்றுமில்லையா?" என்று சாப்பிட்டுக் கொண்டே கேட்டான்.

"இன்னைக்குச் சாதாரண நாளுதான். நேற்று கொஞ்சம் தான் மீதமாச்சு. அதிலே தண்ணி ஊத்தி வைச்சுட்டேன். அதை மட்டும் கொண்டாந்தா உங்களுடைய பசிக்குக் காணுமா?"

"என் பசி என்னைவிட உனக்குத் தான் ராக்கம்மா நல்லாத் தெரியும். எவ்வளவு தான் சாப்பிட்டாலும் இந்த வேலைக்குக் கட்ட மாட்டேங்குது. நல்ல வேளையாக நமக்கு இந்தக் கேப்பைக் களி சாப்பிட்டுப் பழக்கமாகி விட்டது. நம்ம முதலாளிகள் சாப்பிடுகிற மாதிரி அரிசிச் சோறு சாப்பிடுகிறதா யிருந்தால் நம்ம இரண்டு பேருக்குமே தினம் இரண்டு ரூபாய் அரிசி வேணும்!"



"நல்லாச் சொன்னீங்க! உங்க பசியைத் தெரிந்துதான் நேற்று ராத்திரி மீதமான கூழையும் மோர் ஊத்திக் கொண்டாந்திருக்கேன். இந்தாங்க, இந்தப் போகிணியிலே நல்லாக் கரைச்சு வைச்சிருக்கேன். அப்படியே எடுத்துக் குடிச்சிருங்க" என்று எடுத்துக் கொடுத்தாள் ராக்கம்மாள்.

"அடடே, நீ கொண்டாந்த மொச்சைக் கொட்டையை யெல்லாம் தின்னுட்டேனே. இந்தக் கரைச்ச கூழுக்குத் தொட்டுக்க என்ன செய்கிறது? ஒரு மிளகாய்..."

"நீங்கதான் இங்கே மிளகாய்ச் செடியே போட்டிருக்கீங்களே, அதுகூட நினைவில்லையா? ரெண்டு ஊசி மிளகாய் கிள்ளிட்டு வரட்டுமா?" என்று எழுந்தாள் அவள்.

"ஐயையோ! வேண்டாம். ஒரு பிஞ்சுகூட நாம் தொடக்கூடாது. அப்புறம் எல்லாவற்றையும் நாம்தான் கொண்டு போயிட்டோமின்னு வரும். முதல்ளி இல்லாத நேரத்திலே எதையும் தொடாதே, ராக்கம்மா!" என்று அவளைத் தடுத்தான் கண்ணப்பன்.

"நீங்க ஒண்ணு, சும்மா இருங்க. நாம என்ன வீட்டுக்கா கொண்டு போகிறோம்? கூழுக்குக் கடிச்சிக்கக் கால் விசையா பறிச்சிடுவோம்? இரண்டு பிடுங்கினால் ஒன்றும் குறைஞ்சு போயிடாது" என்று சொல்லிக் கொண்டே அவன் பதிலுக்குக் காத்திராமல் சட்டென்று ஓடிப் பக்கத்திலிருந்த மிளகாய்ச் செடியிலிருந்து ஐந்தாறு பொடி மிளகாய்களைப் பறித்துக் கொண்டுவந்து வைத்தாள் அவன் முன்பு. அவனும் ஒன்றும் சொல்லாமல் ஒரு வாய் கூழைக் குடிப்பதும், ஒரு மிளகாயைக் கடிப்பதுமாகப் போகிணியில் இருந்ததை யெல்லாம் காலி செய்தான்.

"அப்பா, இன்னைக்கு வயிறு 'திம்' முன்னு ஆயிடுச்சு. சாயங்காலம் வரைக்கும் களைப்பில்லாமல் பாடுபடலாம். ...... அடடே, என் மடியிலே படுத்த பயல் அப்படியே தூங்கிப் போயிட்டானே, பாவம். இந்தா, ஒரு துணியை விரிச்சுக் கீழே போடு ராக்கு. நான் கொஞ்சம் வெத்திலைச் சருகு எடுத்துப் போட்டுக்கிடறேன்."

"இந்தா நானே கொண்டாந்திருக்கேன்" என்று அவளை மடியிலிருந்து வெற்றிலை, பாக்குப் புகையிலை யெல்லாம் எடுத்துக் கொடுத்தாள்.

"சாயந்திரத்துக்குள்ளே இங்கே காய்ந்து கிடக்கிற கரும்புத் தோகையை யெல்லாம் கூட்டிக் குவித்து வெளியேற்றணுமாம். முதலாளி உத்தரவு. நாளைக்குக் காலம்பற என்னமோ உரம் கொண்டாந்து போடப் போகிறாங்களாம்" என்று வெற்றிலையை மென்று கொண்டே சொன்னான்.

"அப்ப நானும் உங்களோடு இந்த வேலையைப் பார்க்கிறேனே! வீட்டிலே எனக்கும் வேலை இல்லை. பையனும் தூங்குகிறான்."

"வேண்டாம், வேண்டாம். இது நான் செய்ய வேண்டிய வேலை. நீ என்னதான் பாடு பட்டாலும் என் முதலாளி உனக்கு ஒன்றும் கொடுக்கப் போகிறதில்லை. ஏன் வீணாகச் சிரமப்படணும்?"

"அவருக்காகவா செய்கிறேன் என்று சொல்கிறேன்? உங்களுக்காகத்தான்."

அவர்கள் இருவரும் அப்படிப் பேசிக்கொண்டிருக்கும்போதே முதலாளியின் மூத்த மகன் திடீரென்று வந்து விட்டான். "என்ன, கண்ணப்பா, இப்பத்தான் சாப்பாடு முடிஞ்சதாக்கும். இனி நீ கொஞ்சம் சிரமபரிகாரம் செய்துக்கிட்டு வேலையைத் தொடங்குமுன்னே

பொழுது சாஞ்சிடும்: நாளைக்குக் காலையிலே எப்படி உரம் போடுகிறதாம்?" என்று அதிகாரம் கலந்த குரலில் கேட்டுக்கொண்டு அவன் முன்னால் வந்து சற்று விலகி நின்றான்.

எதிர்பாராத அவன் வருகையைக் கண்ட கண்ணப்பனும் சட்டென்று எழுந்து மரியாதையாக விலகி நின்று, "அதைத் தானுங்க நானும் இப்பச் சொல்லிக்கிட்டிருக்கேன். இவளும் என்கூடச் சேர்ந்து இந்தத் தோகையையெல்லாம் அரிச்சுப் போடுறேன்னு......" என்று முடிப்பதற்குள் எஜமானர் மகன் குறுக்கிட்டு, "சரிதான், இன்னும் வேலையே முடியலையாக்கும்? உன் பெண்சாதியும் வேலை செய்தா அதற்கு வேறே தனியாகக் கூலி வாங்கலாமின்னு பாத்தியோ?" என்றான்.

"அப்படியெல்லாம் இல்லீங்க. சும்மா எனக்கு உதவியாகத்தான்."

முதலாளி மகனுடைய பார்வை தரையில் கிடந்த இலையின்மேல் விழுந்தது. அதில் மீதமாயிருந்த இரண்டு பச்சை மிளகாயும் அவன் கண்ணில் பட்டு விட்டது!

"உன் பெண்சாதி உனக்கு உதவிசெய்தது இருக்கட்டும். இங்கே காய்ச்சிருக்கிற மிளகாய், மற்றக் காய்கறியெல்லாம் தினமும் உங்க வீட்டுக்குப் பறிச்சிட்டுப் போகத்தானே இவ வருகிறா?" என்று சற்றுக் கோபமாகவே முதலாளி மகன் கேட்டான்.

"ஐயையோ, அப்படிச் சொல்லாதீங்க, எஜமான்! இவர் வேண்டாமின்னுதான் என்னைத் தடுத்தாரு. நான்தான் இவருக்குக் கூழுக்குக் கடிச்சிக்க இரண்டு காய் பிடுங்கினேன். இதுக்கு முன்னே இங்கே நான் ஒரு பிஞ்சைக்கூடத் தொட்டதில்லீங்க. என் பிள்ளைமேலே ஆணையாகச் சொல்லுறேன்" என்று ராக்கம்மாளே படபடவென்று பதில் சொன்னாள்.

"ஆமாம், தெரியாதாக்கும். உங்களுக்குச் சத்தியம் செய்கிறது என்ன பிரமாதம் ... சரி, சரி, நீங்க தின்ன மிச்சம் தானே எங்களுக்கு ..."

ராக்கம்மாள், முதலாளியின் மகனை முறைத்துப் பார்த்தாள். ஆனால் அவன் பார்வை வேறு பக்கம் இருந்தது. அவள் கோபத்தில் ஏதாவது சொல்லி விடுவாளோ என்று பயந்த கண்ணப்பன், "ராக்கு! நீ பையனைத் தூக்கிட்டுப் போ. நான் வேலையை முடிச்சிட்டுத்தான் வருவேன். ராத்திரியானாலும் சரி" என்று கூறி அவளை அனுப்பி விட்டான். அவளும் சட்டென்று கிளம்பி விட்டாள். முதலாளியின் மகன் கரும்புத் தோட்டத்தைச் சுற்றிப் பார்த்து வந்து கொண்டிருந்தான். கண்ணப்பனோ வரிந்து கட்டிக் கொண்டு மளமளவென்று வேலையில் ஈடுபட்டான். பொழுது சாயு முன்பே தோகைகளையெல்லாம் சுத்தமாக கிள்ளி ஒரு மூலையில் குவித்து விட்டான். பக்கத்திலிருந்த வயல்களையெல்லாம் பார்வை விட்டுவிட்டுத் தோட்டத்துக்குள் திரும்பி வந்த எஜமானரின் புதல்வன், "பேஷ், கண்ணப்பா, நீ ரொம்ப ரோஷக்காரன்தான். சொன்னபடியே செய்திட்டே. ஆனால் ஒன்றுமட்டும் மனசிலே வைச்சுக்க. இங்கே விளைகிறதை எங்களுக்குத் தெரியாமே உன் வீட்டுக்குக் கொண்டு போகாதே..." என்று எச்சரித்தான்.

"ஐயா! என் மனசு நோகப் பேசாதீங்க! நானும் உங்க பண்ணையிலே பதினைந்து வருஷமா நாயாக உழைத்திருக்கிறேன். இதுவரைக்கும் ஒரு துரும்பு கூட உங்களைக் கேட்காமல் கொண்டு போனதில்லே. இன்னைக்கும் அந்த மிளகாயை நான் தொடவேண்டாமின்னுதான் சொன்னேன். அந்தப் பிள்ளை என்னவோ தெரியாமல் செய்து விட்டது. இனி நான் அவளை இங்கே காலடி எடுத்து வைக்க விடமாட்டேன், பாருங்க!" என்று கண்ணீர் கலங்கச் சொன்னான் கண்ணப்பன்.

ராக்கம்மாள் குடிசையின் வெளியே கன்னத்தில் கையை வைத்துக் கொண்டு கவலையாக உட்கார்ந்திருந்தாள். சோர்ந்து போய் வந்த கண்ணப்பன் அவள் முன்னால் நின்று, "ராக்கம்மா! மத்தியானம் நடந்ததை நினைச்சுத்தானே இப்படி உட்கார்ந்திருக்கே? நான் ஒரு முடிவு பண்ணிட்டேன். இனி அந்தப் பண்ணையிலே நான் அடியெடுத்து வைக்கப் போகிறதில்லே. விசுவாசமில்லாத முதலாளியிடம் வேலை செய்கிறதைவிடப் பட்டினி கிடந்து சாகலாம்......" என்று ஆவேசம் வந்தவன் போலச் சொன்னான்.

"ஐயையோ! என்னாலேயா உங்களுக்குக் கஷ்டம்?......நான் வேணுமின்னா அவங்களிடம் போய் மன்னிப்பு கேட்கட்டுமா?" என்று எழுந்தாள் ராக்கம்மாள்.

"அதெல்லாம் வேண்டாம். ஏழைக்கும் ஒரு தன்மானம் உண்டு என்பதை இந்த முதலாளிகளுக்குக் காட்டத்தான் போகிறேன்! உயிரே போனாலும் சரி, இனி அந்தப் பண்ணைப் படி ஏறப் போவதில்லே. பேய்க்கு வாழ்க்கைப்பட்டால் புளியமரம் ஏறணுங்கிற கதையாக என்னைக் கட்டிக் கொண்ட நீயும் கஷ்டத்துக்குத் தயாராகத்தான் இருக்க வேண்டும்!" என்று ஆவேசம் வந்தவன் போலக் கூறினான்.

தன்மான உணர்ச்சி மிக்க ராக்கம்மாளுக்குத் தன் கணவனின் முடிவு சரியானதாகவே பட்டது.

ஆனால் இரவு முழுதும் அவளுக்குத் தூக்கம் இல்லை. குழந்தையின் கதி என்ன, குடும்பத்தின் கதி என்ன? என்ற சிந்தனை அவளை வாட்டத்தான் செய்தது! இருந்தாலும் கஷ்டத்தைக் காலால் உதைத்துத் தள்ளித் தன்மான உணர்ச்சியுடன் இருப்பவனே மனிதன் என்ற எண்ணமும் கூடவே எழுந்தது.

இப்படி மனப்போரில் ஈடுபட்டிருந்த அவர்களுக்கு மறுநாளே மகிழ்ச்சி தரும் செய்தி ஒன்று எட்டியது.

கண்ணப்பனின் தகப்பன் போரிலே ஈடுபட்டு உயிரை விட்டதற்காகச் சர்க்காரில் இரண்டு ஏக்கர் தரிசு நிலம் மான்யமாக அளித்திருக்கிறார்கள் என்னும் உத்தரவுதான் அது. மானம் காக்கவந்த மண்ணிலே பாடுபட அப்பொழுதே தயாராகி விட்டார்கள் அந்தத் தம்பதிகள். அவர்களது உற்சாகத்தைக் கண்ட மகனும் ஒரு பொக்கை வாய்ச் சிரிப்பை உதிர்த்தான்.

"நம்ம ராசா பிறந்த வேளை நல்ல வேளைதான். நம்ம அடிமை வேலை தொலைஞ்சுது!" என்று கூறியவாறே மகனைத் தூக்கி முத்தமிட்டுத் தன் கணவன் மடியில் படுக்க வைத்தாள் ராக்கம்மாள்.



# பி. ஓ. ஏ. ஸி.





# மூலம்



# ஆறு கண்டங்களுக்கும்





# பறந்து செல்லுங்கள்



விவரங்களுக்கு உங்கள் உள்ளூர் பிரயாண ஏஜெண்டிடமோ, அல்லது பம்பாய், கல்கத்தா, டெல்லி, சென்னை முதலிய இடங்களிலுள்ள பி.ஓ.ஏ.ஸி. ஆபீஸிலோ விசாரிக்கவும்.

விமான பிரயாணத்தில் உலகிலே தலைசிறந்த

**B·O·A·C**

பி. ஓ. ஏ. ஸி. உங்கள் கவனிக் கருதுகிறது

பிரிட்டிஷ். ஓவர்ஸீஸ், ஏர்வேஸ, கார்ப்பரேஷன், க்வான்டாஸ், எஸ்.ஏ.ஏ., ஸி.ஏ.ஏ. மற்றும் டி.இ.ஏ.எல். உடன் இணைக்கப்பெற்றது

# மாலவல்லியின் தியாகம்

## கி. ரா. கோபாலன்

சென்ற பதினெரு மாதங்களாகத் தொடர்ந்து வந்து கொண்டிருந்த 'மாலவல்லியின் தியாகம்' என்னும் சரித்திர நவீனம் இந்த இதழுடன் முடிவடைகிறது. நேயர்கள் இந்தக் கதையைப் படித்து வந்ததில் காட்டிய ஆர்வத்தையும் அன்பையும் பாராட்ட வேண்டும். கதை ஆரம்பத்தில் பழந்தமிழ் நாட்டுச் சரித்திரப் பெயர்களும், சரித்திரச் சம்பவங்கள் சிலவும் நேயர்களைச் சோதனை செய்ய ஆரம்பித்து விட்டன. ஆனால் சில வாரங்களிலேயே நேயர்கள் கதையை ஆர்வத்துடன் படிக்கத் தொடங்கி விட்டார்கள். அதே ஆர்வம் கடைசி வரையில் தொடர்ந்து இருந்து வந்தது. இதைப் பார்க்கும் போது பேராசிரியர் கல்கி அவர்கள் தமது 'பொன்னியின் செல்வன்' முடிவுரையில் கூறிய ஒரு விஷயம் நினைவுக்கு வருகிறது. '...... ஆற்றலிலும் ஆராய்ச்சியிலும் மிக்கவர்கள் வருங்காலத்தில் சோழ சரித்திரத்தை அடிப்படையாகக் கொண்ட பல மகோன்னதமான நவீனங்களை எழுதித் தமிழகத்துக்கு மேலும் மேலும் தொண்டு செய்வார்கள் என்று நம்புகிறேன்'' என்று எழுதி முடித்திருக்கிறார்.

பேராசிரியர் கல்கியின் நம்பிக்கை வீண் போகவில்லை. சோழ சாம்ராஜ்யம் உருவாகும் காலத்தில் நிகழ்ந்த சில சரித்திர வரலாற்று விவரங்களை வைத்துக் கொண்டு 'மாலவல்லியின் தியாகம்' என்ற சரித்திர நவீனத்தை எழுதி வந்தார் திரு கி. ரா. கோபாலன். நான்கு மாதங்களுக்கு முன் ஆகஸ்ட் 15-ந் தேதி அன்று யாரும் எதிர்பாராத முடிவு அவருக்குத் திடீர் என்று ஏற்பட்டு விட்டது. திரு கி. ரா. கோபாலனின் மறைவால் மாலவல்லியின் தியாகம் அப்படியே நின்று விடுமோ என்று பல நேயர்கள் கவலைப் பட்டனர். அப்படி நேயர்கள் கவலைப் படும்படியாக அவர் வைக்கவில்லை. கதையின் முடிவையும் அந்தப் பகுதிக்கான சரித்திர சம்பந்தமான குறிப்புகளையும் வைத்து விட்டே போயிருந்தார். அந்தக் குறிப்புக்களை வைத்துக் கொண்டு மிகச் சிறந்த முறையில் கடைசி பத்து அத்தியாயங்களையும் எழுதி முடித்தார் திரு ஸோமாஸ். கதையின் போக்கில் ஒரு சிறு தடையும் இல்லாமல் சுவையுடனும் எழுதியிருக்கிறார் என்பதைக் கடைசி பத்து அத்தியாயங்கள் வெளியானபோது பல நேயர்கள் கடிதம் எழுதித் தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டதிலிருந்து நன்கு உணர்ந்து கொள்ள முடிந்தது.

முழுவதும் கற்பனையாகக் கொண்டு எழுதப்படும் சமூக வாழ்க்கை நவீனங்களுக்கும் சரித்திரச் சம்பவங்களை அடிப்படையாகக் கொண்டு எழுதும் நவீனங்களுக்கும் அடிப்படையிலேயே வேற்றுமை இருக்கிறது.

முற்றிலும் கற்பனை செய்யப்பட்ட சமூகக் கதையை அதன் ஆசிரியர் அவர் இஷ்டம் போல் சுலபமாக முடித்து விடலாம். சரித்திர அடிப்படையைக் கொண்டு எழுதும் நவீனங்களை அவ்வளவு சுலபமாக முடிக்க முடியாது. காரணம் இந்தச் சம்பவங்களுக்குப் பின்னரும் சரித்திரத்தில் வரும் கதாபாத்திரங்கள் வாழ்ந்து பல காரியங்களில் ஈடுபட்டிருப்பார்கள் அல்லவா?

இந்த வகையில் 'மாலவல்லியின் தியாகம்' என்ற இந்த நவீனம் ஒரு முடிவுக்கு வந்தாலும் சோழ சரித்திர வரலாறு முடியாத வரலாறுதான். சோழ சரித்திரத்தை அடிப்படையாகக் கொண்டு இன்னும் பல சரித்திர நவீனங்கள் எழுத இளம் எழுத்தாளர்கள் முன் வருவார்கள் என்று நம்புகிறோம். — ஆசிரியர்.



## அத்தியாயம் 24

# வாழ்க விஜயாலயன்!



சீர்குலைந்து போன சோழ ராஜ்யப் நீண்ட காலத்துக்குப் பிறகு இன்று மீண்டும் பூரணப் பொலிவுடன் விளங்கியது. உற்சாகமற்று ஓய்ந்து பாழாகிக் கிடந்த பழையாறை நகர் வீதிகளெல்லாம் மகிழ்ச்சியில் திளைத்தன. மாட மாளிகைகளும் கூட கோபுரங்களும் சாதாரண சிறுசிறு இல்லங்களும் பால் வண்ணச் சுதை தீட்டப்பட்டு இந்திர லோகமாகக் காட்சியளித்தன. தேவாலயங்களும், அவைகளைச் சேர்ந்த மண்டபங்களும், வேத பாடசாலைகளும், யாகசாலைகளும், செம்மண் பட்டையும் சுதைப் பட்டையும் தீட்டப்பட்டு மங்களகரமாகக் காட்சியளித்துக் கொண்டிருந்தன.

ஆடவர்கள் புத்தாடைகளைப் புனைந்து கூட்டம் கூட்டமாகப் பழையாறை வீதிகளில் குதூகலத்துடன் வளைய வந்தனர்.



பொங்கிப் பிரவாகமெடுக்கும் புதுப் புனல் போல் சோழ நாட்டு மக்களின் கூட்டமும், கொடும்பாளூர், காஞ்சிபுரம், கொங்கு நாடு, பாண்டிய நாடு, வேங்கி நாடு முதலிய பல ஊர்களிலிருந்தும் வந்திருந்த மக்கட் கூட்டமும் தெருக்களிலும், வீதிகளிலும் நேரம் செல்லச் செல்லப் பெருகிக் கொண்டிருந்தது.

காவிரிப் படுகையின் செழுமையில் கொழுகொழு வென்று வளர்ந்து அசைந்தாடும் பூங்கொடிகளைப் போல் தோற்றமளித்த சோழ நாட்டு இளம் பெண்கள் கிண்கிணி நாதத்துடன் சிரித்து, அமுதொழுகும் அழகுத் தமிழில் பைங்கிளியைப் போல் மொழிந்தனர். அவர்கள் கூந்தலில் அணிந்திருந்த மல்லிகை, முல்லை முதலிய மலர்களின் நறுமணம் கம்மென்று ஊர் முழுவதும் பரவியது. கன்னிப் பெண்களின் முல்லைச் சிரிப்பு அவர்களின் காதலர்களையெல்லாம் கிறங்க வைத்தது.

சோழ நாட்டின் பழம் பெரும் நகரமான பழையாறை நகர் முழுவதும் தோரணங்களால் அலங்கரிக்கப் பட்டிருந்தது.

ராஜ வீதிகளில் உயர் சாதிப் புரவிகளும், மத்தகஜங்களும் மகோன்னதமாக அலங்கரிக்கப்பட்டு அணி அணியாக அலங்கார நடை போட்டன.

தேவாலயங்களில் நடக்கும் ஆராதனை காலத்து மணியோசையும், வீதிகளில் வீறு நடை போடும்



யானைகளின் மணியோசையும் நகரம் முழுவதும் நிரம்பிக் கணகணவென்று எதிரொலித்தன.

சோழ அரசை அமைக்கவொட்டாமல் ஒரு எதிர்ப்புக் குழு மிகவும் பலமாக அமைந்திருக்கிறது என்றும், அது பலமான சதிச் செயல்களைப் புரிந்து வருகிறது என்றும், மேற்படி சதிச் செயல்களின் காரணமாக மாபெரும்போர் நிகழக் கூடும் என்றும் கேள்வியுற்றுச் சோழ நாட்டு மக்கள் பெரிதும் கலவரமடைந்திருந்தனர். புத்தம் வருகிறதே என்று அவர்கள் பீதியடைந்து அதனால் கோழையாகி விடவில்லை. படை பலத்திலும் பக்கபலத்திலும் தன்னிகரற்று விளங்கிய பல்லவ சக்கரவர்த்தியின் பகை ஏற்படுகிறதே என்றுதான் மனம் கலங்கினார்கள். சோழ நாட்டை ஆள வேண்டிய விஜயனுக்கு இந்தப் போரில் வெற்றி கிட்ட வேண்டும் என்று இறைவனைச் சதா பிரார்த்தித்தனர்.

தஞ்சை முத்தரையர் படை கொடும்பாளூரை நோக்கிச் செல்லுகிறது என்பதும் அதற்குத் துணையாக மாபெரும் பல்லவ சைன்யமும் சேர்ந்து கொள்ளப்போகிறது என்பதும் பழையாறை நகரை எட்டி அந்நாட்டு மக்கள் உள்ளங்களில் வீர உணர்ச்சியை உண்டாக்கியிருந்தன. யுத்தம் பழையாறைக்கு வரலாம் என்று எல்லோரும் எதிர்பார்த்தனர். கடைசியில் யுத்தம் நின்றுவிடவே எல்லோருக்கும் ஏமாற்றமாகப் போய்விட்டது. ஆயினும், விஜயனுக்குப் பட்டாபிஷேகமும் திருமணமும் நடக்கப் போகின்றன என்னும் செய்தி அவர்களது கொதிப்பை அடக்கிக் குதூகலத்தில் ஆழ்த்தியது.

அரண்மனைச் சபா மண்டபம் தோரணங்களாலும் மலர் மாலைகளாலும் நன்கு அலங்கரிக்கப்பட்டிருந்தது. பல

தேசத்து மன்னர்கள் சபாமண்டபம் முழுவதும் நிறைந்திருந்தனர். சபா மண்டபத்தின் முன் வாசலில், தமிழகத்தின் தனிப்பெரும் மங்கல வாத்தியமான நாதசுரம் இன்னிசையைப் பரப்பிக் கொண்டிருந்தது.

பட்டாபிஷேகத்துக்குரிய வேளை நெருங்கி விட்டது என்பது அங்கு நடந்த பரபரப்பான காரியங்களிலிருந்து நன்கு தெரிய வந்தது.

"ஜய விஜயீ பவ!" என்று மறை பயின்ற மறையவர்கள் ஆசி கூற மங்கல வாத்தியங்கள் முழங்க, "வெற்றிவேல்! வீரவேல்!" என்று ஆயிரம் ஆயிரம் வீரர்களின் கண்டங்கள் ஒலிக்க, நாட்டு மக்களெல்லாம் "வாழ்க! வாழ்க!" என்று ஏக காலத்தில் கூற விஜயாலயச் சோழனின் முடிசூட்டு விழா இனிது நடந்தது.

முடிசூட்டு விழாவும் சோழ அரசனின் திருமண விழாவும் சேர்ந்துகொண்டமையினால் மக்களின் உற்சாகம் கரைபுரண்டு ஓடியது.

இரவு அரண்மனை நடன மண்டபத்தில் கலா ரஸிகர்களும் இசை வல்லுநர்களும், தாள வாத்திய நிபுணர்களும் ஏராளமாக வந்து குழுமியிருந்தனர்.

சோழ ராஜாக்கள் பரம்பரையாக வீற்றிருந்து தனிப்பெருமை தந்த சிம்மாசனத்தில் விஜயனும் தேவி அநுபமாவும் கண்ணைப் பறிக்கும் ஆடையாபரணங்களுடன் அமர்ந்திருந்தனர். விஜயன் நவமணி பதித்த கிரீடம் புனைந்து ஆர, கேயூர, கடக கங்கணங்கள் அணிந்து பசும் பொன்னுடை உடுத்துக் கம்பீரமான தோற்றத்துடன் விளங்கினான். எழிலரசியான அநுபமா, தெய்வ மகளின் இணையற்ற வனப்புடன், அழகுக்கு அழகு செய்யும் அணிகலன்களுடன் விஜயனுக்கு அருகில் நாணத்தினால் முகம் சிவக்க அமர்ந்திருந்தாள்.

அப்பொழுது நடன உடையுடன் வைகைமாலை சபா மண்டபத்தில் பிரவேசித்தாள். தேவராஜனது சபையில் நடனம் புரியும் ஊர்வசியும் திலோத்தமையும் நாணித் தலை குனியும்படியிருந்தது அவள் அழகிய தோற்றம்.

மறுகணம் நடனம் ஆரம்பமாயிற்று. சுதமதி யாழை மீட்டினாள். மாலவல்லி தன் தீங்குரலெடுத்துப் பாடினாள்.

குயிலும் கிளியும் பாட்டில் கூவின; சோலை விரித்த மயில் ஆடியது; சபையினரின் உள்ளங்களிலெல்லாம் வைகைமாலை நிறைந்து நின்றாள்; மின்னல் வெட்டும் நேரத்தில் சபா மண்டபம் தேவேந்திர சபையாக மாறியது. அருமையான அந்த நடனம் சபையோரை ஆட்கொண்டு விட்டது.

வைகைமாலையின் முக பாவத்திலும், ஹஸ்த அபிநயங்களிலும், வெண்ணெய் திருடிய கண்ணன், வேய்ங்குழலூதிய மாதவன், கோபியரை மயக்கிய கோபாலன், அறிதுயிலமர்ந்த அரங்கநாதன், திரிபுரம் எரித்த விரி சடைக் கடவுள், வண்ண மயிலேறிய வடிவேற் பெருமான் ஆகிய எத்தனை எத்தனையோ தோற்றங்கள் தோன்றி மறைந்தன.

இந்தத் தோற்றங்களையெல்லாம் பூதுகன் ரசித்த விதமே அலாதியாயிருந்தது; கண் இமைக்காமல் அவன் மெய்ம்மறந்து போனான்.

மாலவல்லியின் இனிய கண்டத்திலிருந்து அமுத கீதமாகப் பிரவாகமெடுத்த தமிழிசை யாவரையும் கிறங்கச் செய்தது.

தேவகானமாக ஒலித்த அந்த இசை இன்பத்தில் பிருதிவீபதி தன்னை மறந்த லயத்தில் அமர்ந்திருந்தான்.

நடனம் முடிந்து, விருந்து வைபவங்களெல்லாம் முடிந்தன.

* * *

மனோரம்மியமான மாலை வேளை. அந்தி மங்கும் தருணத்தில் அஸ்தமன சூரியன் நந்தவனத்தில் மலர்க் கொடிகளையும், பசுமை போர்த்து நெடிதுயர்ந்த மரங்களையும் தன் பொற்கிரணங்களினால் பொன் மயமாக்கிக் கொண்டிருந்தான்.

அரண்மனை நந்தவனத்தில், வண்ண வண்ணப் பூக்களினால் மூடப்பட்ட அழகிய செய்குன்றுகளுக்கு இடையில் அமைக்கப்பட்ட சந்திரகாந்தக் கல்லினாலான சுகாசனத்தில் பூதுகனும் வைகைமாலையும் அமர்ந்திருந்தனர்.

வைகைமாலையின் கரங்களைப் பற்றிய வண்ணம் பூதுகன், "அன்பே! இன்று உன் நடனம் பிரமாதம். இதுவரையில் நீ எத்தனையோ முறை ஆடியிருக்கிறாய். நானும் ஒவ்வொரு தடவையும் மதுவுண்ட வண்டென மயங்கியிருக்கிறேன். ஆனால் இன்று நீ ஆடிய மாதிரி என்றுமே ஆடியதில்லை. இத்தனை நாட்களாக இந்த அபார வித்தையை என்னிடம் கூடக் காட்டாமல் எங்கே ஒளித்து வைத்திருந்தாய்?" என்று கேட்டான்.

இதைக்கேட்ட வைகைமாலை நாணத்தினால் சிவந்த முகத்தோடு, "அதிகமாகப் புகழாதீர்கள். இன்று என் நடனம் தாம் உயர்ந்திருந்ததாக உங்களுக்குத் தோன்றினால் அதற்குக் காரணம் நீங்கள் தான். கார்மேகத்தைக் கண்டு தான் மயில் களிநடம் புரியும். ஆகவே மயிலின் சிறப்பான நடனத்துக்குக் கார்மேகம் தானே காரணமாகிறது? தங்கள் திருமுன் நான் எத்தனையோ தடவை




# காஸ்ட்ரால்

## ஆராய்ச்சி

## எப்பொழுதும் முன்னணியில் நிற்கிறது

★ சிலிண்டர் தேய்மானத்தைக் குறைப்பதில், 1935-ல் முதல் ஸ்தானம் பெற்றது.

★ இயந்திரங்களை சுத்தப்படுத்துவதற்கு ஒரு சிறந்த எண்ணெயாக 1935 - ல் முதல் ஸ்தானம் அடைந்தது.

★ பெட்ரோல் சிக்கனம், மிக எளிதான இயக்கம், துரிதமான ஓட்டம் ஆகிய அனுகூலங்களைப் பெற ஒரு இலேசான எண்ணெயை அறிமுகப்படுத்தி 1938 - ல் முதன்மை ஸ்தானம் பெற்றது.

★ என்ஜினைக் கெட்டுப் போகாது பாதுகாக்கக்கூடிய நூதன வழிகளைக் கையாளுவதினால் 1949 - ல் முதன்மை ஸ்தானம் அடைந்தது.

★ துரு பிடிக்காமலும், அமிலங்களால் இயந்திர பாகங்கள் தேய்வு ஏற்படாமலும், பாதுகாக்கக்கூடிய ஹைபாய்ட் ஆக்ஸில் எண்ணெயை அறிமுகப்படுத்தியதால் 1951 - ல் முதன்மையடைந்தது.

### இப்பொழுது

"ஸிங்க் டையாக்கில்டி தியோபாஸ்பேட்" மிகச் சிறந்த முறையில் "கம்" மற்றும் "டாபேட்" உருப்புக்கள் தேயாது பாதுகாக்கிறது என்று யு. எஸ். ஏ. கோ - ஆர்டினேடிங் ரிசர்ச் கவுன்ஸிலின் 1957ம் ஆண்டு அறிக்கை தெளிவாக கூறுகிறது. காஸ்ட்ராலில் இந்த அடிடிவ் 1949ம் ஆண்டிலிருந்தே சேர்க்கப்பட்டு இருக்கிறது.

★ ஈடு இணையற்றது! 1958ல் உலகிலேயே மிகச் சிறந்த நவீன மோட்டார் என்ஜினைப்

**காஸ்ட்ரால் என்ற பெயரை**

**குறித்தே எப்பொழுதும் கேளுங்கள்**

1-50

ஆடியிருக்கிறேன். நேற்று உங்கள் முகத்தில் இருந்த உற்சாகமும் ஒளியும் இதற்கு முன்பு எப்போதும் இருந்ததில்லை. உங்கள் உற்சாகத்துக்குக் காரணம், தாங்கள் முழு மூச்சோடு மெய்வருத்தம் பாராமல், பசி நோக்காமல், கண் துஞ்சாமல், பகைவர்களால் ஏற்பட்ட அவமதிப்பைப் பொருட்படுத்தாமல் உருவாக்க முயன்ற சோழ ராஜ்யம் இன்று பூரண மலர்ச்சியுடன் உருவாகி விட்டது தான். உங்கள் உள்ளத்தில் ஓடும்மகிழ்ச்சி அலைகள் என் உள்ளத்திலும் உடம்பிலும் பாய்ந்து என்னை மெய்மறக்கச் செய்து விட்டன. அதனால்தான் நேற்று என் நடனம் உங்களுக்குப் பிரமாதமாக இருந்திருக்கிறது......''

''வைகைமாலை! நீ நடனம் பயின்றது எனக்குத் தெரியும். இத்தனை அழகாகப் பேசுவதற்கு யாரிடம் கற்றாய்?''

''கேட்க வேண்டுமா, பிரபு! சகல கலா வல்லவராகிய தங்களிடமிருந்து தான். என்னிடம் தாங்கள் காணும் சக்திகளுக் கெல்லாம் உறைவிடம் தாங்கள் தான்!''

''நன்று, நன்று! வைகைமாலை, முன்பு ஒருமுறை, 'இன்று நீரை வெள்ளமா கொண்டுபோய் விடும்...?' என்று கேட்டு என்னைத் தடுத்தாய். இனி வண்டுக்கு, மலரில் பருகுந்து மதுவுண்ணத் தடையேதும் இல்லையே?''

''வானம் பொழியும் மழையை நுகர்ந்து பயிர் வளமடைய விரும்பினால் அதை யார் தடுக்க முடியும்? மேலும் வண்ண மலரில் மதுவுண்ணப் புகும் வண்டு அந்த மலரிடம் அநுமதி கேட்பதில்லையே?''

''இந்தப் பூதுகன் பூவையரின் பூப் போன்ற நெஞ்சை அறிந்தவன். மலரைக் கசக்கி நுகரும் மடையனல்ல...!''

''சுவாமி! விளையாட்டுப் போதும். மாலை மதியமும், இந்த மேடையிலே வீசுகின்ற மெல்லிய பூங்காற்றும், அந்த மென்காற்றில் விளைகின்ற சுகமும் வீணாகின்றன. வாருங்கள், அப்படிப் போகலாம்!'' என்று கூறி வைகைமாலை நெடிதுயர்ந்த பூதுகனின் வலிமையான கரங்களைப் பற்றினாள்.

சுகேசியும் பிருதிவீபதியும் வீணையை மீட்டி அதன் கான இன்பத்தில் திளைத்து இன்ப உலகத்தில் இருந்தனர்.

''பிரபூ! தாங்கள் கூறுவது உண்மையா? இதைத்தான் நேற்று 'ஒரு அதிசயச் செய்தி உனக்காகக் காத்திருக்கிறது' என்று கூறினீர்களா? மாலவல்லி இசைந்து விட்டாளா?'' என்று பரபரப்புடன் கேட்டாள்.

''சுகேசி! மாலவல்லி இசைந்து விட்ட மாதிரிதான். முதலில் நீ உன் சம்மதத்தைத் தெரிவித்து விட்டாயல்லவா? இதற்குமேல் நடக்க வேண்டியவைகளை நான் முடித்து விடுகிறேன். மீண்டும் ஒரு முறை கேட்கிறேன். சுகேசி, உண்மையாகவே உனக்கு மாலவல்லியிடம் கொஞ்சங் கூடப் பொறாமையில்லையா?''

''பிரபூ! ஏன் அந்தச் சந்தேகம் என்னிடம் தங்களுக்கு ஏற்பட்டது?''

''சுகேசி! பெண்கள் எவ்வளவு நல்லவர்களாயிருந்தாலும் அவர்கள் உள்ளத்தில், தனக்குத் தனி உரிமையாயிருக்கும் மனைவி என்ற ஸ்தானத்தை இன்னொருத்தியுடன் பகிர்ந்து கொள்ளும் அளவுக்குத் துணிவு இருப்பதில்லை. இந்த ஒரு விஷயத்தில் மட்டும் எந்தப் பெண்ணும் விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையை மேற்கொள்ள மாட்டாள், அதனால்தான்...''

''...தாங்கள் எல்லாப் பெண்களையும் போல உங்கள் சுகேசியையும் நினைத்து விட்டீர்கள். உங்கள் விருப்பம்தான் அவள் விருப்பம்...!''

''சுகேசி! மிகவும் சந்தோஷம். இதனால் உன் மனம் புண்படுமோ என்று சிறிது வேதனைப்பட்டுக் கொண்டிருந்தேன். இனி எனக்கு எவ்விதக் கவலையும் இல்லை!''

அந்தி மயங்கும் வேளையில், இருவரும் கைகோத்த வண்ணம் சென்றனர்.

* * *

உதய சூரியன் இன்னும் தன் பிரயாணத்தைத் தொடங்கவில்லை. ஆனால் அவன் வரப்போகிறான் என்பதற்கறிகுறியான வெளிச்சம் மெல்லப் பரவிக் கொண்டிருந்தது. சூரியோதய காலத்

துக்கு மட்டுமே உரித்தான 'சில்'லென்ற மென்காற்று வீசி நந்த வனத்தின் மலர்க்கொடிகளையும் செடிகளையும் அசைத்தது. அசைந்த செடிகளும்கொடிகளும் அவை இதுகாறும் சுமந்து கொண்டிருந்த பனிநீரைச் சிந்தின.

மாதவிப் பந்தலின் கீழ் கல் மேடையில் மாலவல்லியும் பிருதிவீபதியும் மௌனமாக அமர்ந்திருந்தனர். பிருதிவீபதியே அங்கு நிலவிய மௌனத்தைக் கலைத்தான்.



"மாலவல்லி! உன் முடிவு இதுதானா? நீ முன்பு என்னிடம் வைத்திருந்த அன்பை இவ்வளவு சுலபத்தில் எப்படி மறந்தாய்? அரச பரம்பரையில் வந்தவர்கள் பல மனைவியர்களை மணந்திருக்கின்றனர் என்பது நீஅறியாததா? மேலும், சுகேசி உன் உடன் பிறந்த தங்கை மாதிரி. அவளும் நீயும் உருவ ஒற்றுமையில் சிறிதும் வேற்றுமை யின்றி ஒரே மாதிரி இருப்பதனால் தானே சமீப காலத்தில் என்னென்னவோ சம்பவங்கள் நிகழ்ந்து விட்டன. உன்னால் சுகேசியும், சுகேசி யினால் நீயும் பலவிதத்திலும் சிரமங்களுக்கு ஆளாகி விட்டீர்கள். அதற்குத் தகுந்த பரிகாரம் வாழ்நாள் முழுதும் இணைபிரியாமல் ஒரே இடத்தில் வாழ்வது தான். உங்கள் இருவருடைய உருவ ஒற்றுமையின் காரணமாகத்தான் நான் கூடத் திணறிப் போனேன்."

"தாங்கள் சொல்லுவதெல்லாம் சரிதான். நான் தங்களிடம் கொண்டிருந்த காதலை மறக்க வில்லை. சுகேசியினிடம் எனக்குச் சிறிதும் வருத்தமில்லை. என் வாழ்வில் எனக்கு ஏற்பட்ட இன்னல்களுக்குக் காரணம் என் அழகு. அதன் மீது எனக்குத் தாங்கொணு வெறுப்பு ஏற்பட்டு விட்டது. விரக்தி யடைந்த என் உள்ளத்தில் மகா புருஷரான கௌதம புத்தரின் திருவுருவம் அடிக்கடி தோன்றுகிறது. மானிட வாழ்வின் ஆசாபாசங்கள் தான் துக்கத்துக்குக் காரணம் என்பதை அவர் எனக்கு இடைவிடாமல் அறிவுறுத்துகிறார். என் மனம் உலக வாழ்வில் விரக்தி கண்டுவிட்டது. சுட்ட மண் ஒட்டுவதில்லை; காய்ந்த மலர் தேனை உகுப்பதில்லை. இனி என் வாழ்வும் அத்தகையதுதானே. அறவாழி அண்ணலின் அடிச்சுவடுகளைப் பின்பற்றி அறவாழ்வு வாழ்வதிலேயே என் மனம் ஈடுபட்டுநிற்கிறது. என்னைத் தடுக்காதீர்கள்!"

மாலவல்லியின் கண்களில் கண்ணீர்த் துளிகள் பெருகிப் பார்வையை மறைத்தன.

"மாலவல்லி! உன் இறுதித் தீர்மானம் இதுதானா? உன் உள்ளம் என்னை மறக்கச் சித்தமாகி விட்டது. என்னால் முடியவில்லை, மாலவல்லி! சதா என் நினைவில் நிற்கும் உன் முகத்தை எப்படி மறப்பேன்?" என்று பிருதிவீபதி தழுதழுத்த குரலில் கேட்டான்.

"சுவாமி! அந்த என் முகத்தைத் தாங்கள் அப்படியே சுகேசியிடம் காணலாம். போதிசத்துவரின் அருளினால் எங்கள் இருவருக்கும் ஏற்பட்டிருக்கும் முக ஒற்றுமைகூட ஒரு நன்மைக்குத்தான் என்று தெரிகிறது... சரி. சூரியன் உதயமாகி விட்டான். இனி நான் கணப் பொழுதும் இங்கிருக்க விரும்பவில்லை. எனக்கு விடைகொடுங்கள்..." என்று வணங்கினாள் மாலவல்லி.

பிருதிவீபதி அயர்ந்து போய் நின்றான்.

புத்தம் சரணம் கச்சாமி
சங்கம் சரணம் கச்சாமி
தம்மம் சரணம் கச்சாமி

என்று மாலவல்லி கூறியவண்ணம் கீழ்த்திசையை நோக்கித் தன் எல்லையற்ற பிரயாணத்தைத் தொடங்கினாள்.

காலை இளம் பரிதியின் வெய்யிலில் அவளது உருவம் ஒரு ஓவியன் தீட்டிய நிழல் ஓவியம்போல் தோற்றமளித்து, வர வரச் சிறிதாகி, பார்வைக்கும் அப்பால் மறைந்து விட்டது. (முற்றும்)



# நாட்டின் இளம் பெண்மணி







அவள் தன்னைப் பற்பலவித அழகிய ஆடை ஆபரணங்களால் அலங்கரித்துக் கொள்ள விரும்புகிறாள். அவள் அலங்கரித்துக் கொள்வதில் ஆச்சரியமில்லை. ஏனெனில் உற்பத்தி பெருகிவரும் நாட்டிலே வளர்ந்து, வருங்காலத்தில் முக்கிய பொறுப்பை ஏற்கப் போகிறாள். இப்படம் இவளது இளமைப் பருவ கனவுகளையும், எண்ணங்களையும் தத்ரூபமாக எடுத்துக் காட்டுகிறது. நீங்கள் கேவர்ட் பிலிமினால் எடுக்கப்பட்ட படங்களைக் கண்டு எவ்வளவு தூரம் ஆனந்தமடைவீர்கள் என்பதை எண்ணிப் பாருங்கள். அவை உங்களுக்கு இனிமையான சம்பவங்களையும்' வியக்கத்தக்க நினைவு அலைகளையும் உங்கள் மனத்தில் கொண்டு வந்து நிறுத்தும். வீட்டினுள்ளும் வெளிப்புறத்திலும் படங்கள் எடுக்க **கேவாபான் 33** அல்லது **கேவாபான் 36** உகந்தவை. **கேவாபான் 36**ல் "மந்தமான வெளிச்சத்திலும் பிரகாசமான படங்களை" எடுக்கலாம். அற்புதமான வர்ணப் படங்களுக்கும், பெரிய படங்களுக்கும் கேவாகலர் நெகடிவ் பிலிம் (N5) உபயோகியுங்கள். மேலும் உங்களுக்குத் திருப்தியளிக்க உங்கள் பிரின்டுகளும், என்லார்ஜ்மென்டுகளும் — சாதாவோ — கலரோ எதுவாயினும் கேவர்ட் பேப்பரில் செய்யப்பட்டுள்ளனவா என்று பாருங்கள்.

**GEVAERT**

**ALLIED PHOTOGRAPHICS PRIVATE LIMITED**

அல்லைட் போட்டோகிராபிக்ஸ் பிரைவேட் லிமிடெட்
கஸ்தூரி பில்டிங், ஜாம்ஷெட்ஜி டாடா ரோடு, பம்பாய்-1

# மாயப் பந்து

"ராஜி"

## 38. மாற்று மருந்து!

மந்திரக் கிழவியின் மனத்திலே மால்கோஷைப் பற்றிய எண்ணங்கள் தொடர்ந்தன. 'மால்கோஷுக்கோ ஒருபெரிய தீங்கு ஏற்பட்டு விட்டது. அந்தத் தீங்கினால் மால்கோஷும் கலாவும் பல துன்பங்களுக்கு ஆளாகப் போகிறார்கள். மால்கோஷுக்கு ஏற்பட்ட தீங்கை எப்படி அகற்றுவது?' என்பது தான் அவளது யோசனை. ஆனால் அதைப்பற்றிக் கார்குருவோடு பேச அவளுக்கு மனம் இல்லை. 'நடந்ததோ நடந்து விட்டது. இனிமேல் பேசி என்ன பிரயோசனம்?' என்று பேசாமல் இருந்து விட்டாள். ஆனால் மால்கோஷின் மூளைக்கு அதிர்ச்சி கொடுத்து, அவனுக்குப் பழைய நினைவுகள் வராதபடி செய்ய என்ன மருந்துகளை உபயோகித்தான், என்ன மந்திரங்களைக் கையாண்டான் என்பதை மாத்திரம் மிகவும் சாமர்த்தியமாகக் கார்குருவிடமிருந்து மந்திரக் கிழவி அறிந்தாள். மந்திரக் கிழவிக்குக் கார்குரு சிஷ்யனாக இருந்தாலும் ஒவ்வொரு மந்திரவாதியும் ஒவ்வொரு விஷயத்தையும் கையாளும் விதம் அநேகமாக வெவ்வேறு விதமாகத் தானே இருக்கும்? மந்திரக் கிழவிக்குக் கார்குரு உபயோகித்த மந்திரத்தின் சக்தி நாளுக்கு நாள் வேகம் குறைந்து நாற்பத்தைந்து நாட்களில் அதன் மந்திர சக்தி போய்விடும் என்பது மாத்திரம் தெரியும். அப்படி மந்திர சக்தி போய் விட்டால் மந்தம் அடைந்திருந்த அவனது மூளை சுறுசுறுப்பாக வேலை செய்யுமே தவிரக் கொடிய மருந்துகளை உபயோகித்ததினால் அவனது மூளைக்கு ஏற்பட்ட அதிர்ச்சி சுலபமாகப் போகாது என்றும், அதனால் மால்கோஷ் பழைய நினைவுகளை மறந்தவனாகவே இருப்பான் என்றும் தெரியும். அந்தக் கொடிய மருந்துக்கு என்ன மாற்றுமருந்து என்பது தான் மந்திரக் கிழவியின் தீவிரமான யோசனை. அதைப் பற்றிக் கார்குருவைக் கலந்து பேசுவதற்கு மந்திரக்கிழவிக்குச் சிறிதும் விருப்பமில்லை.

'கார்குரு உபயோகித்த மருந்துக்கு மாற்று மருந்தை நானே என் சாமர்த்தியத்தினால் கண்டு பிடிக்காவிட்டால் நான் ஒரு பெரிய மந்திரக் கிழவியாக இருப்பதில் பிரயோசனமில்லை. எப்படியாவது மாற்று மருந்தைக் கண்டுபிடித்து அதன் மூலம் மால்கோஷ் தன் சுய நினைவை திரும்பப் பெறும்படி செய்ய வேண்டும். மால்கோஷ் சித்த சுவாதீனம் அடைந்துவிட்டால் அவனுக்குக் கலாவைச் சந்திப்பது சிரமமா

யிராது. நல்ல வேளை! கலா கார்குருவின் கொடுமையிலிருந்து தப்பிவிட்டாள்' என்று மந்திரக் கிழவி யோசித்துக் கொண் டிருந்தாள். கார்குருவின் வீட்டை விட்டு அவள் வேகமாகத் தன் இருப்பிடத்துக்கு வந்து கார்குரு வின் மருந்துக ளுக்கு மாற்று ம ரு ந் தை க் கண்டு பிடிக்கும்



முயற்சியில் ஈடுபட்டாள். அவளுடைய அநுபவமும் அறிவும் அவளை இந்தச் சமயத் தில் கை விட்டு விடவில்லை. மாற்று மருந் தைக் கண்டுபிடித்து விட்டாள்.

முதலில் எந்த நதிக்கரைக்குப் பக்கத்தில் முதன் முதலில் கார்குரு மால்கோஷை அவன் மயக்கமாக இருக்கும்பொழுது கொண்டு போய்க் கிடத்தினானோ, அதே இடத்துக்கு அவள் போய்ச் சேர்ந்தாள். அங் கிருந்து கிழவி மால்கோஷைப் பற்றி விசா ரித்துக் கொண்டே ஒரு நாள் மாலையில் தனியாகப் போய்க் கொண்டிருக்கும் பொழுது அவனைச் சந்தித்தாள். அவன் அணிந்திருந்த உடுப்புகளையும் அவனது முகத் தோற்றத்தையும் அவனது பரட்டைத் தலையையும் பார்த்துக் கிழவி, அவன் மால்கோஷ் இல்லை என்று நினைத் தாள். மால்கோஷ் மந்திரக் கிழவி யைத் திரும்பிப் பார்த்தான். ஆனால் அவளைத் தெரிந்து கொள்ளவில்லை. ஏதோ முணுமுணுத்துக் கொண்டே போய்க் கொண்டிருந்தான். முகப் பார்வையிலிருந்து மா ல் கோ ஷ் தான் அவன் என்று தீர்மானித்த மந்திரக்கிழவி அவனது பரிதாபகர மான நிலைமையைப் பார்த்து மனம் வருந்தினாள். ஒன்றுக்குமே கண் கலங்காத அவள் கண்களிலிருந்து நீர் பெருகியது. அவனையே அவள் பின் தொடர்ந்து சென்றாள்.

மால்கோஷ் வழக்காக ஒரு பெரிய தென்னந்தோப்பிலுள்ள ஒரு பழைய கட் டடத்துக்கு இரவில் தங்குவதற்காகப் போனபொழுது மந்திரக் கிழவியும் இருட் டில் மெதுவாக உள்ளே போய் ஒரு மூலை யில் படுத்துக் கொண்டாள். முகத்தைத் தவிர உடம்பெல்லாம் குளிருக்குப் போர்த் துக் கொள்ளுவது போல் தனது வெள்ளைப் புடவையினாலேயே உடம்பை மூடிக்கொண் டாள். மின்னல் வெளிச்சத்தில் பார்த்த மால்கோஷுக்குக் கிழவியின் முகம் கிழவ ளுகத் தோற்றமளித்தது. மூளை குழம்பிக் கிடக்கும் நிலையில் இருந்த மால்கோஷ், அவனுடைய சட்டையைக் குளிருக்காகக் கொடுத்து உதவினான். மால்கோஷின் உயர்ந்த குணத்தைக் கிழவி மெச்சினாள்.

அந்தக் கட்டடத்தில் மால்கோஷ் நன் றாய்த் தூங்கிவிட்டான். கிழவி தூங்கவில்லை. அவளுக்கு எப்படித் தூக்கம் வரும்? மால் கோஷுக்குப் பழைய உருவம் கொடுக்க அல்லவா அவள் முயற்சி எடுத்துக்கொண் டிருக்கிறாள்! கார்குரு மால்கோஷின்மேல் ஊற்றிய மருந்துக்கு மாற்று பொன்னா கத்தான் இருக்க வேண்டும் என்று ஆராய்ச்சி செய்து அவள் கண்டு பிடித்து விட்டாள். பொன் அவன் சரீரத்தில் பட்

**இந்தியாவின் முதல் பரிசுத்த கரணி, நம் நாட்டின் பழக்க வழக்கமான சுத்தம் செய்யும் முறைகளைப் புரட்சிகரமாக மாற்ற**

டெட் செயற்கை முறையில் தயாரிக்கப்பட்ட ஒரு பரிசுத்த கரணி, சோப்பவுடர் அல்ல, சோப்பை ஆதார மாகக் கொண்டும் தயாரிக்கப் பட்டதல்ல, சோப்பைக் காட்டிலும் வெகு சீக்கிரத்தில் சுத்தம் செய்கிறது. அழுக்கு களையும், எண்ணெய்ப் பசை களையும் துப்புரவாக போக்கு கிறது. ஆயினும் டெட்டில் காரமான ரசாயனப் பொருள் கள் இல்லை. கைகளில் பட்டால் இதமாக இருக்கிறது. அது உயர்தர சலவை சோப்புகளைக் காட்டிலும், பரிசுத்தமான உடை களுக்கும் அவைகளின் நீடித்த உழைப்புக்கும் உத்திரவாதம் அளிக்கிறது.



டெட் பரிசுத்த கரணி யாதலால் தரை, பாத்திரங்கள், சுவர்கள் முதலிய எல்லா வற்றையும் சுத்தம் செய்கிறது. அது தரையையும், துணி மணிகளையும் வித்தியாசமில்லா மல் ஒரே மாதிரியாக சிறந்த முறையில் சுத்தம் செய்கிறது.






**ஸ்ரீ ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிட்., பம்பாய்**

சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான தியாகப் பிரும்மத்தின் ஆராதனை விழா திருவையாற்றில் 1958-ம் வருஷம் ஜனவரி 10, 11, 12 தேதிகளில் நடைபெறுகின்றது. இத்தப் புனித கைங்கர்யத்துக்கு நிதி உதவ விரும்புவோர் பாலக்காடு மணி அய்யர், சபா காரியதரிசி, 807, கீழவீதி, தஞ்சாவூர் என்ற விலாசத்துக்கு அனுப்பி வைக்கக் கோருகிறோம்.



டுக் கொண்டிருந்தால் அந்தக் கொடிய மருந்தின் வேகம் முறிந்து விடும். ஆனால் அதை எப்படிப் படும்படி செய்வது? சட்டைப் பையில் மந்திர சக்தியினால் பவுன் நாணயம் வரும்படி செய்து விட்டால் விரைவில் அவன் குணம் பெற்று விடுவான் என்று அவள் முடிவுக்கு வந்தாள். சித்தம் கலங்கியிருப்பவனுக்குத் தங்க நகை எதையாவது போட்டால் அவன் விஷயம் புரியாமல் வீசி எறிந்துவிடலாம் அல்லவா? ஆகவேதான் இந்த நூதன முறையைப் பின்பற்றினாள். சுமார் நாற்பத்தைந்து நாட்களுக்கு மால்கோஷின் சரீரத்தில் தங்கம் பட்டுக்கொண்டிருந்தால் மருந்தின் சக்தி குறைந்துகொண்டே வந்து தீர்ந்து விடும் என்பது அவளது ஆராய்ச்சி.

மால்கோஷ் சிறையில் ஒரு வாரத்துக்கு அடைபட்டபொழுதுதான் அவனுடைய சட்டைப் பையிலிருந்த மந்திர சக்தியும் போயிற்று. அவனுக்கு மயக்கமும் வந்து கீழே விழுந்தான். சிறையில் மயக்கமாக இரண்டு நாள் கண்களை விழிக்காமல் படுத்துக் கொண்டிருந்தான் மால்கோஷ். அரசாங்க வைத்தியர்கள் மால்கோஷைப் பரிசோதித்தார்கள். "இவன் உயிருக்கு ஒரு ஆபத்தும் இல்லை. மூளைக்குத் திடீரென்று ஒரு அதிர்ச்சி ஏற்பட்டாலோ அல்லது ஏற்பட்ட அதிர்ச்சி குறைந்து கொண்டு வரும் பொழுதோ இது மாதிரியான மயக்கம் வருவது உண்டு. சீக்கிரம் குணமடைந்து விடுவான்" என்று கூறினார்.

அவர் சொன்னது போலவே மூன்றாவது நாள் காலையில் மால்கோஷ் கண்ணை விழித்துப் பார்த்தான். அவனுக்கு ஒன்றுமே புரியவில்லை. ஏதோ அவன் தலைமீது வைத்திருந்த பாரத்தை யாரோ திடீரென்று எடுத்தது போலத் தோன்றியது. அவன் கண்களுக்கு மங்கலாகத் தோன்றிக் கொண்டிருந்த வெளிச்சம் வரவரப் பிரகாசமாகத் தோன்றியது. பழைய நினைவுகளெல்லாம் அவன் மனத்திரையில் குபுகுபு வென்று வந்தன. "கலா, கலா! கலா எங்கே?" என்று அவன் கதற ஆரம்பித்தான். சிறைக் கதவைப் பிடித்துப் பலமாக ஆட்டினான். தன் தலையைச் சிறைக் கதவில் முட்டிக் கொண்டான். ஆனால் என்ன பிரயோசனம்!

சிறை அதிகாரிகள் அவனை எவ்வளவோ கண்டித்தாலும் அவன் "கலா! கலா!" என்று கத்திக் கொண்டேதான் இருந்தான். "என்னைச் சிறையிலிருந்து விட்டுவிடுங்கள்! இப்பொழுதே என் கலாவைத் தேட வேண்டும்" என்று சிறை அதிகாரியைப் பார்த்துக் கத்தினான். "ஏன் அப்பா இப்படிக் கத்துகிறாய்? நீ கத்தினால் உன்னை விட்டு விடுவார்களா? இன்னும் நான்கு நாட்கள் ஆயிற்றென்றால் உன்னைத் தானாகவே விட்டுவிடுவார்கள்" என்று சொல்லிவிட்டுப் போனார் சிறை அதிகாரி.

* * *

**மா**ல்கோஷையே நேரில் சந்தித்தும் அவனை அடையாளம் தெரிந்து கொள்ளாமல் சென்ற கலா பறக்கும் ஜமக்காளத்தின் உதவியால் பல இடங்களுக்குச் சென்று தேடினாள். ஆனால் எவ்வளவு முயன்றும் மால்கோஷின் அடையாளமே தெரியவில்லை. ஆனால் அவளும் முயற்சியை நிறுத்தவில்லை.

கலா மேலே பறந்து சென்று கொண்டிருக்கும்பொழுது கீழே ஒரு பெரிய பட்டணம் தென்பட்டது. அப்பொழுது இரவு சுமார் ஏழு மணி இருக்கும். அவள் பல பெரிய கட்டடங்களையும் பல பிரகாசமான விளக்குகளையும் பார்த்தாள். அங்கே இறங்கி மால்கோஷைத் தேடலாம் என்று தீர்மானித்தாள்.

கீழே இறங்கியதும் வழக்கம்போல் மந்திரப் பறக்கும் ஜமக்காளத்தையும் முத்து மாலையையும் பைக்குள் போட்டுத் தோளில் மாட்டிக் கொண்டு பட்டணத்தைச் சுற்றிப் பார்க்கலானாள்.

கலா அந்தப் பட்டணத்தைப் பற்றி விசாரித்ததில் அந்தப் பட்டணம் மாஞ்சி நாட்டின் தலைநகரம் என்று தெரிய வந்தது. 'இவ்வளவு பெரிய பட்டணத்தில் மால்கோஷைப் பற்றி யாருக்கு என்ன தெரியப் போகிறது? இருந்தாலும் என்னால் முடிந்த வரையில் விசாரித்துப் பார்க்கிறேன்' என்று முடிவு செய்து கொண்டாள். முதலில் ஆஸ்பத்திரியிலும் போலீஸ் ஸ்டேஷனிலும் போய் விசாரித்தாள். பலன் இல்லை. பிறகு ஒரு பெரிய கட்டடத்துக்கு அருகில் வந்து நின்றாள். (தொடரும்)

# விசித்திரச் சலங்கை

**கதை: வாண்டு மாமா • படம்: பாபு**

மகேந்திரபுரியின் அரசர் மாணிக்கவர்மர் மகாவீரர். மக்களின் அன்புக்குப் பாத்திரமானவர். அவருடைய அருமை மகள் மல்லிகா-அழகே உருவானவள். ஒரு நாள் மகளுடன் நகரைச் சுற்றிப் பார்க்கச் சாரட்டில் கிளம்பினர் மன்னர். மன்னரின் வருகையை அறிவித்து எச்சரிக்கை செய்து கொண்டு வீரர்கள் முன்னல் வந்தார்கள்....













பெரியவரே! சாரட்டில் ஏறிக் கொள்ளுங்கள். என்னுடன் அரண்மனைக்கு வந்து சில நாள் இருந்து செல்லலாம்.....


அரசே! ஏழைகளிடம் நீங்கள் காட்டும் அன்பையும் ஆதரவையும் கண்டு நான் ஆனந்தம் அடைகிறேன். நீங்கள் நீடூழி வாழ்க!


அரண்மனையில்
மன்னர் மன்னவா! உங்கள் அன்பு உள்ளத்துக்கு ஏற்ற பரிசு ஒன்றைத்தர நான் தீர்மானித்திருக்கிறேன்.


நான் பரிசு தருகிறேன் என்று சொல்வது வியப்பாக இருக்கிறதா, அரசே? நீங்கள் நினைப்பது போல நான் தள்ளாடும் தொண்டு கிழவனல்ல...!


இதோ, இது தான் என் உண்மை வடிவம். காளிங்கன் என்பது என் பெயர்....


நான் ஒரு மந்திரவாதி. என் காணிக்கையாக இதை ஏற்றுக் கொள்ளுங்கள். எண்ணியதைக் கொடுக்கும் இது ஒரு மந்திரத் தலைப்பாகை..
தொடரும்...




எல்லாக் குழந்தைகளும்
விரும்புவது மிக எளிதில்
ஜீரணமாகும் கௌ & கேட்
டாக்டர்களும் தங்களது
சொந்தக் குழந்தைகளுக்கு
தேர்ந்தெடுக்கும் உணவும்
அதுவே இன்றைய உலகில்
கௌ & கேட்டே தலைசிறந்த
உணவாகத் திகழ்கிறது என்
பதற்கு இதுவே தக்க சான்
றாகும். உங்கள் குழந்தைக்கு
கௌ & கேட்டை வற்புறுத்
திக் கேளுங்கள்.

5465

**COW & GATE MILK FOOD**

*The* FOOD *of* ROYAL BABIES

# கான்ஸ்டபிள் கந்தசாமி

முதல் அத்தியாயம்

## வந்தான் கந்தசாமி!

அதிகாலை ஆறு மணி இருக்கும். கீழ்வானத்தில் அப்போதுதான் சூரியன் எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தான். வான வெளியில் புகை மூட்டம் போல் கவிந்திருந்த மூடுபனி சிறிது சிறிதாகக் கலையத் தொடங்கியது. கோட்டை மைதானத்தில் வெளியூர் பஸ் நிலையத்தின் தினசரி நடவடிக்கைகள் வழக்கம் போல் அருணோதயத்துக்கு முன்னமே ஆரம்பமாகி விட்டன.

இன்னும் ஒரு மணி ஒன்றரை மணி நேரம் கழித்துப் புறப்படப் போகும் பஸ்ஸுக்கு ஆள் சேர்க்க இப்போது முதலே "குன்னத்தூர், குன்னத்தூர்! வேளச்சேரி, சேலையூர்!" என்று கண்டக்டர்கள் அபயக் குரல் கொடுத்துக் கொண்டிருந்தனர்.

ஏ.கே.பட்டுசாமி



இடையிடையே அவர்கள் 'பூம் பூம்' என்று ஹாரனை அமுத்தும்போதெல்லாம் மூட்டை முடிச்சுக்களோடு விரைந்து வந்துகொண்டிருந்த பாமரப் பிரயாணிகள் "ஐயோ, பூடிச்சு, பூடிச்சு! பஸ் பூடிச்சு!" என்று விழுந்தடித்துக்கொண்டு அழுகின்ற குழந்தைகளைத் தரதர வென்று இழுத்துக் கொண்டு ஓடி வந்தனர். ஒரு புறத்தில், வெளியூர் வண்டிகள் வந்தால் இரண்டணாக் காசாவது கிடைக்காதா என்ற அவல நம்பிக்கையுடன் வழிமேல் விழி வைத்துக் கொண்டிருந்த கூலிக்காரர்கள், தங்கள் கிழிசல் துணிகளினால் தலையையும் உடம்பையும் மூடிப் போர்த்திக் கொண்டு மிகவும் பரிதாபமாகக் காட்சியளித்தனர்.

"டீ, சூடா டீ! பெஸல் டீ!" என்று ஒய்யாரமாகக் கூவிய வண்ணம் ஆவி கிளம்பும் தேநீர் தூக்குப் பாத்திரத்துடன் சுற்றி வந்த ஆசாமிக்கு அந்தக் குளிரில் வெகு நல்ல வியாபாரம். இந்தப் பஞ்ச காலத்திலும் கூடக் காலணாவுக்கு 'டீ' கொடுக்கக் கூடிய தர்மாத்மா அல்லவா அவன்!

இந்தச் சூழ்நிலையிலே தான், பஸ் ஸ்டாண்டிலிருந்த குண்டு குழிகளில் ஏறி இறங்கி ஒரு குலுக்குக் குலுக்கிய வண்ணம் வந்து நின்றது சாலையூரிலிருந்து வரும் பஸ்.

ஒடுங்கி நின்றுகொண்டிருந்த கூலிக்காரர்கள் போர்வையோடு குளிரையும்



...தறி விட்டு மின்னல் வேகத்தில் ...ல்லை நோக்கிப் பாய்ந்தனர். பிர...ணிகள் இறங்கத் தொடங்கினர். ...ஸ்ஸின் மேல்தளத்திலிருந்த மூட்டைகளும் பெட்டிகளும் அவசரமாகக் கீழே இறக்கப்பட்டன. டிரைவரின் ஆசனத்துக்கு அருகில் போலீஸ் உடையில் உட்கார்ந்திருந்த கான்ஸ்டபிள் கந்தசாமி கம்பீரமாகக் கீழே இறங்கினான்.

பார்த்தவுடன் மனத்தில் பதிந்து விடும் தோற்றம். சுமார் இருபத்தைந்து வயதிருக்கும். ஐந்தே முக்காலடி உயரம். உயரத்துக்கேற்ற பருமன். மாநிறமான முகத்தில் முறுக்கி விட்ட மீசை. அவன் சிரிக்கும்போது கருமேகத்திலிருந்து எட்டிப் பார்க்கும் வெண்ணிலவைப் போல் மீசைக்கு இடையே தெரியும் வெண்மையான பற்கள். மிகவும் கூர்மையான பார்வையுள்ள பளபளப்பான கண்கள்.

கந்தசாமி தன் 'கிரீட'த்தைத் தலையில் தூக்கிவைத்துக்கொண்டு மைதானத்தை ஒரு நோட்டம் விட்டான். அவனை வரவேற்க அங்கே யாரும் வரவில்லை என்பதால் அவன் மனமுடைந்து போகவில்லை.

ஆனால் வண்டிக்கு மேல் வைத்திருந்த அவனது படுக்கையை யாரோ எடுத்து மண்ணில் போட்டு விட்டார்கள் என்பதைக் கண்டபோதுதான் அவனுக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது. போலீஸ்காரன் படுக்கைக்கா இந்த மரியாதை! எதிரே அவன் கண்ணில் பட்ட கூலிக்காரன் மீது அவன் கோபம் திரும்பியது. கண்களை உருட்டி அவனை விழித்து நோக்கினான்.



"ஏய்! இந்தப் படுக்கையை யார் இப்படித் தூக்கிப் போட்டது?" என்று கேட்டான்.

"நான் இல்லீங்க..." என்று அஞ்சிய வண்ணம் பதிலளித்தான் அந்தக் கூலியாள்.

"தூக்குடா, தலையிலே!" என்று கையை ஓங்கிக் கொண்டே

விரட்டினான் கந்தசாமி. கூலிக்காரன் திரியை நொந்த வண்ணம் அதைத் தலையில் தூக்கி வைத்துக் கொண்டான். "உம், நட!" என்று அதட்டிக் கொண்டே அவனை முன்னால் நடக்க விட்டுப் பின்தொடர்ந்தான் அந்தப் போலீஸ் வீரன்.

மைதானத்துக்கு அப்பால் சாலையோரத்தில் ஒரு கிழக் குதிரை வண்டி நின்று கொண்டிருந்தது. பின்னங் கால்கள் இரண்டும் ஒன்றோடொன்று முட்டிக் கொண்டு எலும்புக் கூடாகக் காட்சியளித்த அந்தப் பஞ்சகல்யாணி தன் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு அரைத் தூக்கத்தில் இருந்தது. வண்டிக்காரக் கிழவன் ஒரு சால்வையைப் போர்த்திக் கொண்டு 'பிளாட்பாரத்'தில் அமர்ந்திருந்தான்.

கந்தசாமி குதிரையை ஒரு முறை மேலும் கீழும் பார்த்து விட்டு, "பெரியவரே, இது குதிரை தானே?" என்று கேலியாகக் கேட்டான்.

கிழவன் சிரித்துக் கொண்டே எழுந்து, "என்ன அப்படிக் கேட்கிறீங்க! சும்மா மெயில்கணக்கா பறக்குமுங்க!...எங்கே போவணும்?" என்று கேட்டான்

"வண்டியிலே கட்டி வைக்காட்டி அது இருக்கிற நிலைக்குக் காற்றிலே பறக்கத் தான் செய்யும்!" என்று சொல்லிக் கொண்டே வண்டியில் ஏறிக் கொண்டான் கான்ஸ்டபிள் கந்தசாமி.

கூலிக்காரன் அவனது படுக்கையை வண்டியில் வைத்தான். "மந்தாரப் பேட்டைக்கு விடுங்க!" என்று கந்தசாமி வண்டிக்காரனுக்கு உத்தரவிடவும், வண்டி நகர்ந்து சென்றது.

கூலியாள் மெதுவாக, "ஸார்!" என்றான், தலையைச் சொறிந்தவாறே.

"போடா அப்பாலே, ஐயா குடுத்ததை வாங்கிட்டுப் போவையா, காலங்காத்தாலே பஞ்சப்பாட்டு பாடிக்கிட்டு நிக்கிறான்!" என்று விரட்டினான் வண்டிக்காரன். கந்தசாமி சிரித்தான்.

குதிரை சப்பையானாலும் சாட்டை அடி களீர் களீரென்று விழவும் துள்ளித் துள்ளி ஒரு தனி நடை போட்டுக் கொண்டு ஓட ஆரம்பித்தது.

கந்தசாமியின் பெற்றோர் அவனது சிறு வயதிலேயே இறந்து விட்டனர். அக்காள் முத்தம்மாள் தான் அவனைச் செல்லமாக வளர்த்து எட்டாம் வகுப்பு வரையில் படிக்க வைத்தாள். முத்தம்மாளின் கணவன் ராணுவத்தில் சிப்பாயாக இருந்து ஓய்வு பெற்றவன். கணவன் ஒரு ராணுவ வீரன் என்பதில் முத்தம்மாளுக்கு எவ்வளவோ பெருமை. நடக்காத யுத்தங்களில் அவன் புரியாத வீரச் செயல்களைக் கற்பனை செய்து அவள் தனது சிநேகிதைகளிடம் பெருமையடித்துக் கொள்ளாத நாள் இல்லை. 'சிப்பாய்க்காரன் வீடு' என்றால் அவர்களது வட்டாரத்தில் சின்னக் குழந்தைக்குக்கூடத் தெரியும். கணவனைப் போலவே தம்பியும் எதிர்காலத்தில் ராணுவத்திலோ போலீஸிலோ ஒரு உயர்ந்த பதவிக்கு வர வேண்டுமென்று அவள் எவ்வளவோ கோட்டை கட்டினாள். ஆனால் கந்தசாமி எட்டாம் வகுப்போடு படிப்புக்கு முற்றுப்புள்ளி வைத்து விட்டு வீட்டில் தங்காமல் ஊர் சுற்றத் தொடங்கியதும் அவள் அடைந்த ஏமாற்றத்துக்கு அளவில்லை.

கணவன் உயிரோடிருந்த வரையில் குறைவின்றி நடந்து வந்த குடும்ப நிர்வாகம், திடீரென்று விஷ ஜுரத்தில் இரண்டு வருடங்களுக்கு முன்னால் அவன் இறக்கவும், கஷ்ட தசையை அடைந்தது. எனினும் சாமர்த்தியசாலியான முத்தம்மாள் பால் வியாபாரம் செய்து ஏதோ ஒரு விதமாகச் சமாளித்து வந்தாள். ஆனால், தம்பி குடும்பப் பெயரை நிலைநாட்டுவான் என்று அவள் கண்ட கனவு என்ன ஆவது?

கடைசியாக, அவள் யார் யாரையோ சிபார்சு பிடித்துக் கந்தனுக்குப் போலீஸ் உத்தியோகத்துக்கு ஏற்பாடு செய்து விட்டாள். வேலூரில் பயிற்சிக் காலம் முடிந்ததும் சாலையூர் 'அவுட் போஸ்ட்'டில் தாற்காலிகமாக மூன்று மாதம் வேலைக்கு அனுப்பப்பட்டான். பிறகு சென்னை மந்தாரப்பேட்டைக்கே மாற்றல் உத்தரவு கிடைத்து விட்டது.

அவன் வரும் தேதியைக் குறிப்பிட்டு அக்காளுக்கும் கடிதம் எழுதியிருந்தான். சொந்த ஊருக்கே திரும்புகிறோம், அதுவும் போலீஸ் வீரனாக—என்ற நினைவில் கந்தசாமி பெருமிதம் அடைந்தான். கொள்ளைக்காரர்கள், கொலைகாரர்கள், கேடிகள், சைக்கிளில் விளக்கு இல்லாமல் போகிறவர்கள் ஆகிய எத்தனை பேர்கள் அவன் தலையைக் கண்டதும் நடுங்கப் போகிறார்கள்! எத்தனை பேர்கள் அவனைத் தெருவில் பார்த்ததுமே பல்லைக் காட்டிச் சலாம் போடப் போகிறார்கள்!- இவ்வாறு எண்ணியதுமே அவனது உடம்பு புல்லரித்தது. தொண்டையை ஒருமுறை அவன் கனைத்தான்.

"வண்டிக்கார ஐயா! சமீபத்திலே இங்கே ஏதோ ஒரு பெரிய கொலை நடந்துச்சாமே, மேல்கொண்டு என்ன ஆச்சு, தெரியுமா?"

கிழவன் லகானைச் சற்றுத் தளர்த்தி விட்டுத் திரும்பிப் பார்த்தான்.

"எந்தக் கொலையைச் சொல்கிறீங்க?"

# பார்கோ

## டீசல்கள்

பார்கோ டீசல் டிரக்குகளை உபயோகிக்க மிகவும் சிறந்தவை, ஏனெனில் அவைகளை ஓட்டும் செலவு குறைவு. அதிகப்படியான பளுவை ஏற்றிச் செல் லுவதற்கென்றே அவைகள் பிரத்தியேக மாகத் தயாரிக்கப் படுகின்றன.



சுமை ஏற்றிச்செல்ல 163 அங் குல வீல்பேஸ் டிரக் சாஸிஸ்

பத்திரமாயும் சுகமாயும் பிரயாணம் செய்ய பார்கோ டீசல் பஸ்களை உபயோகியுங்கள். ஏனெனில் அவைகளை ஓட்டுவது சுலபம் ஓட்டும் செலவு குறைவு நீடித்து உழைப்பவை



பிரயாணிகளை ஏற்றிச்செல்ல 190 அங்குல வீல்பேஸ் பஸ் சாஸிஸ்

டீலர்கள் :

M/s. T. V. சுந்தரம் அய்யங்கார் & சன்ஸ் (பிரைவேட்) லிமிடெட்
மேல வெளி வீதி - மதுரை

M/s. சுந்தரம் மோட்டார்ஸ் (பிரைவேட்) லிமிடெட்
மவுண்ட்ரோடு - மதராஸ்-2

முன்னேற்றத்துடன் தயாரிப்பவர்கள்

தி
பிரிமியர் ஆட்டோமொபைல்ஸ் லிமிடெட்
பம்பாய்

SISTA'S-PAL-267-TAM

"என்னய்யா பெரிய கொலைன்னு சொல்கிறேன்...!"

"கொலையிலே பெரிய கொலை வேறே. என்னக் கொலை வேறுங்களா? சென்னைப் பட்டணத்திலே தினம் தினம் எத்தனையோ அக்கிரமம் நடக்குது! உங்களைப் போல இருக்கிறவங்க சரியாகக் கவனிச்சால்தானே உண்டு?"

"ஹூம்; இதுவரையிலே என்னை வெளியூரிலே அல்ல போட்டிருந்தாங்க! இனிமேல் பாருங்க, இந்த மந்தாரப் பேட்டை டிவிஷன் என்னமாத்தான் அலறப் போகுதுன்னு! அந்த ஊரிலே போன மாசம் பாருங்க, ஒரு பெரிய பாங்கிக் கொள்ளை நடந்தது. பாதி ராத்திரியிலே புகுந்து கொள்ளையடிச்சுட்டாங்க. பின்னாலேயே ஒரு பெரிய தோப்பு! கொள்ளைக்காரங்க தோப்பிலே இருக்காங்கன்னு நல்லாத் தெரிஞ்சும் ஒரு பயல் தைரியமாக உள்ளே போய்ப் பிடிக்கப் பயந்து செத்தானுங்க. சே! நீங்களும் ஒரு மனுஷங்களான்னு நான்போனேன்! தன்னந்தனியாகப் போய் அத்தனை பேரையும்வளைச்சுக் கட்டிட்டேன், பெரியவரே! பேப்பரிலே பார்த்திருப்பீங்களே?..."



கிழவன் ஆச்சரியத்தோடு அவனைப் பார்த்தான். "நான் பேப்பர் படிக்கிறதில்லீங்க. எந்த ஊரிலே நடந்த கதைங்க இது?"

"சாலையூர் தெரியுமா?"

"சாலையூரா!... நம்ம ஊர்ப் பக்கமாச்சே அது! அங்கே ஏதுங்க பாங்கி?"

ஏது? கிழவன் எமகாதகனாக இருப்பான் போலிருக்கிறதே என்று எண்ணிய கந்தசாமி உடனே சாமர்த்தியமாகப் பேச்சை மாற்றினான்.

"அந்த ஊரிலே பாங்கி இருக்கிறது என்றா சொன்னேன்! இங்கே பட்டணத்திலே எங்கேயோ கொள்ளை அடிச்சுட்டு அங்கே வந்து ஒளிஞ்சுக்கிட்டாங்கையா என்று சொன்னேன்..."

"ஓஹோ! இருக்கலாமுங்க!"

"சரி, சரி, உன் குதிரை பின்னுக்குப் போகுதா? கவனி ஐயா! நீயும் உன் வண்டியும்!" என்று வெறுப்போடு கூறினான் கந்தசாமி.

முத்தம்மாள் குடியிருந்த வீடு ஒரு சிறிய சந்தில் இருந்தது. நாட்டு ஓடுகள் வேய்ந்த பழைய காலத்துக் கட்டடம். காரைப்பூச்சுகள் இடிந்து செங்கற்கள் வெளி நீட்டிக் கொண்டிருந்த வெளித் திண்ணைகள், ஒரு இடைகழி, இருண்ட கூடத்துக்குப் பின்னால் எதிரெதிராக இரண்டு அறைகள், முற்றத்துக்கு அப்பால் பின்கட்டில் ஒரு சமையலறை—இவ்வளவுதான் வீட்டின் அமைப்பு. பின்புறத்தில் தாறுமாறாக மண்டிக் கிடந்த ஒரு விசாலமானதோட்டம் இருந்தது. ஒரு மூலையில் வாழை மரங்கள், இன்னொரு பக்கம் சுரைக் கொடிகள், நடுவே ஒரு கிணறு: கிணற்றுக்குச் சற்று அப்பால் ஓங்கி வளர்ந்த இரண்டு தென்னை மரங்கள், குறுக்கே கழிவுத் தண்ணீர் ஓடும் சாக்கடைக் கால்வாய் ஆகிய இத்தனை வைபவங்களுக்கும் இடையே தென்னை மரத்தில் கட்டப்பட்டிருந்த எருமை மாடு அந்தத் தோட்டத்துக்கே சோபையைக் கொடுத்துக் கொண்டிருந்தது.

முத்தம்மாள் அன்று அதிகாலையிலேயே எழுந்து விட்டாள். தன் வீரத் தம்பி இன்று ஊரிலிருந்து வரப் போகிறான் என்ற மகிழ்ச்சியில் அவளுக்குத் தலைகால் புரியவில்லை. நாற்பத்தைந்து வயதைத் தாண்டி விட்டோம் என்கிற நினைவே இன்றி இளம் பெண்ணைப் போல் ஓடி ஓடி வேலை செய்தாள். அவளது பரபரப்பில் முன்னால் செய்ய வேண்டிய காரியங்களைப் பின்னால் செய்து, செய்ய நினைத்தவற்றை மறந்து, கூடத்தில் போட்ட கோலங்களைத் தன்னை மறந்து பெருக்கித் தள்ளி, தன் புத்தியைத் தானாகவே சபித்துக் கொண்டு இங்குமங்கும் வேகமாக ஓடிக் கொண்டிருந்தாள்.

அடிக்கொரு முறை வீதியில் வண்டிச் சத்தம் கேட்கும்போதெல்லாம் முகத்தில் கோல மாவும் கரியுமாக, பருத்த சரீரத்தைத் தூக்கி, அவள் ஓடி வந்த காட்சி மிகப் பரிதாபகரமாக இருந்தது.

வாசலில் தண்ணீர் தெளித்துப் பெருக்கிக் கொண்டே சுற்றுமுற்றும் பார்த்தாள். "உன் தம்பி வரப் போகிறானா?" என்று யாராவது கேட்க மாட்டார்களா என்ற ஏக்கம் அவளது மனத்தில் துடித்தது. ஆனால் அந்தக் காலை நேரத்தில் தங்கள் வேலைகளை விட்டு இவளிடம் வந்து குசலம் விசாரிக்க வேண்டும் என்ற பண்பு யாருக்குமே உதிக்க வில்லை. பக்

கத்து விட்டு மருதம்மாளிடம் விரோதம் இல்லாவிட்டால் முத்தம்மாளே ஓடிப் போய் அவளிடம் சொல்லி யிருப்பாள். ஆனல் அந்த ராங்கிக்காரி இவளைச் செல்லாக் காசுக்கும் மதிப்பதில்லை. 'ஏதடா சிப்பாய்க்காரன் வீடாயிற்றே?' என்ற எண்ணம் துளிக்கூட இல்லாத ஜன்மம் அது! அந்த வட்டாரத்திலேயே அவள் ஒருத்திதான் முத்தம்மாளை அலட்சியப்படுத்திப் பேசுபவள். போதாக்குறைக்குப் போன வாரம் அவளது அண்ணன் மகன் ஒருவன் ஊரி லிருந்து வந்து விட்டானென்று, ஏதோ சீமையிலிருந்து மகாராசா வந்துவிட் டது போல் அவள் ஊர் முழுதும் சள சளவென்று பேசிக் கொண்டு திரிந்த தைக் கண்டு முத்தம்மாளுக்கு ஒரே எரிச்சலாக இருந்தது. 'தம்பி கந்தசாமி யின் கால் தூசு பெறுவானு அந்தத் தங்கவேலு? ஆகட்டும், இது போலீஸ் காரன் வீடு என்பதைக் காண்பித்து விடு கிறேன்' என்று மனத்தில் கறுவிக் கொண்டே துடைப்பத்தை 'விருக் விருக்'கென்று ஓட்டிப் பெருக்கினுள்.

'அம்மே!' என்று குரல் கொடுத்தது, தோட்டத்தில் இருந்த எருமைக் கன்று.

''ஐயையோ! இன்னும் மாடு கறக் கவே இல்லையே! என் புத்தியைச் செருப் பால் அடிக்கணும். தம்பி வந்ததும் வராததுமாக, 'காப்பி வச்சியா அக்கா' என்று கேட்டுக் கொண்டே வருவானே'' என்று தன்னைத்தானே திட்டிக் கொண்டு கையில் துடைப்பத்துடன் புழக்கடைப் பக்கம் ஓடினுள். அங்கு அவள் கண்ட காட்சி அவளைத் திடுக்கிட வைத்தது.

கன்றுக்குட்டி அவிழ்த்து விடப்பட்டு ஊட்டிக் கொண்டிருந்தது. அருகில் அடுத்த வீட்டு மருதம்மாளின் ஏழு வயது மகன் ஒரு வாழைப் பழத்தைத் தின்ற வண்ணம் நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான்.

''அட, நீ கட்டையிலே போக!'' என்று திட்டிக்கொண்டே ஓடிப் போய்ச் சிறுவனின் முதுகில் சுளீரென்று ஒரு அறைவைத்தாள் முத்தம்மாள். சிறுவன் வாழைப் பழத்தைக் கீழே போட்டு விட்டு, ''அம்மாடி!'' என்று அலறினுன்.

அவ்வளவுதான்! அடுத்த வீட்டி லிருந்து பூதம் புறப்பட்டுவிட்டது. ஆம், பூதாகாரமான தோற்றமுடைய மருதம் மாள் புடவையை இழுத்துச் செருகிக் கொண்டு பாய்ந்து வந்தாள். மறுகணம் அத்தோட்டம் யுத்தரங்கமாக மாறியது.

கைகலக்கவில்லை என்ற ஒரு குறையைத் தவிர மற்றப்படி இடி முழக்கம் போன்ற குரலொலியோடு கிளம்பிய சுடுசரங்கள் ஒன்றையொன்று மோதிப் பூமியையே பயங்கரமாக அதிரச் செய்தன.

இதேசமயம் மருதம்மாளின் வீட்டுக் குள்ளிருந்து ஒரு கிருதா கிராப்புக்காரன் அசைந்தாடிக் கொண்டே வந்தான்.

தங்கவேலுவுக்குச் சுமார் முப்பது வயது இருக்கும். பனை மரம் போன்ற உயரம், கட்டுமஸ்தான உடல், சிவந்த கண்கள், அப்பொழுதுதான் விழித் தெழுந்தான் என்பதற்கு அடையாள மாக எண்ணெய் படிந்த முகம். கையில் பல் குச்சியுடன் புழக்கடைக்கு வந்து சேர்ந்தான் அவன்.

''என்ன அத்தை இது? காலையிலே அந்தச் சனியனோடு என்ன வம்பு செய்கிறாய்?'' என்றான்.

முத்தம்மாளுக்குச் 'சொரே'ரென்றது. அவளது ரத்தம் கொதித்தது. 'அவன் வாழ்ந்த வாழ்வென்ன? இருந்த இருப் பென்ன? அவளைப் போய் ஒரு தடியன் 'சனியன்' என்று சொல்லவாயிற்றே' என்று குமுறியது உள்ளம்.

''யாரைப் பார்த்துச் சனியனென்கிறே? நாக்கை அடக்கிப் பேசு!'' என்று உறுமினுள் அவள்.

''இல்லாவிட்டால் தலையைக் 'கிறுக்' குன்னு வாங்கிடுவையோ?'' என்று ஏளனமாகக் கொக்கரித்தான் அவன்.

''தலையை வாங்குகிறதும் வாங்காத தும் இன்னும் கொஞ்ச நேரத்திலே தெரி யப்போகுது இரு! என் தம்பி வரட்டும்!'' என்றுள் தனக்கு வந்த துக்கத்தை அடக் கிக் கொண்டு.

''உன் தம்பி இந்தப் பட்டணத்துக் கவர்னரில்லே!'' என்று கேட்டு மேலும் அவளது கோபத்தைக் கிளறிவிட்டான் தங்கவேலு.

இதே சமயம் வாசலில் குதிரை வண்டி வந்து நின்றது. கந்தசாமி இறங்கினுன். முத்தம்மாளுக்குப் போலீஸ் உடையில் இறங்கிய அந்தக் கம்பீர உருவத்தைக் கண்டதும் உற்சாகம் கரைபுரண்டது. கூடவே மனத்தில் அடக்கி வைத்திருந்த துக்கமும் மடை திறந்து கொண்டது.

''தம்பீ!'' என்று கதறினுள் அவள்.

''என்ன அக்கா!'' என்று பதிலுக்குக் குரல் கொடுத்துக்கொண்டேமுற்றத்தை இரண்டுஎட்டில் தாண்டிப் புழக்கடையை நோக்கி ஓடிவந்தான் கந்தசாமி.

''சபாஷ்! இவருதானு உன் சூரத் தம்பி! அடேயப்பா பெரிய போலீஸ் புலியல்ல!'' என்று ஏளனமாகச் சிரித் தான் தங்கவேலு.

''பார்த்தியா தம்பி!'' என்று கந்த சாமியின் முகத்தை நம்பிக்கையோடு பார்த்தாள் முத்தம்மாள்.

கந்தசாமியின் முகம் சிவந்தது. மீசை துடித்தது. கோபத்தால் கைகால்கள் நடுங்கின. சட்டைக் கைகளை மடித்து

முண்டாவுக்கு மேல் ஏற்றிய வண்ணம் ஆக்ரோஷத்துடன், ''ஏய்? யாரைப் பார்த்தடா பேசறே, மரியாதை கெட்ட பயலே!'' என்று கர்ஜித்தவண்ணம் தங்கவேலுவை நோக்கிப் பாய்ந்தான்.

அவன் பாய்ந்த பாய்ச்சலைக் கண்டு தன் தம்பி இவ்வளவு பெரிய வீரனு என்று முத்தம்மாள் பிரமித்துப் போனுள். ஆனல் அடுத்தகணம் அவளது ஆனந்தத்தில் மண் விழுந்தது. சற்றும் எதிர்பாராத விதமாகக் கந்தசாமி தடாரென்று வெட்டிச் சாய்த்த மரம் போல் குப்புற விழுந்தான்.

மருதம்மாளின் பையன் வீசி எறிந்திருந்த அற்ப வாழைப் பழத் தோல் அந்த வீரனைச் சதி செய்துவிட்டது!

தங்கவேலு, ''சபாஷ்! சபாஷ்! போலீஸ் புலி தண்டால் எடுக்குது!'' என்று நையாண்டி செய்து கைகளைக் கொட்டி நகைத்தான். முத்தம்மாளுக்குத் துயரமும் அவமானமும் தொண்டையை அடைத்தன. கந்தசாமியை மெதுவாகப் பிடித்துத் தூக்கினுள்.

''இரு, அக்கா! சொல்கிறேன்! விடு என்னை. இந்தப் பசங்களுக்கு ஒரு சரியான பாடம் கத்துக் குடுக்காமே..'' என்று அவன் திமிறினுன்.

அவனது முகவாய்க் கட்டையில் சிராய்த்து ரத்தம் கசிந்து கொண்டிருந்தது. அவன் திமிற, அவள் 'வேண்டாம் வேண்டா'மென்று தடுத்து இழுக்க, வெகு பாடுபட்டு அவனைச் சமாதானப் படுத்தி உள்ளே இழுத்துக் கொண்டு வருவதற்குள் முத்தம்மாளுக்குப் போதும் போதுமென்றாகி விட்டது.

அவனைக் கூடத்துக்கு அழைத்துக் கொண்டு வருவதற்கும், வீதியில் பத்திரிகைக்காரச் சிறுவன், ''மந்தாரப்பேட்டையில் பாங்கிக் கொள்ளை! காலைச் செய்தி ஒரணு!'' என்று கூவுவதற்கும் சரியாக இருந்தது.

கந்தசாமி திடுக்கிட்டான். அவன் கீழே விழுந்து அடிபட்டுக் கொண்டதையும் மறந்து அவனது உடம்பில் ஒரு பரபரப்பு ஏற்பட்டது.

## இரண்டாம் அத்தியாயம்

# கிழட்டுச் சிங்கம்

''கூடிகு சிறுத்தாலும் காரம் போகாது'' என்ற பழமொழி முத்துப் புலவர் விஷயத்தில் நூற்றுக்கு நூறுபங்கு உண்மையாக இருந்தது. வயது கிட்டத்தட்ட அறுபதை எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தது; உடல் தளர்ந்து விட்டது. வீட்டில் இரண்டாம் தாரத்திடம் அவர் பேச்சு எடுபடவில்லை. கருட்டுக்கு ஓரணுக் காசு வேண்டுமென்ருலும் அவளது கையை எதிர்பார்த்துக் காலம்தள்ளும் நிலையில்தான் இருந்தார். ஆனுலும் புலமையில் அவருக்கு இருந்த ஆர்வம் மட்டும் குறையவே யில்லை.

பர்மா நாட்டில் மாந்தலைக்கு அருகில் உள்ள தேக்கு மர எஸ்டேட் ஒன்றில் அவரது தமையனுர் உத்தியோகம் பார்த்து ஏராளமாகப் பணம் திரட்டினுர். புலவரும் அவரோடு கூடவே குடும்பத்தோடு சீரும் சிறப்புமாகத்தான் வசித்து வந்தார். ஆனல் அண்ணனைப் போல் அவருக்கு வியாபார விஷயத்தில் மனம் செல்லவில்லை. இலக்கியம், தமிழ்ப் புலமை என்று இப்படியே காலம் கழித்த அவருக்கு. அங்கிருந்த தமிழ்ப்பள்ளியில் ஆசிரியர் வேலை கிடைத்தது. அங்கு வட்டிக் கடை வைத்திருந்த நாட்டுக் கோட்டை நகரத்தார்களுக்கு அவரிடம் பெருமதிப்பு. புலவரையாவைத் தெரியாதவர்கள் அந்த வட்டாரத்தில் இல்லை.

தமிழ் அபிமானம் மிகுந்த செட்டிப் பிள்ளைகளிடம் ஒழிந்த வேளைகளில் இலக்கியச் சர்ச்சைகளில் ஈடுபட்டுத் தமது புலமையினுல் அவர்களை வியப்பில் ஆழ்த்துவார். அவர்கள் மீது கவிதைகள் இயற்றுவார். அவர்களும் தாராளமாகப் பரிசில் வழங்குவார்கள்.

வாழ்நாள் முழுவதும் பிரம்மச்சாரியாகவே காலங்கழித்த அவரது தமையனுர் திடீரென்று மாரடைப்பினுல் இறக்கவும் அவர் தேடி வைத்த செல்வம் முழுவதும் புலவரைச் சேர்ந்து விட்டது. இரண்டாவது உலக யுத்தம் வந்தது. இம்பாலிலிருந்து தாக்கிய படைகள் மாந்தலையில் முதல் குண்டைப் போட்டதும் புலவர் குடும்பத்தோடு சொந்த நாட்டைப் பார்க்கக் கிளம்பி விட்டார். ஆனல் அங்கிருந்த வீடு வாசல் நிலபுலங்களையெல்லாம் அப்படியே விட்டுவிட்டுக் கையில் கிடைத்த ரொக்கத்தையும் நகைகளையும் மாத்திரம்தான் அவரால் கொண்டுவர முடிந்தது.

சென்னைக்கு வந்ததும் அப்போது மலிவாகக் கிடைத்த ஒரு சிறு வீட்டை விலைக்கு வாங்கிக்கொண்டு குடியேறினுர்.

புலவர் தமது வாழ்க்கையில் செய்த மகத்தான தவறு ஒன்று. அதுதான் அவர் கண்ணம்மாளை இரண்டாந்தாரமாகக் கலியாணம் செய்து கொண்டது.

பர்மாவில் இருக்கும் போதே பிரசவத்துக்குப் பிறகு அவரது முதல் மனைவி இறக்கவும் அங்கிருந்த கண்ணம்மாளின் குடும்பத்தார் அவளைப் புலவரின் தலையில் கட்டி விட்டனர். முதல்தாரத்துக்கு ஒரே ஒரு பெண் குழந்தை இருந்தது. கண்ணம்மாளின் பெயரைச் சொல்லிக் கொள்ளச் சந்ததியே ஏற்படவில்லை.

பர்மாவிலிருந்த வரையில் கண்ணம்மாளும் கணவனிடம் மரியாதையாகத் தான் இருந்தாள். ஆனால் சென்னைக்கு வந்த பிறகு கொஞ்சம் கொஞ்சமாக அவளது போக்கில் மாறுதல் ஏற்பட்டது. புலவருக்கு எங்கேயும் கைகட்டிச் சேவை செய்ய விருப்பமில்லை. தமது புலமையைக் கொண்டே பிழைத்து விடலாம் என்று நம்பினார் அவர். தாம் இயற்றிய கவிதைகளையெல்லாம் தொகுத்துப் பிரசுரிக்க வேண்டியதுதான் தாமதம், மக்கள் 'நீ நான்' என்று ப்போட்டி போட்டுக் கொண்டு அவற்றை வாங்கி விடுவார்கள்; நாலு தலைமுறைக்கு வேண்டிய செல்வம் மளமள வென்று சேர்ந்து விடும் என்று மனக் கோட்டை கட்டினார் அவர்.



சொந்தச் செலவில் அச்சடித்து முதல் தொகுதியை வெளியிட்ட சமயத்திலேயே கண்ணம்மாள் பலமாக ஆட்சேபித்தாள். அதற்கேற்றாற் போல் அச்சடித்த புத்தகங்களில் ஒரு பிரதியைக்கூட ஏனென்று கேட்பாரில்லை. ஆனால் புலவர் இதனால் சோர்ந்து போகவில்லை. மேலும் இரண்டு மூன்றுதொகுதிகளாவது வெளி வந்து விட்டால் அவரது பெயர் பிரபலமாகிப் பிறகு மளமள வென்று விற்பனை ஆரம்பமாகும் என்ற அசைக்க முடியாத நம்பிக்கையுடன் மற்றத் தொகுதிகளையும் அச்சடித்து விட்டார். ஆனால் அவர் நம்பியிருந்த அந்த 'மக்கள்' அவரைக் காலை வாரி விட்டு விட்டார்கள்.

தம்பதிகளுக்குள் மன வேற்றுமை ஏற்பட்டு விட்டது. வீட்டில் அவரது பேச்சுக்குத் துளிக்கூட மதிப்பில்லாமல் போய் விட்டது.

மனம் குன்றிய நிலையில் ஞாபக சக்தியும் குறையத் தொடங்கியது. இத்தனைக்கும் அவருக்கு ஆறுதலளித்து வந்தவை இரண்டே இரண்டு விஷயங்கள் தான். ஒன்று மகள் சிங்காரி. மற்றொன்று அவரது கவிதை ஆர்வம்.

தளதள வென்று பசுங்கொடி போல் வளர்ந்து பருவ மங்கையாகத் திகழ்ந்த சிங்காரிக்குத் தந்தையின் மீது எவ்வளவோ அனுதாபமும் அன்பும் இருந்தன. எனினும் சிற்றன்னைக்கு எதிராக ஏதும் பேச முடியாத நிலையில் இருந்தாள் அவள். எப்போதாவது தனியாகச் சந்தித்து அவரைத் தேற்றுவாள்.

தோட்டத்துப் பக்கம் இருந்த தமது தனியறையில் பிற்பகல் அணைத்துவைத்த துண்டுச் சுருட்டைத் தேடிக்கொண்டிருந்தார் புலவர். சிங்காரி அச்சமயம் மெதுவாக உள்ளே நுழைந்தாள்.

"என்ன அப்பா தேடிக் கொண்டிருக்கிறீங்க?"

"சுருட்டுத் துண்டை எங்கேயோ வைச்சுட்டேன் அம்மா! அது கிடைக்கவே மாட்டேங்கிறது!"

"இதோ புஸ்தகக் கட்டுக்கு நடுவிலே வைச்சிருக்கீங்களே!" என்று எடுத்துக் கொடுத்தாள் சிங்காரி.

முத்துப் புலவர் தமது மகளை நிமிர்ந்து நோக்கினார். அங்கங்களில் பூரித்துத் திகழ்ந்த அவளது யௌவன உருவத்தைக் கண்டதும் அவருடைய கண்களில் கண்ணீர் சுரந்தது.

"குழந்தை! உனக்காகத்தான் நான் உயிரோடு இருக்கிறேன். உன்னை ஒரு நல்ல இடத்தில் கல்யாணம் கட்டிக் கொடுத்து விட்டால்..."

"அப்பா! இரைந்து பேசாதீர்கள். சின்னம்மா காதிலே விழப் போகுது!"

புலவர் மெதுவாகப் பேசினார்.

"இதோ பாரம்மா, குழந்தை! பர்மாவிலேயிருந்து வரப்போ உன் அம்மாவுடைய நகை ஏராளமாக இருந்தது. அதையெல்லாம் அப்படியே வைச்சிருந்து உன் கலியாணத்தின்போது போட வேணும்னு நினைத்திருந்தேன். எல்லாத்தையும் அந்த மகராசி பிடுங்கி வைத்துக் கொண்டாள். என்னென்ன நகைகள் இருந்தன என்றே எனக்கு இப்போது நினைவில்லை."

சிங்காரி மெதுவாகக் கூறினாள்:

"அப்பா! சின்னம்மாவுக்குத் தெரிந்தவங்க ஒரு அம்மா வருவாங்களே தெரியுமா? மருதம்மான்னு...

"அந்த அம்மா மூலமாக நாலைந்து நாட்களுக்கு முந்திச் சின்னம்மா ஏதோ நகைகளை யெல்லாம் வித்துட்டமாதிரி தெரியுது, அப்பா. அடிக்கடி அவங்க கூடிக் கூடி ரகசியம் பேசறாங்க. நேத்து

சின்னம்மா பீரோவைத் திறந்தபோது நான் எதேச்சையாகப் போனேன். கட்டுக் கட்டாக நோட்டு வைச்சிருந்தது. என்னைப் பார்த்ததும் தடாலென்று கதவைச் சாத்தி 'ஏண்டி இங்கே வந்தே' என்று விரட்டி விட்டாங்க அப்பா!'' என்றாள் சிங்காரி.

புலவருக்கு ஆத்திரம் மூண்டது.

குரல் நடுங்க, ''மகாலட்சுமி போன்ற உன் அம்மாவின் நகைகளைத் தொட இவளுக்கு என்ன அதிகாரம் இருக்கிறது? அந்த நாசகாலியை என்ன செய்கிறேன், பார்!'' என்று குமுறினார் அவர்.

''அப்பா கத்தாதீங்க. வீண் ரகளை வேண்டாம். கொஞ்சம் பொறுமையாக யோசித்து என்ன செய்வது என்று முடிவு பண்ணலாம்'' என்று சமாதானப் படுத்தினாள் அவள்.

''இல்லை, சிங்காரி! அந்தத் துடைகாலி என் எண்ணத்தில் மண்ணைப் போடப் பார்க்கிறாள். வீடு அவள் பெயரில் இருக்கிறது. இப்போது உன்னுடைய நகைகளுக்கும் வழி வைத்து விட்டாள். உன் எதிர்கால வாழ்க்கை நன்றாக இருக்க அவள் சகிக்க மாட்டாள்'' என்று பித்தம் பிடித்தவர் போலக் கத்தத் தொடங்கினார் அவர்.

சிங்காரி சிரமப்பட்டு அவரது வாயைப் பொத்தினாள். ''அப்பா, அப்பா! அதோ பேசுறாங்க பார்! அவங்கதான் மருதம்மா'' என்று ரகசியமாகக் கூறினாள். கூடத்தில் அப்போதுதான் விஜயம் செய்திருந்த மருதம்மாளுடன் பேசிக் கொண்டிருந்தாள் கண்ணம்மாள்.

''சமாசாரத்தைக் கேட்டாயா, கண்ணம்மா? நம்ப மந்தாரப்பேட்டை பாங்கியிலே கொள்ளை போயிடுச்சாம். நல்ல காலம். உன் பணத்தை அதிலே போடாமல் தப்பிச்சே! அதுக்குத்தான் நான் அப்பவே இந்தப் பாங்குகளை நம்பிப் பணத்தைப் போடக் கூடாதுன்னு அடிச்சுக்கிட்டேன். எத்தனை ஏழைங்க பணம் போச்சோ!''

''நல்லாச் சொன்னே, மருதம்மா! ஏழைங்க பாங்கியிலேகூடப் பணம் கட்டுவாங்களா என்ன?''

''அப்படி இல்லையே, ஏதோ கையிலே இருக்கிற ஐந்து பத்தை..''

''சரிதான், இந்தப் பிச்சைக் காசுக்கெல்லாம் கணக்குவைக்கத்தான் பாங்கியைத் தொறந்து வைச்சிருக்காங்களா? நம்மைப் போல இருக்கிறவங்களுக்காகத்தான் பாங்கி!''

''ஆமாம், ஆமாம்! நீ சொல்றதும் சரிதான்'' என்று ஆமோதித்துத் தாளம் போட்டாள் மருதம்மாள்.

''அப்புறம் நான் சொன்னேனே, அந்த விஷயமா யோசித்தாயா?''

''மெதுவாய்ப் பேசு. அந்தக் கிழக் கோட்டான் காதிலே விழப் போகுது'' என்றாள் கண்ணம்மாள்.

சிறிது நேரம் அவர்களுக்குள் தணிவான குரலில் சம்பாஷணை நடந்தது.

கிழவரின் உள்ளம் குமுறியது.

''குழந்தே! எனக்கு ஒண்ணு தோணுறது...'' என்று என்னவோ சொல்ல வாயெடுத்தார் அவர். அதற்குள் அங்கு வந்த கண்ணம்மாள் தனது கண்களை உருட்டிச் சந்தேகத்தோடு அவ்விருவரையும் மாறி மாறிப் பார்த்தாள்.

''என்ன பண்ணுறீங்க அப்பனும் மகளும்?''

புலவர் கோபம் கொந்தளிக்க, ''நீ.. நீ...'' என்று ஆரம்பித்து மேலே பேச முடியாமல் தடுமாறினார்.

''சுருட்டைக் காணோமென்று சொன்னார் சின்னம்மா! தேடி எடுத்துக் கொடுத்தேன்'' என்று குழைவாகப் பேசினாள் சிங்காரி.

''எப்பவும் இந்த எழவுதான். சுருட்டைக் காணோம், சுக்கங்காயைக் காணோமின்னு! சரி! சரி! நேரமாகுது. எழுந்திருங்க. சீக்கிரமா இந்திரா டாக்கீசுக்குப் போய் 'கியூ'விலே நின்று இரண்டு பத்தணா டிக்கட்டு வாங்கிக்கிட்டு அங்கேயே கேட்டண்டை நில்லுங்க. நான் வந்து விடுகிறேன்...'' என்று இரண்டு ரூபாய் நோட்டைப் புலவரிடம் நீட்டினாள் கண்ணம்மாள்.

புலவர் ஒருகணம் அவளை உற்று நோக்கினார். இத்தனை நாளுமில்லாமல் தம்மைத்தான் அவள் சினிமாவுக்கு அழைத்துக் கொண்டு போவதாகச் சொல்லுகிறாள் என்று நினைத்துக் கொண்டார் அவர். எனினும் பிகுவை விடாமல், ''எனக்குச் சினிமாவும் வேண்டாம், ஒன்றும் வேண்டாம். நான் வரமாட்டேன்!'' என்றார் அவர்.

கண்ணம்மாள் அவரை வெறுப்போடு முறைத்துப் பார்த்தாள்.

''ஹூம்! உன்னை யார் கூப்பிட்டாங்க. கஷ்ட காலம்தான்! நீ டிக்கட்டை வாங்கி வைச்சுக்கிட்டு நில்லு. இதோ நானும் மருதம்மாவும் வருகிறோம்...'' என்று ஏக வசனத்தில் கூறினாள்.

அவளது உத்தரவுக்குக் கீழ்ப்படிவதா? அல்லது ஒத்துழையாமை இயக்கத்தை ஆரம்பிப்பதா என்று யோசித்துக்கொண்டிருக்கையிலேயே சிங்காரி கண்ணம்மாவிடமிருந்து பணத்தை வாங்கி, ''இந்தாங்க, அப்பா!'' என்று நீட்டினாள்.

கிழவர் தமது மகளின் முகத்தைப் பரிதாபமாகப் பார்த்துக் கொண்டே பணத்தை வாங்கிக் கொண்டார். ஒரு பெருமூச்சுடன் துண்டை உதறிப் போட்டுக் கொண்டு கிளம்பினார். (தொடரும்)

# குரு தட்சிணை

### காட்சி 1

*[சங்கீத வித்வானின் வீடு. தம்பூர் சுருதியும், ராக ஆலாபனையும் கேட்கின்றன. அவர் மனைவி பாரதி அங்கு வந்து பேசுகிறாள்.]*

பாரதி: நீங்கள் இப்படி மணிக் கணக்கில் ஆலாபனையும் சாதகமும் செய்து கொண்டிருந்தால் எப்படி?

வித்வான: ஏன்? என்ன வேணும்?

பாரதி: வீட்டில் எது வேண்டாம், சொல்லுங்கள். இன்றுதான் கூட்டுறவுக் கடையில் அரிசி போடுகிறார்களாம்.

வித்வான்: இன்னமும் ரேஷன் காலம் என்று நினைத்தாயா? அரிசிதான் கேட்ட இடத்தில் கிடைக்கிறதே!

பாரதி: எனக்கு ஒன்றும் பைத்தியம் பிடித்து விடவில்லை. மலிவு விலையில் அரிசி போடுகிறார்களாம்.

வித்வான்: கெட்டது அத்தோடு இன்றையப் பாட்டு!

பாரதி: என்ன செய்வேன், சொல்லுங்கள்!

வித்வான்: இரண்டு சிஷ்யப் பசங்களைப் பிடித்துப் போடலாம் என்றாலும் உனக்குப் பிடிக்கவில்லை.

பாரதி: ஐயோ, வேண்டாம். அவர்கள் கடுகை மத்தியம காலத்தில் வெடிக்க விடு என்பார்கள். குழம்பைத் துரிதத்தில் தட்டி விடு என்பார்கள். வேண்டவே வேண்டாம்!

வித்வான்: பின்னே ஒரு வேலையாள் போட வேண்டியதுதான்.

பாரதி: பிறகு அதைப் பற்றி யோசிப்போம். மணி எட்டு அடித்துவிட்டது. இனி அரிசி கிடைப்பது கூடக் கஷ்டம்தான்.

*[தெருவில் ஒரு சிறுவன் சினிமாப்பாட்டு ஒன்றைப் பாடுகிறான். கூடவே "அம்மா பிச்சை" என்று குரல் கொடுக்கிறான்.]*

பாரதி: பிச்சைக்காரன் வந்திருக்கிறான். அவனுக்குப் போட......

வித்வான் (சிரித்துக் கொண்டே): அரிசி வேண்டும். எனக்குத் தோன்றுகிறது பாரதி. நீ மட்டும்



சங்கீதத்தை அப்பியாஸம் செய்திருந்தால் 'பல்லவி பாரதி' என்று பெயர் எடுத்து விட்டிருப்பாய்!

பாரதி: நான் போகிறேன். நீங்கள் சீக்கிரம் எழுந்து கடைக்குப் போய் வாருங்கள்.

வித்வான்: பிருந்தா!

பிருந்தா: என்ன, அப்பா?

வித்வான்: நீதான் போய்ப் பிச்சை போட்டு விட்டு வாயேன், அம்மா.

பாரதி: வேண்டாம். நான் போட்டு விட்டேன். ஆனால் வந்து அவன் முகத்தைப் பாருங்கள். வயது பன்னிரண்டு இருக்கும். பழனியாண்டவரே எதிரே வந்தமாதிரி இருக்கிறான்.

வித்வான்: ஆமாம், அவனுக்கு ஸ்வர ஞானம் இருக்கிறது.

பாரதி: அவன் போய் விட்டானே!

வித்வான்: பையைக் கொடு. நான் கடைக்குப் போகும் வழியில் அவனைப் பார்க்கிறேன்.

## காட்சி 2

பாரதி (தாழ்ந்த குரலில்): அவனை அழைத்துக் கொண்டே வந்து விட்டீர்களா?

வித்வான்: நீ அவனைப் பழனி ஆண்டி என்றாய். அது என்றாய், இது என்றாய்?

பாரதி: அது சரி. முக லக்ஷணத்தைப் பாருங்கள் என்றேன். அவன் யாரோ, எங்கே பிறந்தவனோ, எப்படி வளர்ந்தவனோ?

வித்வான்: பாரதி! முன்பு ஹோட்டலில் இட்டிலிக்கு அரைப்பாரே ஒரு கிழவர், அவரைத் தெரியுமா?

பாரதி: ஆமாம்.

வித்வான்: அவருடைய பிள்ளையாம்.

பாரதி: பாவம், அந்தக் கிழவர் இடைரென்று தெருப் படியில் தடுக்கி விழுந்தவர் அதே நிமயமாக இறந்து விட்டார்.

வித்வான்: தாயாரும் போய் விட்டாளாம். யாருமற்ற அநாதையாகி விட்டான்.

வித்வான்: 'பையைத் தூக்கிக் கொண்டு வருகிறாயாடா' என்று கேட்டேன். 'சரி' என்றான்.

பாரதி: அவன் பெயர் என்னவாம்?

வித்வான்: சாரங்கனாம்.

## காட்சி 3

பிருந்தா: அப்பா, எனக்கு இன்றைக்கு வேறே வர்ணம் சொல்லிக் கொடுக்க வேண்டும்.

வித்வான்: என்ன அப்படித் திடீரென்று ஆசை வந்துவிட்டது?

பிருந்தா: எனக்கு நீங்கள் கற்றுக்கொடுத்த ஹம்ஸத்வனி வர்ணம் நன்றாக வந்துவிட்டது.

வித்வான்: வாயை விட்டுப் பாட வேண்டும். வீணையிலேயே வாசித்துவிட வேண்டும் என்று பார்க்கிறாய்.

பிருந்தா: இன்றைக்கு என்ன கற்றுக் கொடுக்கிறீர்கள்?

வித்வான்: நான்கு வர்ணங்களையும் எனக்கு வாசித்துக் காட்டு. அப்புறம் பார்க்கலாம்.

[பிருந்தா பைரவி வர்ணம் வாசிக்கிறாள். ஓரிடத்தில் ஸ்வரம் மறந்து சற்று நிற்கிறாள்.]

வித்வான்: நான சொல்ல மாட்டேன். நன்றாக வந்து விட்டது என்றாயே!

பிருந்தா: வந்துவிட்டது, அப்பா!

[தூரத்தில் சாரங்கன் குரல் அந்த இடத்தைப் பாடுவது கேட்கிறது. பிருந்தா வாசித்து விடுகிறாள்.]

வித்வான்: யார் அங்கே பாடினது? சாரங்கனா?

பாரதி (வந்து கொண்டே): ஆமாம்; நானே சொல்லவேண்டும் என்று நினைத்தேன்; அவனுக்கு எல்லாம் நன்றாக வந்துவிட்டது.

வித்வான்: சங்கீதத்தைப் புகட்ட முடியாது பார்த்தாயா, பாரதி? அது ரத்தத்திலேயே ஊற வேண்டும்.

பாரதி: பிருந்தா குழந்தைதானே?

வித்வான்: எட்டு வயதில் சதஸில் உட்கார்ந்து கச்சேரி செய்தவர்கள் இல்லையா?



*பாரதி:* இனிமேல் பாருங்கள். எப்படி கிடுகிடுவென்று முன்னேறிவிடுகிறான் என்று?

*வித்வான்:* இன்றைக்குத் தானாகவே வந்து பாடம் கற்றுக் கொடுக்கும்படி கேட்டான். எனக்கு ஆச்சரியமாக இருந்தது!

*பாரதி:* நீங்கள் இல்லாத சமயத்தில் அவனை வீணை வாசிக்கச் சொல்லி விட்டு இவன் பாடுகிறான். நான் கவனிக்காதுபோல இருந்து விடுவேன். அவனுக்குக் கச்சிதமாக நான்கு பாட்டுகள் கற்றுக் கொடுங்களேன்.

*வித்வான்:* நீதான் சங்கீத சிஷ்யனே வேண்டாம் என்பாயே?

*பாரதி:* என்னவோ குழந்தைப் பையன் வீட்டைச் சுற்றி வரும்போது ஏதேதோ பாட்டு முணுமுணுக்கிறான். தெய்வப் பாடலாக இருந்தால், காதில்பட்டால் புண்ணியம்.

*வித்வான்:* என்ன பாட்டுப் பாடுகிறான்?

*பாரதி:* நான் சினிமாவுக்குப் போனால் தானே அந்த விவரம் தெரியப் போகிறது? என்னவோ 'டல்லு, டல்லு' 'கூஜா கூஜா' இப்படி ஏதேதோ!

*வித்வான்:* அவனே ஆசைப்படுகிறானா?

*பாரதி:* ஆமாம். உங்களைக் கேட்க பயம்; பிருந்தாவிடமிருந்து புத்தகங்களைக் கேட்டு என்னவோ தவிக்கிறான்.

*வித்வான்:* நாளைக்கு நாள் நன்றாக இருக்கிறது. இந்த ஊர் ரஸிகரஞ்சனி சபாவில் கூடப் பாட்டு வகுப்பு ஆரம்பிக்கப் போகிறார்களாம்.

*பாரதி:* சொல்லிக் கொடுப்பதை வகையாகத்தான் சொல்லித் தாருங்கள். சாஸ்திரோக்தமாக ஆரம்பித்து விடுங்கள்.

## காட்சி 4

*வித்வான்:* சாரங்கா!

*சாரங்கன்:* இதோ வந்து விட்டேன்.

*வித்வான்:* விசிறி ஒன்றைக் கொண்டு வாடா. மிகவும் களைப்பாக இருக்கிறது.

*பாரதி:* ஏன் இப்படிக் களைத்துவிட்டீர்கள்? என்ன அகர சாதகமோ! உயிரையே உருக்குகிறது.

*வித்வான்:* மீன் நீந்தி நீந்திச் சோர்ந்து விட்டது என்று யாராவது சொன்னால் நீ சிரிப்பாய். நீயே......

*பாரதி:* முன்னைப் போல நீங்கள் திடமாக இருந்தால் கேட்கிறேனா?

*வித்வான்:* வயசு ஆகவில்லையா, பாரதி? சாரங்கன் நேற்றுத்தான் வந்த மாதிரி தோன்றுகிறது.

*பாரதி:* ஆமாம். ஆறு வருஷமாகிவிட்டது.

*வித்வான்:* வயசு பதினெட்டு. அவனுக்கு இருக்கிற ஞானமோ பதினெட்டு வருஷங்கள் அப்பியாசம் செய்தவர்களுக்குக் கூட இல்லை.

*பாரதி:* உங்களைப் போல் அவன் பாட்டுக்கள் கூடப் புனைய ஆரம்பித்து விட்டான்.

*வித்வான்:* எங்கே? என்னிடம் சொல்லவே யில்லையே?

*பாரதி:* அவனுடைய அடக்கமே அடக்கம். நேற்று பிருந்தாதான் கொண்டு காட்டினாள்.

*வித்வான்:* எழுதி வைத்திருக்கிறானா?

*பாரதி:* ஏதோ காகிதத்தில் வைத்திருந்தான். அவள் அதைப் பத்திரப்படுத்தி வைத்திருந்தாள்.

*வித்வான்:* ஒரு நோட் புத்தகம் வாங்கிக் கொள்ளச் சொல்வதுதானே?

*பாரதி:* சொன்னேன். இன்றைக்குத்தான் வாங்கி வந்தான்.

*வித்வான்:* கொண்டு வா, கவிதையைப் பார்ப்போம்.

*பாரதி:* இதோ கையிலேயே இருக்கிறது.

*வித்வான்:* நம்மூர் முருகனைப் பற்றியா? உம்......சின்னதாக இருந்தாலும் நன்றாக இருக்கிறது.

*பாரதி:* நம் பிருந்தாவைப் பற்றி ஒன்று செய்திருக்கிறான்.

*வித்வான்:* எங்கே அது?

*பாரதி:* எழுதி வைக்கவில்லை என்று நினைக்கிறேன். ராகமாலிகையாகப் பாடுகிறான்.

*வித்வான்:* எப்படியிருக்கிறது?

*பாரதி:* ஏதோ தமாஷ். அவள் வீணை வாசிக்கும்போது விரல்கள் நடனம் ஆடுகின்றனவாம். பூப்பறிக்கும்போது புறாவைப் போல இருக்கிறாளாம். துணி துவைக்கும் போது ஒன்று - இப்படியே ஒரு சமயம் புகழ்ச்சியாகவும் ஒரு சமயம் இகழ்ச்சியாகவும் பாடுகிறான். கேட்க ரம்மியமாக இருக்கிறது.

*வித்வான்:* பிருந்தா என்ன சொல்கிறாள்?

*பாரதி:* கத்துவாள். ஆனால் உள்ளூற ரசிக்கத்தான் செய்கிறாள்.

*வித்வான்:* பாரதி!

*பாரதி:* என்ன?

*வித்வான்:* அவர்கள் தோழமையை நீ ரசிக்கிறாயா?

*பாரதி:* என்னவோ ஒன்றோடு ஒன்று ஒத்துப் போகிறது. என் கண்ணுக்கும் கருத்துக்கும் இதமாக இருக்கிறது.

*வித்வான்:* பாரதி! எப்படியும் நம் பிருந்தாவுக்கும் வயது பதினைந்தாகி விட்டது. எப்படியும் அவளுக்கு நல்ல வரன் தேட ஆரம்பிக்க வேண்டியதுதானே?

*பாரதி:* நம் சாரங்கனுக்கே......?

*வித்வான்:* நீ சொல்லி விட்டாய். ஆனால் அவர்கள் மன நிலை......

## காட்சி 5

*விசுவநாதன்:* ஏன், ஐயா! நீர் வித்வான் ஓங்காரநாதருடைய சிஷ்யரோ? பெயர் என்ன உமக்கு?

*சாரங்கன்:* என் பெயர் சாரங்கன்.

# உங்கள் வீட்டில் அவசியம் இடம்பெற வேண்டியது 'டெட்டால்'




நீங்கள் தொடும் அல்லது கையாளும் ஒவ்வொரு பொருளின்மீதும், தண்ணீரிலும், உங்களைச்சுற்றிலும், மேலும் உங்கள் சருமத்தின் மீதுங்கூட, வியாதியையும், சில சந்தர்ப்பங்களில் மரணத்தையுங்கூட விளைவிக்கக்கூடிய விஷக்கிருமிகள் கோடிக்கணக்கில் நிரம்பியுள்ளன. சிறிய வெட்டுக்காயத்தாலோ, அல்லது சிராய்த்துக் கொள்வதாலோ, உங்கள் சருமத்தில் ஏற்படும் சிறிய துவாரம், கோடிக்கணக்கான கிருமிகள் உள்ளே புகுந்து, வியாதியைப் பரப்புவதற்கு திறந்த கதவாக அமைகிறது. உடனே "டெட்டால்" உபயோகித்தால், அது விஷக்கிருமிகளை அழித்தும், வியாதிகளை பரப்பவொட்டாமல் தடுத்தும் அபாயத்தை நீக்குகிறது. வெட்டுக்காயங்கள், புண்கள், தவிர "டெட்டால்" உங்கள் வீட்டில் பல சந்தர்ப்பங்களில் வியாதிகள் அண்டாமல் பாதுகாக்கிறது. "டெட்டாலை" எப்பொழுதும் உபயோகியுங்கள். அது வியாதிகள் பரவுதலைத் தடுத்துப் பாதுகாக்கிறது.



குழந்தையைக் குளிப்பாட்டுவதற்கும் குழந்தைகளின் சிறிய துணிகளைச் சுத்தம் செய்யவும்



முகக்ஷவரத்திற்கும், குளிப்பதற்கும் 'டெட்டால்' மிகவும் தேவை



வெட்டுக்காயங்கள், சிராய்ப்புக்கள், தோல் உரிந்த புண்கள் இவைகளுக்கு



வாய் கொப்பளிக்கவும், தொண்டை ரணத்திற்கும்



சரும சுகாதாரத்திற்கும்

**இலவசம்**

'சிகிச்சையை விட நோயைத் தடுப்பதே சிறந்தது' என்ற புத்தகத்தை இலவசமாகப் பெற அட்லாண்டிஸ் (ஈஸ்ட்) லிமிடெட் (இங்கிலாந்தில் அமைக்கப்பட்டது) இலாகா F. B. 3. தபால் பெட்டி நெ. 9009 கல்கத்தா-16 என்ற விலாசத்திற்கு எழுதவும்.

DI-3

AEL 1300

உங்கள் வீட்டில் 'டெட்டால்' ஒரு பாட்டில் எப்பொழுதும் வைத்திருங்கள்.

விசுவநாதன்: வித்வானின் சிஷ்யர்தானே?

சாரங்கன்: சிஷ்யன் என்றும் கூறலாம். அவர்தான் எனக்கு எல்லாம். குரு, தகப்பனார், புகலிடம், தெய்வம் எல்லாம்.

விசுவநாதன்: எத்தனை வருஷ சிவகஷ?

சாரங்கன்: ஒன்பது வருஷங்களாக அவருடன் இருக்கிறேன்.

விசுவநாதன்: குருதட்சிணை என்ன எதிர் பார்ப்பார்?

சாரங்கன்: ஏன்? நான் என்ன அவருக்குத் தட்சிணை கொடுக்க முடியும்?

விசுவநாதன்: அப்படி உண்டா? எந்த வித்தைக்கும் குருதட்சிணை கொடுக்காவிட்டால் வித்தை வருமோ?

சாரங்கன்: அப்படித்தான் புத்தகங்களில் இருக்கிறது.

விசுவநாதன்: புத்தகங்கள் புரளி சொல்ல மாட்டா. நானே கண்கூடாகப் பார்த்திருக்கிறேனே? குருதட்சிணை கொடுக்காவிட்டால் வித்வத்து மேலே ஓங்குவதே யில்லை.

சாரங்கன்: எனக்குப் பணமா, காசா? நான் என்ன தட்சிணை கொடுக்க முடியும்? சரீரத்தால் உழைத்துச் சேவை புரிகிறேன். அதைத்தான் அவர் தட்சிணையாக வைத்துக் கொள்ள வேண்டும்.

விசுவநாதன்: பின்னே நாங்கள்' எல்லோரும் மட்டும் பணக்கார வீட்டுப் பிள்ளைகளா? வித்வான்களுக்கு வேஷ்டி பிழிந்து போட்டுப் படித்தவர்கள்தாம். அதற்குத் தனி மதிப்புத் தான் இருக்கிறது.

சாரங்கன்: நீங்கள் எப்படி தட்சிணை கொடுத்தீர்கள்?

விசுவநாதன்: எங்கள் குரு எனக்குச் சில இடத்தில் சிபார்சு செய்தார். அங்கு சங்கீதம் கற்றுக் கொடுத்து வரும் ஊதியத்தை அவருக்குக் கொடுத்து விட்டேன்.

சாரங்கன்: தட்சிணை கொடுப்பது அவசியம் என்கிறீர்களா? நான் அவர்கள் வீட்டு மனிதனைப் போல் பழகுகிறேன்.

விசுவநாதன்: சொந்த மகனானுல்கூடக் குருதட்சிணை கொடுப்பது மிகவும் அவசியம்.

சாரங்கன்: அப்படியா?

விசுவநாதன்: ஆமாம், ஆமாம். அதில் சந்தேகமே யில்லை.

சாரங்கன்: உங்களுக்கு மிகவும் நன்றி.

விசுவநாதன்: இதில் என்ன பிரமாதம்? பரஸ்பரம் உதவிக்கொள்ள வேண்டியது தானே? நாம் எல்லோரும் ஒரே குலம்.

## காட்சி 6

வித்வான்: சாரங்கா! உத்தரீயம் எங்கேடா? கார் வந்து விடுமே? பிளாஸ்கிலே பால் எடுத்து வைத்து விட்டாயா!

சாரங்கன்: எல்லாம் தயாராக இருக்கிறது.

வித்வான்: நீ எதற்கடா பெரிய கச்சேரி செய்யப்போகிறவன் போல அலங்காரம் பலமாகச் செய்து கொண்டிருக்கிறாய்?

சாரங்கன்: ஒரு சமயம் கூட வரவேண்டுமோ என்று நினைத்தேன்.

வித்வான்: வேண்டாம். நான் திரும்பிவர நேரமாகும். பிருந்தாவை வேறு அழைத்துக் கொண்டு போகப் போகிறேன். மாமி தனியாக இருப்பாள். துணையாக இரு.

சாரங்கன்: சரி!

வித்வான்: வீட்டை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்.

சாரங்கன்: சரி!

வித்வான்: பிருந்தாவைக் கூப்பிடு: அவளே பிளாஸ்கைக் கொண்டு வரட்டும்.

சாரங்கன்: அப்படியே.

[கார் வரும் ஓசை.]

வித்வான்: பிருந்தா!

பிருந்தா: இதோ வந்துவிட்டேன் அப்பா!

சில குரல்கள்: தயாராக இருக்கிறீர்களா? நேரே நாம் போனவுடனே விழா ஆரம்பிக்க வேண்டியதுதான்.



வித்வான்: ஆகா! இதோ போகலாமே? குழந்தையையும் அழைத்து வருகிறேன்.

குரல்: வரட்டும், வரட்டும். தங்கள் மனைவியார், சிஷ்யன் வருவதானாலும்கூட....

வித்வான்: யாரோ விருந்தினர்கள் வருகிறார்கள். அவர்கள் வருவதற்கில்லை.

குரல்கள்: சரி! புறப்படலாமா?

## காட்சி 7

பிருந்தா: நேற்று வரவில்லையே? ஒன்றுமில்லாதவர்களெல்லாம் பாட்டுப் பாடிப் பரிசைத் தட்டிக் கொண்டு போய் விட்டார்கள். நீங்கள் வருவதற்கென்ன!

சாரங்கன்: மாமிக்குத் துணை இருக்க வேண்டாமா?

பிருந்தா: ஆமாம்; மாமிக்குத் துணை! நீங்கள் இரண்டு பேருமே வந்திருக்கலாம். காரில் அவர்கள் அதையே திருப்பித் திருப்பிச் சொன்னார்கள்.

சாரங்கன்: அப்பாதான் என்னை வீட்டில் இருக்கும்படி சொன்னார்.

பிருந்தா: அவருக்கு ஒன்றும் தெரியாது.

சாரங்கன்: நீ அவரை விடப் பெரியவள் அல்லவா! அநுபவமும்......

பிருந்தா: அங்கே அப்பா ஒருத்தர்தான் சிஷ்யன் இல்லாமல் இருந்தார். மற்றவர்கள் அவரவர் சீடர்களை மேடைமேல் ஏற்றித் தாங்களே பாதி பாடிப் பரிசைப் பெற்று......

சாரங்கன் (சிரிக்கிறான்): வித்வான்களுக்கு எவ்வளவு சிரமம்!

பிருந்தா: வேடிக்கை என்ன இருக்கிறது இதில்?

சாரங்கன்: நான் சிரிக்கக் கூடாதாக்கும்?

பிருந்தா: சிரிக்கும் விஷயமாக எனக்குப் படவில்லை. அநாயாசமாகப் புகழைத் தட்டிக் கொண்டு வரக்கூடிய ஒருவர் வீட்டிலேயே மங்கிக் கிடக்க, யாரோ......

சாரங்கன்: உனக்குக்கூடப் பரிசு கிடைத்ததாமே?

பிருந்தா (சலிப்புடன்): ஆமாம் கிடைத்தது;

சாரங்கன்: ஏன் இந்தச் சலிப்பு?

பிருந்தா: ஒன்றுமில்லாதவர்கள் பிரக்யாதி பெற, நிறைய விஷயம் தெரிந்தவர் கேட்பாரற்று மங்கிக் கிடக்க......

சாரங்கன்: என் பிருந்தாவின் அபிமானமே அபிமானம்! உனக்குப் பரிசு வந்தது எனக்கு வந்தது போலத்தானே?

பிருந்தா: எனக்கு ஒன்றும் ரஸிக்கவில்லை.

சாரங்கன்: மாமி வருகிறாள், நம்மைத் தேடுகிறாள் பார்!

பிருந்தா: அம்மா, நாங்கள் இங்கே இருக்கிறோம்.

பாரதி: உங்களைத்தான் தேடினேன். இன்றைக்கு நாதபிரம்மேசுவரர் கோவிலிலே திருவிழா. நாம் போய்விட்டு வரலாமா?

பிருந்தா: அப்பா ஊரில் இல்லையே?

பாரதி: அப்பா என்ன நம்மைக் கோபித்துக்கொள்ளப் போகிறாரா? போகா விட்டால் தான் கோபிப்பார்.

பிருந்தா: நீயும் நானும் போனால் ஒன்றும் சொல்ல மாட்டார்.

பாரதி (சிரித்துக் கொண்டே): பின்னே? சாரங்கன் போனால் திட்டுவாராக்கும்? அவன் இல்லாமல் நீ வருவாயோ, அம்மா? மூன்று பேருமாகப் போகலாம்.

## காட்சி 8

[திருவிழாக் கூட்டத்தின் ஆரவாரம். பஜனை, மிட்டாய் விற்பவர்களின் சத்தம்.]

சாரங்கன்: வாருங்கள், வாருங்கள். கடைகளைப் பார்த்துவிட்டுப் பந்தய மைதானத்துக்குப் போவோம்.

பாரதி: இந்த ஊரிலே இந்த உற்சவம் ஒன்றுதான் சிகரம்.

சாரங்கன்: நாதப்பிரம்மமூர்த்தியல்லவா ஆட்சி புரிகிறார்? கலைகளுக்கெல்லாம் அவர் இருப்பிடமாயிற்றே?

பாரதி: அதுதான் வருஷா வருஷம் போட்டிகளும் பந்தயங்களும் வைக்கிறார்கள்.

சாரங்கன்: சீக்கிரம் வாருங்கள். நடன அரங்கிலே ஆரம்பித்து விட்டார்கள். அநேகமாக வக்கீல் சுந்தரமூர்த்தியின் பெண்ணுக்குத்தான் பரிசு போகும்.

பாரதி: நன்றாக ஆடுகிறது பெண்.

பிருந்தா: குழந்தையம்மா அது. ஏழு வயதுதான் ஆகிறதாம்.

சாரங்கன்: பார், நாம் வருவதற்குள் நாட்டியப் போட்டி முடிந்து விட்டது. இருங்கள், அடுத்தபடி என்ன பார்ப்போம்...

பிருந்தா: யாரோ பெரியவர் மேடையில் ஏறுகிறாரே?

பாரதி: அவர்தான் இந்தக் கோவில் பெரிய தர்மகர்த்தா.

தர்மகர்த்தா: இந்த வருஷம் ஒரு விசேஷ நிகழ்ச்சி. இங்கே எழுந்தருளியிருக்கும் பிஷாடன மூர்த்தியின் பேரில் கவிதை புனைந்து தக்க ராகத்துடன் யார் பாடுகிறார்களோ, அவர்களுக்கு ஒரு தங்கப் பதக்கம் பரிசாக அளிக்கப்படும்.

பிருந்தா: நீங்கள் போங்கள். போய்ச் சேர்ந்து கொள்ளுங்கள்.

பாரதி: போ, சாரங்கா, எங்களுக்கு எவ்வளவு பெருமையாக இருக்கும்?

சாரங்கன்: குருவின் அநுமதி யில்லாமல் அரங்கு மேடை ஏறக் கூடாதே?

பாரதி: சாரங்கா, என் அநுமதி உனக்குப் போதாதா?

சாரங்கன்: சரி, மாமி! போகிறேன்! ஆசீர்வாதம் செய்யுங்கள்.

## காட்சி 9

பிருந்தா: ஏன் இப்படிக் கவலையாக உட்கார்ந்திருக்கிறீர்கள்? உடம்பு ஏதேனும்......

சாரங்கன்: ஒன்றுமில்லை, பிருந்தா!

பிருந்தா: என்னிடம் சொல்லப் போகிறீர்களா? அம்மாவைக் கூப்பிடட்டுமா?

சாரங்கன்: அன்றைக்குக் கோவில் திருவிழாவிலே பரிசு வந்ததே......

பிருந்தா: ஆமாம்! நான் தொந்தரவு செய்து அனுப்பியிரா விட்டால்...?

சாரங்கன்: மிகவும் வருத்தமாக இருக்கிறது, பிருந்தா!

பிருந்தா (கல கலவென்று சிரிக்கிறாள்): பரிசு வந்ததே என்று அழுகிறீர்களா? பேஷ்! கவிகளின் போக்கே தனித்தன்மை வாய்ந்தது!

சாரங்கன்: எனக்கு வேடிக்கையாகத் தோன்றவில்லை, பிருந்தா! அவர் அனுமதியின்றி, அவர் ஊரில் இல்லாத சமயத்தில் சிறுபிள்ளைத்தனமாக......

பிருந்தா: அது மகா பாவமானால் அதில் அம்மாவும் நானும் பங்கு கொண்டு விட்டோமே—இன்னமும் சொல்லப் போனால் நாங்கள்தானே காரணம்?

சாரங்கன்: நேற்று அப்பா என்னை அழைத்து......

பிருந்தா: என்ன சொன்னார்?

சாரங்கன்: அவருடைய அனுமதியின்றி எங்கும் என் கலையை வெளியே காட்டக் கூடாதாம். ஓரளவு தேர்ச்சி ஏற்படும் வரையில் வெளியே காட்டுவது கலைக்கு இழுக்குத் தேடுவதாக முடியுமாம்.

# மக்ளீன்ஸ் இப்போது பற்களை முன்னைவிட அதிவெண்மையாக சுத்தம் செய்கிறது!




மகத்தான ஓர் செய்தி! மக்ளீன்ஸ் தயாரிப்பில் இப்போது வியக்கத்தக்கதோர் புதிய பொருள் சேர்க்கப்படுவதால் அதை உபயோகித்து பற்களைச் சுத்தம் செய்யும்பொழுது பற்கள் முன்னைவிட அதிவெண்மையாகவும் சுத்தமாகவும் விளங்குவதுடன் நல்ல ஆரோக்கியத்தைக் குறிக்கின்றது. நீங்களும் மக்ளீன் பற்பசையை உபயோகித்து உங்கள் பற்கள் எவ்வளவு வெண்மையாக விளங்குகின்றன 'என்று கவனியுங்கள்.

## மக்ளீனால் வெண்மையாக்கப்பட்ட பற்கள்

## ஆரோக்கியமானதுமட்டுமல்லாமல் பற் சிதைவினின்றும் காப்பாற்றப்படுகின்றன

மக்ளீன்ஸ் பற்பசையினால் பற்களை சுத்தம் செய்யுங்கள். முதலில் குளுமையும் புதுமை மணம் கமழுவதையும் உணர்வீர்கள். பின்பு பற்கள் முன்னைவிட அதிவெண்மையாக சுத்தம் செய்யப்பட்டிருப்பதை குறிக்கின்றது. உங்களுடைய பற்களின்மேல் படர்ந்திருக்கும் வழுவழுப்பான அசுத்தத்தில் 'லேப்பாவிட்ஸ்' என்று கூறப்படும் அசுத்தம் கலந்திருக்கிறது இந்த 'லேப்பாவிட்ஸ்' முறையே சரிவர அகற்றப்படாவிட்டால் அமிலங்கள் பற்களின் இனாமலை அரித்து, பற்கள் சிதைவடைகின்றன. 'லேப்பாவிட்ஸ்'ஸை அறவே அகற்ற, இதை கரையச் செய்வதுதான் சரியான வழி. மக்ளீன்ஸ் பற்பசை ஒன்றில் மட்டுமே 'லேப்பாவிட்'ஸை கரைக்கக்கூடிய விசேஷ பொருள் சேர்க்கப்பட்டிருக்கிறது. இது 'லேப்பாவிடஸை' மிருதுவாக, அபாயமின்றி, சீக்கிரத்தில் கரைத்து அப்புறப்படுத்துகிறது. இதுவே பற் சிதைவினின்றும் பற்களைத் தவிர்ப்பதற்கான சிறந்த மார்க்கம்.

சுத்தமான, வெண்ணிற, ஆரோக்கிய பற்களை அடைய தினந்தோறும் காலையிலும் இரவிலும் மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசையை உபயோகித்து பற்களைச் சுத்தம் செய்யுங்கள்.

மக்ளீன்ஸ் பற்களை
அதிவெண்மையாக
சுத்தம் செய்கிறது




MTY 43 TAM

பிருந்தா: இன்னும் எவ்வளவு தேர்ச்சி வேண்டுமாம்?

சாரங்கன்: அவருக்குத் தெரியாததா, பிருந்தா?

பிருந்தா: நீங்கள் பரிசு வாங்கினது அவருக்குத் தெரியுமா?

சாரங்கன்: நாம்தான் அவரிடம் சொல்வதில்லை என்று உறுதி பூண்டு கொண்டோமே? மாமி சொல்லியிருக்க மாட்டாள் என்று நினைக்கிறேன்.

பிருந்தா: ஒருகாலும் அம்மா சொல்ல மாட்டாள். ஆனால்......

சாரங்கன்: ஆனால் என்ன பிருந்தா?

பிருந்தா: சொல்ல வேண்டும் என்று எவ்வளவு ஆசையாக இருக்கிறது, தெரியுமா?

சாரங்கன்: போ, பிருந்தா, உனக்கு ஒன்றும் தெரியாது.

பிருந்தா: சொன்னால் அப்பா பெருமைப் பட்டுக் கொள்வார்.

சாரங்கன்: வேண்டாம். ஒருபோதும் சொல்லக் கூடாது, பிருந்தா!

## காட்சி 10

பிருந்தா: அப்பா எங்கே போயிருக்கிறார்?

சாரங்கன்: சங்கீத அரங்கின் வருஷாந்திரக் கொண்டாட்டத்தில் தலைமை வகிக்கப் போயிருக்கிறார்.

பிருந்தா: நீங்களும் கூடப் போவதற்கு என்ன?

சாரங்கன்: ஏன், நான் உன்னுடன் இருந்தால் பிடிக்கவில்லையா, பிருந்தா?

பிருந்தா: தலைமை வகிக்கிற இடத்திலே உங்கள் கலையைக் காட்ட வேண்டாமோ? ஆனால் அங்கு நடப்பதையாவது அறிந்து கொண்டு வரலாமே?

சாரங்கன்: உன் அப்பா என்னை ஆளாக்கியவர். அவர் அனுமதியின்றி எங்கும் நான் போக மாட்டேன்.

பிருந்தா: போகவேண்டும் என்ற ஆசை இருப்பதைக் கூடக் காட்டிக் கொள்ளாமல் இருந்தால் என்ன அர்த்தம்?

சாரங்கன்: அவருக்குத் தெரியாதா?

பிருந்தா: தெரியக் காணோமே? அந்த அனந்தராம பாகவதர் சிஷ்யர் ராமகிருஷ்ணனாமே.

சாரங்கன்: ஆமாம்! அவரிடம் வந்து ஆறு வருஷங்கள் ஆகின்றன.

பிருந்தா: 'கின்னரகீதம்' என்ற பத்திரிகையில் படம் போட்டு அமர்க்களப்படுத்தியிருக்கிறார்கள்.

சாரங்கன்: உண்மையான கலைக்கு விளம்பரம் வேண்டுமா, பிருந்தா?

பிருந்தா: ஓரளவு அதுவும்தான் வேண்டும். எல்லோரும் சங்கீத அரங்கின் காரியதரிசியாக நியமித்திருக்கிறார்கள் அந்த ராமகிருஷ்ணனை.

சாரங்கன்: வேண்டியதுதானே?

பிருந்தா: அப்பாவைப் பார்க்கும்போது, நெருங்கி முன்னுக்கு வர வழி எது என்று கேட்டீர்களா? 'அங்கே வரட்டுமா, இங்கே வரட்டுமா' என்று கேட்டுக்கொண்டு உற்சாகமாகக் கிளம்பினால் தானே?

சாரங்கன்: முன்னுக்கு வருவது என்பதன் பொருள் என்ன, பிருந்தா!

பிருந்தா: ஒரு பிருந்தாவின் காதுக்கு மட்டும் கேட்கக் கவிதை பாடிவிட்டு, மாமிக்குத் துணையிருப்பதுதான். சந்தேகமென்ன?

சாரங்கன்: (சிரிக்கிறான்) கோபம் வருகிறது உனக்கு. உம்?

பிருந்தா: என்னைச் சொல்லச் சொன்னாலும் சொல்லுவேன்.

சாரங்கன்: பிருந்தா!

பிருந்தா: என்ன?

சாரங்கன்: நான் அவரிடம் ஒன்றும் கேட்கவில்லை என்று நினைக்கிறாயா?

பிருந்தா: கேட்டீர்களாக்கும், இல்லாவிட்டால்?......

சாரங்கன்: ஒரு நாள் சமயம் பார்த்துக் குருதட்சிணை விஷயமாகக் கேட்டேன்.



பிருந்தா: என்ன சொன்னார்?

சாரங்கன்: ''சமயம் வரும்போது கேட்பேனடா, கொடுப்பாய்'' என்றார்.

பிருந்தா: அதில் என்ன தவறு?

சாரங்கன்: ஒருகாலும் அவர் பேச்சில் தவறு கண்டுபிடிக்க நான் அருகதை உடையவன் அல்ல.

பிருந்தா: நீங்கள் வருஷப்பிறப்பு அன்று ஒரு பாட்டுப் பாடினீர்களே?

சாரங்கன்: ஆமாம்.

பிருந்தா: அது ''கின்னர கீதத்''தில் வந்திருக்கிறது.

சாரங்கன்: நான் பார்க்கவில்லையே!

பிருந்தா: சிரத்தையில்லை. உங்கள் பெயரில் வெளியிடப்படவில்லை. அப்பா பெயரில் தான் வந்திருக்கிறது.

சாரங்கன்: அவர் பெயரில் போட்டால் தான் உலகம் ஒத்துக் கொள்ளும். இளம் கவிஞர்களாயிருந்தால்......

பிருந்தா: என்றைக்காவது ஒரு நாள் உங்கள் பெயரில் கவிதை வராதா?

சாரங்கன்: அன்று?

பிருந்தா: அன்றுதான் எனக்குச் சுதினம்.

சாரங்கன்: அப்பாவின் பிரக்யாதி......?

பிருந்தா: மன்னனின் மகள் ராணியா? மன்னனின் மனைவிதானே ராணி?

## காட்சி 11

பாரதி: சாரங்கா, என்ன நடந்தது? ஏன் மாமா மிகவும் கோபமாக இருக்கிறார்?

சாரங்கன்: என்னால் வந்த வினைதான், மாமி!

பாரதி: என்ன?

சாரங்கன் (தனக்குள்): அதைச் சொன்னால் மாமி கஷ்டப்படுவாளோ? (உரக்க) ஏதோ ஒரு பாட்டு - நான் பாடியது - அதனால் மாமாவுக்கு இழுக்கு வந்து விட்டது.

பாரதி: எந்தப் பாட்டு அது?

சாரங்கன்: எனக்குத் தெரியவில்லையே?

பிருந்தா (வந்து கொண்டே): என்ன விசேஷம்? ஏன், அப்பா மிகவும் கோபமாக அறையில் முன்னும் பின்னும் நடக்கிறார்?

சாரங்கன் (தாழ்ந்த குரலில்): பிருந்தா! வெளியே வா, சொல்கிறேன்.

[கதவு சாத்தப்படும் சத்தம் கேட்கிறது.]

பாரதி: கொல்லைக் கதவா அடித்துக் கொள்கிறது?

பிருந்தா: சீக்கிரம் சொல்லுங்கள். என்ன நடந்தது?

சாரங்கன்: நான் அன்று விழாவிலே பரிசு வாங்கினேனே?

பிருந்தா: ஆமாம். அது தெரிந்து விட்டதா? அதற்கா அப்பா அவ்வளவு......

சாரங்கன்: அதனால் வந்த விளைவுதான்....

பிருந்தா: அப்பா தவிப்பதைப் பார்த்தால் அவருடைய பெயருக்கே இழுக்கு நேர்ந்து விட்ட மாதிரி தோன்றியது. ஒரு சமயம் சேமித்து வைத்த பணமெல்லாம் போய் விட்டதோ என்று நினைத்தேன்.

சாரங்கன்: அவருடைய கௌரவத்துக்கு ஹானி தேடி விட்டேன், பிருந்தா!

பிருந்தா: என்ன நடந்தது? நடந்ததைச் சொல்லாமல் சுற்றி வளைப்பதில் உங்களை விட்டால் கிடைக்காது.

சாரங்கன்: அதைத் தன் பெயரில் ஒரு சபைக்கு அனுப்பி வைத்தாராம். அன்று கூட்டத்தில் கேட்டிருந்த ஒருவர் புரிந்து கொண்டு அப்பாவிடம் எழுதிக் கேட்டிருக்கிறாராம்!

பிருந்தா: என்ன எழுதியிருக்கிறார்களாம்!

சாரங்கன்: என்ன எழுதுவார்கள், பிருந்தா? 'நீங்கள் அனுப்பியிருக்கும் பாட்டு உங்களுடையதல்ல. ஒரு சிறுவன் திருவிழாவில் பாடிய பாட்டுத்தான் அது!' என்று இருக்கிறது கடிதம்.

பிருந்தா: என்னால்தானே இந்தக் கஷ்டம் உங்களுக்கு?

சாரங்கன்: என்னவோ ஆண்டவன்தான் இந்தச் சிக்கலைத் தீர்த்து வைக்க வேண்டும்.

பிருந்தா: நான் பூஜை விளக்கை ஏற்றி வைத்து விட்டு, பஜனை செய்யப் போகிறேன். கலைவாணியின் அருள் உங்களுக்குக் கட்டாயம் இருக்கும். கவலைப்படாதீர்கள்!

சாரங்கன்: பிருந்தா, பிருந்தா! உனக்குத்தான் என்ன தங்கமான மனசு!

## காட்சி 12

[பிருந்தா வீணை வாசிக்கிறாள். சாரங்கன் கூடப் பாடுகிறான்.]

பிருந்தா: 'ஸ்ரீ ரங்கபுர விஹார' பாடலாம்.

சாரங்கன்: என்ன திடீரென்று அதைப் பொறுக்கினாய்?

பிருந்தா: அது என்ன ராகம்?

சாரங்கன்: பிருந்தாவன ஸாரங்க ராகம்.

பிருந்தா: அதுதான் காரணம்.

சாரங்கன்: என்ன அதில் விசேஷம்?

பிருந்தா: உங்கள் பெயரும் என் பெயரும் அதில் வரவில்லையா?

சாரங்கன்: ஓகோ!

பிருந்தா: இனி பாருங்கள், நாம் இரண்டு பேரும் சேர்ந்து பாடும்போது இந்த ராகம் தான் நடுநாயகமாக இருக்க வேண்டும்.

சாரங்கன்: சரி, அப்படியே. தேவி சொல்லி விட்டால் பிறகு என்ன இருக்கிறது?

பிருந்தா: உங்களை ஒன்று கேட்கப் போகிறேன். உண்மையாகச் சொல்ல வேண்டும்.

சாரங்கன்: என்ன, கேளேன்? பொய் சொன்னால் மட்டும் எத்தனை நேரம் தாங்கும்?

பிருந்தா: அப்படி வாருங்கள் வழிக்கு!

சாரங்கன்: என்ன கேள்வி?

பிருந்தா: முன்பு அந்தப் பரிசுப் பாட்டைப் பற்றி எழும்பிய சிக்கல் எப்படித் தீர்ந்தது?

சாரங்கன்: அது சொல்லித்தான் ஆக வேண்டுமா?

பிருந்தா: ஆமாம்.

சாரங்கன்: தம்முடைய கவிதையை நான் பாடியதாக அவர்களிடம் சொன்னார். நானும் அதை ஆமோதித்தேன்.

பிருந்தா (வெகுண்டு எழுந்து): என்ன?

சாரங்கன்: ஆமாம், பிருந்தா! பெரியவர் கலையில் கரை கண்டவர். அவருக்கு ஓர் அவமானம் நேருகிறது. அது பெரிதா, என் மானம் பெரிதா?

பிருந்தா: அதற்காக உண்மையை...

சாரங்கன்: பெரியவருடைய புகழில் களங்கம் ஏற்படுவதைக் காட்டிலும் என்னுடைய ஒரு பதக்கம் போவது மேலல்லவா?

பிருந்தா: பதக்கமா பெரிது? பெயர் பெரிதல்லவா?

சாரங்கன்: அதுதான் நானும் சொல்கிறேன். பெரியவர் கீர்த்தியுடன் இத்தனை நாட்கள் வாழ்ந்துவிட்டுப் பெயர் கெடலாமா?

பிருந்தா: பூனையிலேயே இன்னி மட்டும் எறியலாமோ?

சாரங்கன்: என்ன சொல்கிறாய்!

பிருந்தா: பெரியவர் ஓரளவு பிரக்யாதி அடைந்தாகி விட்டது. அவரைப் பற்றி உலகம் இரண்டு நாட்கள் பேசினாலும் பிறகு ஓய்ந்து விடும்.

சாரங்கன்: அதெப்படிச் சொல்ல முடியும்?

பிருந்தா: அது உலக இயல்பு. அவருடைய புகழ் அவரை ஓரளவு காப்பாற்றும். நீங்கள் உதயமாகு முன்னே இருட்டடித்தால்?

சாரங்கன்: யார் இருட்டு அடித்தார்கள்? எனக்கு வாழ்வு இருக்கிறது.

பிருந்தா: வாழ்வு எங்கே யிருக்கிறது? அதுதான் அஸ்தமித்து விட்டதே? உங்கள் பிரசங்கங்களை எனக்குப் பிடிப்பதில்லை.

சாரங்கன்: என்னைப் பிடிக்கிறதல்லவா? அது ஒன்றே எனக்குப் போதும்!

## காட்சி 13

பிருந்தா: என்ன? என்ன உங்கள் உடம்புக்கு?

சாரங்கன்: ஒன்றுமில்லையே, பிருந்தா!

பிருந்தா: உங்கள் முகத்தில் இவ்வளவு சோர்வை நான் பார்த்ததில்லையே.

சாரங்கன்: என்றும் ஒரே மாதிரி இருக்க முடியுமா? ஒருநாள்மலரும், ஒருநாள் கூம்பும்.

பிருந்தா: ஆமாம், அப்பா சென்றுள்ள சங்கீத அரங்கு வருஷாந்திரக் கொண்டாட்டங்கள் நடக்கும் இடத்தில் ஏதேனும் நடந்ததா?

சாரங்கன்: ஒன்றுமில்லையே?

பாரதி: சாரங்கா, ஏன் அப்பா வாட்டமாக இருக்கிறாய்?

சாரங்கன்: ஒன்றும் இல்லை. தலையைத்தான் இலேசாக வலிக்கிறது.

பாரதி: சுக்குப் பத்து போட்டு விடட்டுமா?

பிருந்தா (தனிமையில்): சாரங்கனின் வாட்டத்துக்குக் காரணம் என்னவாயிருக்கும், அம்மா? தெரிகிறதா?



பாரதி: நேற்று அவன் சாப்பாடு எடுத்துக் கொண்டு போனபோது சங்கீத அரங்கு கட்டடத்திலே ஏதோ ரகளை நடந்திருக்கிறது......

பிருந்தா: அதுதானே பார்த்தேன் ... ... இல்லாவிட்டால்...... இந்த விதமாக மனம் சோர்ந்து நான் பார்த்ததே இல்லை.

பாரதி: ஏறக்குறைய அடிதடிக்குக்கூட வந்து விட்டது போலிருக்கிறது.

பிருந்தா: ஏன்?

பாரதி: அந்தப் பழைய சமாசாரம்தான். ஒருத்தர் இவனைக் 'கவிதை திருடியவனே' என்று அழைத்தாராம்.

பிருந்தா: பார்...

பாரதி: எல்லோருமாகச் சேர்ந்து மிகவும் இழிவாகப் பேசி இவனைத் துன்புறுத்தியிருக்கிறார்கள்.

பிருந்தா: இவர் கேவலம் பிரம்மம்போல் பொறுத்துக் கொண்டு இருந்து விடுவார்.

பாரதி: அதன் பிறகு ஒருவர் வந்து இவன் பக்கமாகப் பேசி, மெள்ள மீட்டு உன்னை அழைத்துச் சென்றிருக்கிறார்.

பிருந்தா: உம். இவ்வளவு சாதுவாக ஒரு மனிதனா! கொள்கைக்காக ஒரு பேச்சு பேச மாட்டாரோ?

பாரதி: அப்பாவினுடைய சிஷ்யன் சண்டையில் பங்கு கொண்டான் என்று வரக் கூடாது என்றிருப்பான்.

பாரதி: கலாதேவிக்கு இப்படி ஒரு வினையா? அற்புதமான கலையம்சத்தை அளித்து விட்டு இப்படி ஒரு மூடத் தனமான போர்வையை...

பாரதி: வரவர உன் பேச்சு காரசாரமாக மாறிக் கொண்டு வருகிறது, பிருந்தா!

## காட்சி 14

வித்வான்: பாரதி!

பாரதி: என்ன?

வித்வான்: சாரங்கன் எங்கே?

பாரதி: அவனும் பிருந்தாவும் தோட்டத்தில் இருக்கிறார்கள்.

வித்வான்: அன்றைய தினம் என்னிடம் என்னவோ பிரமாதமாகச் சொன்னாயே?

பாரதி: நான் என்ன சொன்னேன்?

வித்வான்: சாரங்கனுக்குக் கச்சேரி செய்ய வாய்ப்பு கொடுக்க வேண்டும் என்றாயே?

பாரதி (ஆவலுடன்): ஆமாம். ஏதாவது சந்தர்ப்பம் பிறந்ததா?

வித்வான்: அனந்தராம பாகவதரைத் தெரியுமா உனக்கு?

பாரதி: ஆமாம். அவருக்கு என்ன?

வித்வான்: அவரிடம் ஒரு பையன் இருக்கிறான்; ...ராமகிருஷ்ணன் என்று பெயர்......

பாரதி: ஆமாம். ஒரு வருஷம் கச்சேரி செய்து பரிசுகூட வாங்கினானே?

வித்வான்: அவனேதான். அவனை மேடையிலே ஏற்றி முன்னுக்குக் கொண்டு வரப் பாடாகப் பட்டார் பாகவதர்.

பாரதி: ஓடி விட்டானா?

வித்வான்: ஓடினால்தான் தேவலையே?

பாரதி: என்ன செய்துவிட்டான்?

வித்வான்: இப்பொழுது அவன் பாட்டைக் கேட்டு ரசிக உலகம் மிகவும் பாராட்டுகிறதாம். எங்கே பார்த்தாலும் அவனைத்தான் அழைக்கிறார்கள்.

பாரதி: ஆமாம். அவனுக்குத்தான் மவுசு அதிகம். நம் பிருந்தா சிநேகிதி லலிதாவின் கல்யாணத்துக்குக் கூட அவன் கச்சேரிதான்.

வித்வான்: எங்கள் சங்கீத அரங்குக்குக் காரியதரிசி அவன்.

பாரதி: பாருங்கள். கொஞ்சம் வழிகாட்டி விட்டால் எப்படி முன்னேறி விட்டான்?

வித்வான்: அவன் முன்னேறி விட்டான், சரி. பாகவதர் எங்கே?

பாரதி: பெருமை முழுவதும் அவருடையதுதானே?

வித்வான்: இந்தப் பெருமை எத்தனை நாட்கள் தாக்குப் பிடிக்கும்? இன்னும் இரண்டொரு நாட்களில் பாகவதரை மறந்தே போய் விடுவார்கள்.

பாரதி: அப்படி ஒன்றும் மறந்து விடாது. வைத்தாவையும் தமிழுப் பிள்ளையையும் சங்கீத உலகம் மறந்தா போய் விட்டது?

வித்வான்: நேற்று ஓரிடத்தில் பேசிக் கொண்டிருந்தார்கள்...

பாரதி: என்ன?

வித்வான்: இந்தக் கிழவர்களின் கச்சேரியை ஏன் கேட்கப் போகிறோம்? அவர்களுடைய தனிப் பாணி, தெளிவு, கலை நுணுக்கம்— இதற்காகத்தானே என்கிறான் ஒருவன்.

பாரதி: அதில் தவறு என்ன இருக்கிறது? அவன் ரசிகன் போலும்.

வித்வான்: இருக்கலாம். உடனே அவன் சொல்கிறான்...

பாரதி: என்ன?

வித்வான்: இந்தக் கிழவர்கள் தங்கள் பிரத்தியேக முறையைச் சிறு பிள்ளைகளுக்குக் கற்றுக் கொடுத்து விட்டால் அதை நன்றாகக் கேட்கலாம் என்கிறான்.

பாரதி: உங்கள் சங்கீத மேதைக்குப் பாராட்டுத்தானே அது?

வித்வான்: இளம் பாடகர்களுக்குச் சாரீர சுகம் இருக்குமாம்...

பாரதி: உண்மைதானே? நம் சாரங்கன் பாடினால் இன்று முழுவதும் கண் உறக்கமில்லாமல் கேட்டுக் கொண்டிருக்கலாமே?

## காட்சி 15

சாரங்கன்: பிருந்தா!

பிருந்தா: உம்.

சாரங்கன்: அப்பா வெளியே போய்விட்டாரா? ராக சுகுண சம்மேளனமாமே!

பிருந்தா: உம்.

சாரங்கன்: ஏன், பிருந்தா பேசமாட்டேன் என்கிறாய்? நீ ஏன் அப்பாவுடன் போகவில்லை?

பிருந்தா: என்னவோ போக வேண்டும் என்று தோன்றவில்லை.

சாரங்கன்: மிகவும் அழகாக இருந்திருக்கும். பாரத தேசத்தின் பல பாகங்களிலிருந்து வித்வான்கள் வந்து பேசப் போகிறார்கள்.

பிருந்தா: பேசட்டுமே! வித்வத் சபையில் எனக்கென்ன வேலை?

சாரங்கன்: என்னுடைய பிரதிநிதியாகப் போகக்கூடாதா?

பிருந்தா: அப்படிச் சொல்லி யிருந்தால் போயிருப்பேன்.

சாரங்கன்: சொல்லவேண்டுமா, பிருந்தா? எனக்குத்தான் தடை. நீ போய் அறிந்து கொண்டு வந்தால் நமக்குப் பயன்படுமே.

பிருந்தா: அப்படித் தோன்றவில்லை. உங்களுக்கு இடம் இல்லாத இடத்தில் எனக்கு என்னவென்றிருந்து விட்டேன். அப்பாகூட...

சாரங்கன்: அப்பாகூட என்ன?

பிருந்தா: அப்பாகூட என்னைச் சில அபூர்வ ராகங்களைப் பயிற்சி செய்யச் சொன்னார்.

சாரங்கன்: விடியற்காலம் நான் அங்கே தான் மரத்தடியில் உட்கார்ந்து கேட்டுக் கொண்டிருந்தேன்.

பிருந்தா: எப்படி இருந்தது என் வாசிப்பு?

சாரங்கன்: உயிரே இருக்கவில்லை. ராகத்தின் சடலம்தான் இருந்தது; ஜீவனில்லை.

பிருந்தா: எப்படி இருக்கும்? மனம் இருந்தால்தானே?

சாரங்கன்: மனம் இல்லாமல் என்னவாம்?

பிருந்தா: என்னவோ?

சாரங்கன்: பிருந்தா! நீ உன் மனப் போக்கை மாற்றிக் கொள்ள வேண்டும்.

பிருந்தா: (பெருமூச்சு)

சாரங்கன்: வா, பிருந்தா. இப்பொழுது நான் பக்கத்தில் இருக்கும்போது வாசி. எப்படி வருகிறது, பார்ப்போம்.

பிருந்தா: நீங்களும் பாடுகிறீர்களா?

சாரங்கன்: கட்டாயம்.

[பிருந்தா வீணையை மீட்டிப் பிருந்தாவன சாரங்க ராகத்தை இலேசாக வாசிக்க ஆரம்பிக்கிறாள்.]

## காட்சி 16

வித்வான் (உரக்க): என் பேச்சில் அவ்வளவு சந்தேகமா?

பாரதி: உங்கள் பேச்சில் சந்தேகம் என்று யார் சொன்னார்கள்? தாலி கட்டிவிட்டால் எல்லோருக்கும் சௌகரியம். ஒருவரோடு ஒருவர் நெருங்கிப் பழகிக்கொண்டு அதனிடையே ஒரு அகழி வெட்டி விட்டால்......

வித்வான்: அதெல்லாம் இன்னும் ஒரு வருஷத்துக்கு முடியாது.

பாரதி: நான் சொல்வதைக் கேளுங்கள். குழந்தைகளின் உள்ளத்தையே உடைக்க முயலாதீர்கள்.

வித்வான்: பிருந்தாவை எவனுக்காவது கொடுத்து விட்டேனா? சாரங்கனுக்கு வேறு பெண் பார்த்து விட்டேனா?

பாரதி: அது வேறு வேண்டுமோ? பஞ்சையும் நெருப்பையும் வைத்து விளையாடுகிறீர்கள். பிறகு வீடு பற்றி விட்டது என்று அலற வேண்டாம்.

வித்வான்: ஆகா, நீ சொன்ன பிறகு அதற்கு மாறு உண்டா?

பாரதி: அப்படியானால்......

வித்வான்: பாரதி, கடைசி முறையாகச் சொல்லி விட்டேன். அவனுக்குக் கல்யாணம் இப்பொழுது இல்லை.

பாரதி: காரணத்தைச் சொல்லுங்கள்.

வித்வான்: பிருந்தாவை மனைவி என்று அவன் கையில் ஒப்படைத்து விட்டால் என்ன நடக்கும் என்று நினைக்கிறாய்?

பாரதி: சந்தோஷமாக ஆடிக் கொண்டும் பாடிக் கொண்டும் இருப்பார்கள்.

வித்வான்: ஆடிக் கொண்டும் பாடிக் கொண்டும் இங்கே உட்கார்ந்து இருக்க மாட்டான். அவளையும் அழைத்துக்கொண்டு எங்கேயாவது ஓடி விடுவான். பிறகு நம் கையில் சிக்க மாட்டான். பிருந்தா நம் கையில் இருந்தால் அவளை விட்டு விட்டுப் போகவும் மாட்டான்.

[தூரத்திலிருந்து பிருந்தாவும் சாரங்கனும் சேர்ந்து பாடுவது கேட்கிறது.]

"வெண்ணிலவு நீ எனக்கு, மேவுகடல் நானுனக்கு
பண்ணுசுதி நீ எனக்கு, பாட்டினிமை நானுனக்கு—கண்ணம்மா"

பாரதி (அதிக துக்கத்துடன்): கேட்டீர்களா? காதில் விழுகிறதா? இன்னுமா உங்கள் மனம் இரங்கவில்லை?

வித்வான்: அந்தப் பாரதியார் புத்தகத்தை எடுத்து மறைவாகப் போடு.

# நீடித்திருக்கும் எழில்

உடலுடன் ஒட்டினதுபோல் தோற்ற மளிக்க நேர்த்தியான ரேயான்களை — (செயற்கைப் பட்டு) அணியுங்கள். இவை ஜார்ஜட், க்ரேப், டபேடா, சடின் முத லிய ரகங்களில் கிடைக்கின்றன. சக்தி மில்லாரால் தயாரிக்கப்பட்ட இச்சிறந்த சில்க்குகள் உங்கள் வனப்பை எடுத்துக் காட்டுகின்றன.

சக்தி மில்லாரால் தயாரிக்கப்பட்ட சில்க்குகளையே வாங்குங்கள். பிரகாச மான நிறங்களோடு கூடிய சக்தி சில்க்கு கள் உறுதியோடு நெடுநாட்களுக்கு நீடித்து உழைக்கின்றன. அவைகளைச் சலவை செய்வது கடினமல்ல. ஏனென் றால் சக்தி சில்க்குகள் நவீன செயற்கை நூலிழைகளால் தயாரிக்கப்பட்டவை. ஆதலால் அவைகளை சலவை செய்வது எளிது. கண் ணைப் பறிக்கும் வண் ணக் கலர்களிலும் ஏராளமான டிஸைன் களிலும் கிடைக் கின்றன.

## சக்தி



ஜார்ஜட் ★ க்ரேப்

சடின் ★ டபேடா

ஸ்ரீ சக்தி
மில்ஸ்
லிமிடெட்.,
பம்பாய்

---

## அழகிய பளபளப்பான கூந்தலின் ரகசியம் . . .



அழகுமிக்க பளபளப்பான கூந்தலைப் பெறுவதற்குரிய ரகசியம் ஒழுங்கான பாதுகாப்பு மட்டுமல்ல, சரியான தலைமயிர்த் தைலம் தேர்ந்தெடுப்பதும் கூட.

காஸ்டிராலில் காஸ்டரால் ஊட்டமளிப்பதால் கூந்தல் நன்கு வளருகிறது. நரை தடுக்கப்படுகிறது. மயிர் உதிர்வது நிற்கிறது என் றுணர்ந்தவர்கள் அதை தேர்ந்தெடுக்கிறார்கள்.

சுத்தப்படுத்தப்பட்ட விளக்கெண்ணெயிலிருந்து தயாரிக்கப்பட்ட இந்த ரம்மிய வாசனை கொண்ட கூந்தல் தைலம் தலைமயிருக்கு புது பளபளப்பு தருகிறது.

5, 10 அவுன்ஸ் வசீகர புட்டிகளில் கிடைக்கும்

# காஸ்டரால்

தனிப்பட்ட குணம் பெற்ற
கூந்தல் தைலம்






தி கல்கத்தா கெமிகல் கம்பெனி, லிட்.,
கல்கத்தா - 29.

தென் இந்தியக் கிளை - 5/149, ப்ராட்வே, மதராஸ்-1

Tamil-56

# 1,000 மைல் பிரயாணம் — ஓர் அறையினுள்ளே!

கடகட, படபட, படார்... ஓடுவது ஓர் குழந்தையின் பொம்மை ரெயில்தான்... கடகட, படபட, படார், சிறியதோர் அறைக்குள்தான் இவ்வளவு ஓட்டமும்; ஆனல், குழந்தைக்கோ ஆயிரம் மைல் பிரயாணம் செய்யும் திருப்தி! அதன் ஓட்டமும வேகமும் அல்லவா குழந்தைக்கு முக்கியம்?

ஹிந்துஸ்தான் லீவர் கம்பெனியிலுள்ள எமக்கோ, வேகமும் தூரமும் அதைவிட முக்கியந்தான். தினந்தோறும் உங்கள் பொருட்டு நாங்கள் பலவாயிரம் மைல்கள் — சொல்லப்போனல், பரத கண்டின் 35,000 மைல் நீளமுள்ள இருப்புப்பாதை முழுமையுமே — கடந்து வருகிறோம்.



அனுப்புவதற்கு முன்பே, சாமான்களின் போக்குவரத்து சாதனம் என்ன என்பதை நாங்கள் தீர்மானித்துக்கொள்ள வேண்டும். அது எப்படியாயினும், சாமான்கள்போய்ச்சேரத்தான் வேண்டும் — அதுவும் நல்ல நிலையில் போய்ச் சேரவேண்டும். ஏனெனில், எமது சாமான்கள்மீது பொதுஜனங்களுக்குப் பூரண நம்பிக்கை இருந்து வருகிறதல்லவா? லைஃபாய் சோப், விம், ரெக்ஸோனா, டால்டா வனஸ்பதி முதலிய எமது சாமான்களுக்கு உள்ள தேவை எங்கெங்கும், எல்லாப் பருவங்களிலும் வளர்பிறை போலப் பெருகி வருகிறது.

அத்தகைய தேவையைப் பூர்த்தி செய்யத்தான் நாங்கள் சிரமமெடுத்துக் கொள்கிறோம். சாமான்கள் மூலம் கிடைக்கும் சேவையைத் தவிர மற்றோர் சேவையையும் உங்களுக்கு வழங்குகிறோம்: ஆம், ஒழுங்கு தவருமல் விநியோகித்து வருகிறோம்.



**குடும்பந்தோறும் தழைத்தோங்க**

**ஊழியம் புரிவது**

**ஹிந்துஸ்தான் லீவர்**

HLL. 6-X29 TM

பாரதி: பூனை கண்ணை மூடிக் கொண்டால் உலகம் இருண்டு விடாது.

வித்வான் (உரக்க): பாரதி!

## காட்சி 17

பிருந்தா: இன்றைக்குப் பாட்டுக்குள்ளே உங்களுக்கு எது பிடித்தது?

சாரங்கன்: கிருஷ்ணலீலா தரங்கிணி.

பிருந்தா: எனக்கு எது பிடித்தது, தெரியுமா?

சாரங்கன்: எது?

பிருந்தா: நீங்கள் புதியதாகப் புனைந்த கவிதை.

சாரங்கன்: நேற்று நீ பூப்பறித்துக் கொண்டிருந்தாய் பார்..

பிருந்தா: ஆமாம். நீங்கள் அப்பொழுது எங்கே யிருந்தீர்கள்?

சாரங்கன்: தாழ்வாரத்து மூலையில் உட்கார்ந்திருந்தேன்.

பிருந்தா: அப்பொழுது?

சாரங்கன்: அப்பொழுது சூரியோதய சமயம். அங்கே செவ்வானம், இங்கே செந்தாமரை ஒத்த முகம்.

பிருந்தா: நீங்கள் ஒன்று!

சாரங்கன்: அங்கே பூக்களின் மென்மை, இங்கே உன் சரீரத்தின் மென்மை. அங்கே வண்டுகளின் ரீங்காரம். இங்கு என் மனசின் அவா. அங்கு பட்டுப்பூச்சிகளின் விளையாட்டு.

பிருந்தா: இங்கே பிருந்தாவின் துள்ளல்.

சாரங்கன்: ஆமாம், பிருந்தா! தென்றல் காற்று உன் தேகம் போலத் தோன்றியது... நறுமணம் உன் குணம் போலப்பட்டது.

பிருந்தா: என்ன அழகான கற்பனை! ஒரு சைத்திரிகன் இயற்கையிலிருந்து ஒவ்வொரு வர்ணமாக எடுத்துக் குழைத்துச் சித்திரம் தீட்டியதை ஒரு வண்டின் ரீங்காரம் உயிர்ப்பித்து விட்டதா?

சாரங்கன்: ஏதோ இப்படி யெல்லாம் தோன்றுகிறது.

பிருந்தா: என்ன பயன்? அது மலரவே வழியில்லையே!

சாரங்கன்: காலம் இப்படியே இருக்காது. பிருந்தா! நம் கையில் என்ன இருக்கிறது? ஆண்டவன் செயல்...

பிருந்தா: நான் உள்ளே போகிறேன். அப்பாவின் பூஜைக்கு நேரமாகி விட்டது.

சாரங்கன்: இதோ நானும் வருகிறேன். மெழுகிக் கோலம் போட்டுவை. நான் பூஜைச் சாமான்களைத் தேடிக் கொண்டு வருகிறேன்.

## காட்சி 18

சாரங்கன்: உங்களை அடிக்கடி பார்க்கிறேன். இன்னும் உங்கள் பெயரைத் தெரிந்து கொள்ளவில்லை.

விசுவநாதன்: என் பெயர் விசுவநாதன்.

சாரங்கன்: தாங்கள்தான் திருக்கோயிலூர் விசுவநாதனோ?

விசுவநாதன்: ஆமாம்.

சாரங்கன்: எங்கே இப்படி வந்தீர்கள்?

விசுவநாதன்: நீங்கள் கோயிலுக்குப் போகிறீர்களோ?

சாரங்கன்: ஆமாம். வெள்ளிதோறும் தவறாமல் கோயிலுக்குப் போவேன்.

விசுவநாதன்: நானும் வருகிறேன். வாருங்கள் பேசிக் கொண்டே போவோம். நான் இன்று உங்களிடம் மனம் விட்டுப் பேசுகிறது என்று வைத்து விட்டேன்.

சாரங்கன்: சொல்லுங்கள். எங்கள் குருநாதர் எனக்காகக் காத்துக் கொண்டிருப்பார்.

விசுவநாதன்: போமய்யா, நீரும் உம்முடைய குரு பக்தியும்!

சாரங்கன்: நான் வருகிறேன். குருநிந்தனை எனக்கு மனசுக்குகந்த விஷயமல்ல.

விசுவநாதன்: போக வேண்டாம், இருங்கள். உங்கள் கண் குருடா?

சாரங்கன்: தேவைக்கு வேண்டிய திருஷ்டி இருக்கிறது.

விசுவநாதன்: அனந்தராம பாகவதர் ராமகிருஷ்ணனை எப்படி மகனைப் போல நடத்துகிறார்!

சாரங்கன்: என் குருநாதர் என்னை...



விசுவநாதன்: பேசாமல் இருங்கள். ராமகிருஷ்ணனின் முன்னேற்றத்தினால் அனந்தராம பாகவதர் புகழ் மங்கி விட்டதா? குத்துவிளக்கிலிருந்து அகல் விளக்கை ஏற்றினால் குத்து விளக்கு அணைந்து விடுமா?

சாரங்கன்: யாராவது அப்படிச் சொல்வார்களா?

விசுவநாதன்: பைத்தியக்கார மனுஷரே! நான் சொன்னதை நிதானமாக நினைத்துப் பாருங்கள். வாருங்கள், போகலாம்.

## காட்சி 19

சாரங்கன்: பிருந்தா!

பிருந்தா: என்ன? ஏன் என்னவோ போல் இருக்கிறீர்கள்?

சாரங்கன்: நான் சொல்லப் போகிற விஷயம்......

பிருந்தா: என்ன சொல்லப் போகிறீர்கள்? என் மனசு என்னவோ சொல்கிறதே?

சாரங்கன்: உணர்ச்சிக்கு இடம் கொடுத்துப் பயனில்லை, பிருந்தா! மனசைத் திடப்படுத்திக் கொள்.

பிருந்தா: ஏன் இப்படிப் பேசுகிறீர்கள்?

சாரங்கன்: அழாதே, பிருந்தா. நிமிர்ந்து பார்.

பிருந்தா: சீக்கிரம் சொல்லுங்கள்.

சாரங்கன்: நான் இங்கிருந்து போய்விடத் தீர்மானித்து விட்டேன்.

பிருந்தா: ஆ! ஏன்? ஏன்? என்னை விட்டு விட்டா?

சாரங்கன்: என்ன செய்வது பிருந்தா?

பிருந்தா: இதுதானா உங்கள் கடமை உணர்ச்சி?

சாரங்கன்: சாந்தமாகக் கேள், பிருந்தா! இதைப் பிடி.

பிருந்தா: இது என்ன?

சாரங்கன்: என் கவிதைகள் அடங்கிய நோட்டுப் புத்தகம். இதை அப்பாவிடம் கொடுத்துவிடு. என் குருதட்சிணை இது.

பிருந்தா: எங்கே போகப் போகிறீர்கள்? அதையாவது சொல்லலாமா?

சாரங்கன்: அது எதற்குப் பிருந்தா?

பிருந்தா: இப்படி ஒரு கோழைத்தனமா?

சாரங்கன்: உனக்குக் கோழைத்தனம் என்று தோன்றுகிறது. எனக்குக் கடமை என்று படுகிறது.

பிருந்தா: நம்பின பெண்ணைக் கைவிட்டுச் செல்வது கடமையா?

சாரங்கன்: நான் இனிமேல் இங்கேயிருக்க நியாயமில்லை, பிருந்தா.

பிருந்தா: காரணத்தைச் சொல்லுங்கள்.

சாரங்கன்: கொஞ்ச நாட்களாக நம் வீடு எப்படியிருக்கிறது, கவனித்தாயா?

பிருந்தா: எப்படி இருக்கிறது?

சாரங்கன்: நீ உணரவில்லையா, பிருந்தா?

பிருந்தா: ஒரு தீக்குச்சிதான் பாக்கி; பற்றிக்கொண்டு விடும். நம் வீட்டில் நடமாடும் காற்றே கனன்று கொண்டிருக்கிறது.

சாரங்கன்: அதைத்தான் சொன்னேன். தீப்பற்றி விட்டால் என்ன ஆகும், தெரியுமல்லவா?

பிருந்தா: என்ன ஆகும்? அசுத்தமெல்லாம் தீய்ந்து நல்ல ஸ்புடம் போட்ட மாதிரியாகும்.

சாரங்கன்: இல்லை. இது விளையாட்டல்ல. உன் அப்பா என்னைக் கண்டு படும் வேதனை எனக்குச் சகிக்கவில்லை.

பிருந்தா: அதனால் ஓடி மறைந்து விட்டால் எல்லாம் தீர்ந்து விடுமாக்கும். பிருந்தா பூவும் தலையுமாக, பாட்டும் கூத்துமாக ஆனந்த வாழ்க்கை நடத்துவாளோ?

சாரங்கன்: நம்மைப் பற்றியே பேசிப் பயனில்லை, பிருந்தா. கடவுள் சித்தம் இருந்தால் திரும்பவும் சேராமல் போக மாட்டோம்.

பிருந்தா: நீங்கள் தலைசுர்ந்து திரும்பும் வரையில் நான் இருப்பது சந்தேகம்.

சாரங்கன் (திடுக்கிட்டு): என் மீது உனக்கு அன்பு உண்டானால் நீ ஒன்றும்...

பிருந்தா: உயிரை மாய்த்துக் கொள்வேன் என்று பயப்படுகிறீர்களா? நான் அந்த மாதிரி கோழைத்தனம் செய்ய மாட்டேன். ஆனால் உயிர் தானாக நீங்கி விடும்.

சாரங்கன்: உன் அப்பாதான் என்னை ஆளாக்கி, உருவாக்கி விட்டார்.

பிருந்தா: யார் இல்லை என்றார்கள்?

சாரங்கன்: அவர் என்னைச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை; அப்படியே நூறு வயது காலம் அவருக்குப் பணிவிடை செய்து கொண்டு கழிக்கத் தயார் நான்.

பிருந்தா: யார் அதை மறுக்கிறார்கள்?

சாரங்கன்: ஒரு சமயம் திடீரென்று நான் திரும்பி அவரை எதிர்ப்பேனோ என்று சந்தேகம் கொள்கிறார்.

பிருந்தா: இப்பொழுது மட்டும் அவர் சந்தேகிக்க மாட்டாரோ? வெளியே பிய்த்துக் கொண்டு போய் அவருக்கு எதிராகப் போட்டியாக வரக்கூடியவராயிற்றே?

சாரங்கன்: நான் இனி என் கவிதைகளையோ, சங்கீதத்தையோ புகழுக்கும் உலகப் பாராட்டுக்கும் உபயோகப்படுத்தப் போவதில்லை.—கண்களில் கண்ணீரா, பிருந்தா? என்னைச் சிரித்து வழி அனுப்பு.

பிருந்தா: உள்ளம் உடைந்து கொண்டு இருக்கும்போதா?

சாரங்கன்: நான் வருகிறேன். ஆண்டவன் அருள் இருந்தால் மீண்டும் சந்திப்போம். அதுவரையில் நீ அந்த நன்னுனை நினைத்துப் பூஜை செய்து கொண்டிரு.

பிருந்தா: உம்.

சாரங்கன்: வருகிறேன், பிருந்தா! அப்பா, அம்மாவைப் பத்திரமாகப் பார்த்துக்கொள். நான் என்றைக்கும் அவர்கள் அன்பை மறக்க மாட்டேன்.

பிருந்தா: (விசித்து விசித்து அழுகிறாள். சற்றுக் கழித்து) ஆ, அவர் போயாயிற்று? இது ஒரு கெட்ட சொப்பனமாக இருந்திருக்கக் கூடாதா? ஆண்டவனே!

## காட்சி 20

வித்வான்: பாரதி!

பாரதி: உம்!

வித்வான்: என்ன வரவரக் கூப்பிட்டால் கூடப் பதில் சொல்வது உனக்குச் சிரமமாக இருக்கிறதே?

பாரதி: கை வேலையாக இருந்தேன்...

வித்வான்: முன்னே போல மாலை வேளைகளில் கூட உனக்கு ஒழிவில்லையா? உன்னிடம் ஒன்று சொல்ல வேண்டும் என்று தான் அழைத்தேன்.

பாரதி: என்ன?

வித்வான்: கொஞ்ச நாட்களாக வீட்டிலே களையே இல்லை.

பாரதி: அப்படி ஒன்றுமில்லை.

வித்வான்: குழந்தை பிருந்தா...

பாரதி: உம்.

வித்வான்: இதோ அவளே வருகிறாள். பிறகு சொல்கிறேன்.

பாரதி: என்ன, அம்மா?

பிருந்தா: அம்மா, அப்பாவைப் பார்க்க யாரோ வந்திருக்கிறார்கள்.

வித்வான்: இதோ போகிறேன்...வாருங்கள், வாருங்கள், நமஸ்காரம்!

பதிப்பாளர்: நாங்கள் யார் என்று......?

வித்வான்: தெரியும். உட்காருங்கள். என்னால் ஆகக் கூடியது...

பதிப்பாளர்: சங்கீதக் கல்லூரிக்கு ஒரு தமிழ்ப் பாட்டுப் புத்தகம் வேண்டுமாம். தங்களுடைய கவிதைகளாக இருக்க வேண்டுமென்று அபிப்பிராயப் பட்டார்கள்.

வித்வான்: ஏற்கனவே மூன்று புத்தகங்கள் வெளி வந்திருக்கின்றன. அவைகளில் எது வேண்டுமானாலும்...

பதிப்பாளர்: மற்ற இரண்டு ஸ்தாபனங்கள் அவைகளை வெளியிட்டிருக்கின்றன. இது வரையில் வெளிவராததாக இருந்தால் நலம் என்று பார்க்கிறோம்.

வித்வான்: தற்சமயம் நான் அந்தத் துறையில் பிரவேசிக்கவில்லை. கொஞ்ச காலமாக உடலில் தள்ளாமை வந்துவிட்டபடியால்... ஓய்வு வேண்டும் என்று...வைத்தியர்கள்...... ஆகவே.

பதிப்பாளர்: தங்களைப் போன்ற பெரியார்களைத் தொந்தரவு செய்வது எங்களுக்கு அழகில்லை. எங்கள் உலகிலும் நிறையப் போட்டி. புதுமையாக ஒன்றைக் கொண்டு வர எண்ணினோம்.

வித்வான்: புரிகிறது. ஆனால்...

பதிப்பாளர்: நீங்கள் மனம் வைத்து விட்டால் கவிதைகளுக்குத்தானா குறைவு?

வித்வான்: கலாதேவியை நம் பணியாளாகக் கொண்டு விட முடியாது......

பதிப்பாளர்: அப்படிச் சொல்லவில்லை. அவளுடைய அருள் உங்களிடம் பரிபூர்ணமாக இருக்கிறது என்பதைத்தான் சொல்ல வந்தோம்.

வித்வான்: நீங்கள் போய் வாருங்கள். நான் யோசித்துச் சொல்கிறேன்.

பதிப்பாளர்: உறுதி கூற வேண்டும்...

வித்வான் (கோபமாக): கவிதை எழுதா விட்டால் கோல் எடுத்து அடிப்பீர்கள் போலிருக்கிறதே! போய் வாருங்கள்.

பதிப்பாளர்: மன்னிக்க வேண்டும். ஏதோ ஆவலில் சொல்லிவிட்டோம். தங்கள் மீது உள்ள மதிப்புத்தான்......

வித்வான்: சரி, போய்விட்டு வாருங்கள். யோசித்துச் சொல்கிறேன்.

பதிப்பாளர்: நாங்கள் வருகிறோம். (தனக்குள்) நல்ல மனிதன்! திடீரென்று புஸ்வாணம் போலக் கிளம்பிவிட்டாரே?

மற்றவர்: அந்தச் சிஷ்யப் பையன் சொல்லாமல் கொள்ளாமல் ஓடிப்போன பிறகு அவருக்கு மனித வர்க்கத்தின் மீதே ஒரு கசப்பு வந்து விட்டது.

## காட்சி 21

பாரதி: பிருந்தா!

பிருந்தா (மெதுவான குரலில்): என்ன, அம்மா?

பாரதி: இது என்ன, அம்மா?

பிருந்தா: எது?

பாரதி: நானும் பார்க்கிறேன். தினமும் விடியற்காலையில் எழுந்து பூமாலை தொடுத்துப் போட்டு விட்டு இப்படிக் கண்களில் நீர் மல்க நிற்கலாமா? பெண்கள் சிரித்து, மலர்ந்த முகத்துடன், உதயத்தை வரவேற்க வேண்டாமா?

பிருந்தா: சரி, அம்மா! நான் செய்தது தப்புதான்.

பாரதி: பிருந்தா, உன் உற்சாகத்தையெல்லாம் சாரங்கனோடு அனுப்பி விட்டாயா? உடம்பு எப்படி இளைத்துவிட்டது? உன் குழி விழுந்த கன்னமும் ஒளி இழந்த கண்களும் பார்க்க...

பிருந்தா: அதெல்லாம்" ஒன்றுமில்லை, அம்மா. ஏதாவது இருந்தால் கண்ணாடி சொல்லுமே?

பாரதி: கண்ணாடியைப் பார்த்தால்தானே தெரியப் போகிறது!

பிருந்தா: அம்மா, வீணே மனதை அலட்டிக் கொள்ளாதே.

பாரதி: நீயும் தெம்பாக இரு.

பிருந்தா: முயற்சி செய்கிறேன், அம்மா!

[தெருவில் கதவைத் தட்டும் சத்தம் கேட்கிறது.]

பாரதி: பிருந்தா போய்ப் பார்.

பிருந்தா: நீதான் பார், அம்மா. நான் போய்ப் படுத்துக் கொள்கிறேன்.

பாரதி: சரி, போய்ப் படுத்துக்கொள்.

[கதவு திறக்கப்படும் சத்தம்]

பாரதி (தூரத்திலிருந்து): யார்?

யாரோ: வித்வான்! ஓங்காரநாதர் இருக்கிறாரா?

பாரதி: இருக்கிறார். நீங்கள் யாரோ?

யாரோ: நாங்கள் பதிப்பாளர்...

பிருந்தா (தனக்குள்): பதிப்பாளர், பதிப்பாளர், பதிப்பாளர்! எத்தனை நாட்கள்



நடக்கப் போகிறது இந்த நாடகம். அப்பாவுக்குக் கவித்துவம் வற்றி விட்டது. சூழ்ச்சிகுணம் மேலோங்கி விட்டது. நடக்கட்டும். இதெல்லாம் குருதட்சிணையைச் சேர்ந்ததுதானே? மூன்று நோட்டுப் புத்தகங்களும் தீர்ந்து விட்டால்......

## காட்சி 22

வித்வான்: அனந்தராம பாகவதரா? வாருங்கள், வாருங்கள்! ["ஜ தினமே சுதினமு" என்று பாட ஆரம்பிக்கிறார்.]

அனந்தராம பாகவதர்: நானல்லவா பாட வேண்டும்? உங்களிடம் ஒரு முக்கிய காரியமாக வந்தேன்.

வித்வான்: என்ன? இந்த ஏழையிடம் தங்களைப் போன்ற பெரியார்கள்......?

அனந்தராம பாகவதர்: தேடுவதற்குரிய பொக்கிஷம் இருக்கிறது.

வித்வான்: அடியேன் குடிசையில் எது இருந்தாலும் அது உங்களுக்குச் சொந்தம்.

அனந்தராம பாகவதர்: அவசரப்படாதேயும். பாண்டவர்கள் குந்தியிடம் சொன்ன மாதிரி முடியப் போகிறது.

வித்வான்: வீணை வேண்டுமா? ஏதாவது கச்சேரியா?

அனந்தராம பாகவதர்: அந்த வீணைமட்டுமல்ல, அதை வாசிக்கும் குழந்தையையும் கேட்க வந்தேன்.

வித்வான்: எங்காவது கச்சேரி செய்ய வேண்டுமா? அவள் பக்கவாத்தியத்துடன் வாசித்துப் பழகவில்லை......

அனந்தராம பாகவதர் (சிரிக்கிறார்): நான் வந்த விஷயமே வேறு. என் சிஷ்யன் இருக்கிறானே ராமகிருஷ்ணன்? அவனைப் பார்த்திருக்கிறீர்கள் அல்லவா?

வித்வான்: நம் ராமகிருஷ்ணனைத் தெரியாமல் என்ன?

அனந்தராம பாகவதர்: அவன் நல்ல குணசாலியான பையன். ஞானஸ்தன். அவனுக்கு உங்கள் பிருந்தாவைக் கொடுப்பீர்களா என்று கேட்க வந்தேன்.

வித்வான்: பிருந்தாவையா......?

அனந்தராம பாகவதர்: என்ன யோசிக்கிறீர்கள்? நம் பழைய சம்பிரதாயத்திலே பெண்ணைக் கேட்டுத்தான் செய்து கொள்வார்கள். வரவரக் காலம் கெட்டு விட்டது.

வித்வான்: யோசனை ஒன்றுமில்லை. அதாவது...வீட்டில் கலந்து ஆலோசித்து...

அனந்தராம பாகவதர்: நிதானமாக யோசியுங்கள். நம்முடைய சிநேகம் இன்றைய நேற்றையதல்ல...

வித்வான்: அதற்குச் சந்தேகமா?

அனந்தராம பாகவதர்: நன்றி மறவாத உத்தமன் ராமகிருஷ்ணன். பார்க்க லக்ஷணமாக இருக்கிறான். உங்கள் பெண்ணோ அடக்கமான ஒரு மாணிக்கம்.

வித்வான்: அவளை அடைபவன் பாக்கியசாலிதான்.

அனந்தராம பாகவதர்: இருவரும் சேர்ந்து பாடலாம்.

வித்வான்: (பெருமூச்சு விடுகிறார்).

## காட்சி 23

[திருச்செந்தூர் ஆலயம். தொலைவில் கடல் ஓசை கேட்கிறது. மனிதர்களின் ஆரவாரம். இதனிடையே விசுவநாதனும் ஒரு பெண்மணியும் பேசுகிறார்கள்.]

பெண்மணி: இந்த ஷண்முக விலாசத்திலேயே இருந்து விடலாம் போல் இருக்கிறது.

விசுவநாதன்: அப்படித்தான் எல்லோரும் சொல்வார்கள். ஆனால் உலகம் அவர்களைத் தூண்டில் போட்டு இழுத்துவிடுமே?

பெண்மணி: இங்கே ஒரு மனிதர் வருகிறார். அவர் ஒருவரையும் ஏறெடுத்துப் பார்ப்பதில்லை. ஆண்டவன் சந்நிதியில் நின்று மணிக் கணக்காகப் பாடுகிறார். தானாக மழையாகப் பொழிகிறது அவர் வாயிலிருந்து.

விசுவநாதன்: யாராம் அது?

பெண்மணி: யாருக்கும் தெரியவில்லை. இளம்வயதுதான். பகல் முழுவதும் ஷண்முக விலாசத்திலேயே இருக்கிறார்.

விசுவநாதன்: இன்றைக்கு வருவாரா?

பெண்மணி: இப்பொழுதுதான் வருகிற சமயம். அதோ பாருங்கள். கடலோரப் பிராகாரத்தில் சிரமேற் கைகூப்பிக் கொண்டு வந்து கொண்டிருக்கிறார்.

விசுவநாதன்: யாரோ பரதேசி போலல்லவா இருக்கிறது?

பெண்மணி: ஆண்டிக்குப் பரதேசி நிஷித்தமா?

விசுவநாதன்: முருகனையும் குறை கூறவில்லை; இந்த மனிதனையும் இகழவில்லை.

பெண்மணி: பின்னே 'பரதேசி' என்று என்னவோபோல் சொன்னீர்களே?

விசுவநாதன்: நான் ஒரு ஆளை எதிர்பார்த்தேன். அவனோ என்று...

பெண்மணி: பாருங்கள், சந்நிதிக்குப் போகலாம். அப்புறம் நமக்கு இடம் கிடைக்காது. வாருங்கள் சீக்கிரம்!

விசுவநாதன்: நடையைப் பார்த்தால்...

பெண்மணி: திருப்புகழ் பாடுகிறார். கேளுங்கள்.

[சாரங்கன் "பாதி மதிநதி போது மணி சடை நாதனருளிய குமரேசா" என்ற திருப்புகழைப் பாடுகிறான்.]

விசுவநாதன்: சந்தேகமே இல்லை! அவனேதான்!

பெண்மணி: போய்ப் பார்த்துப் பேசுகிறீர்களா? ஏன் இந்த நிலைக்கு வந்தார்?

விசுவநாதன்: கலைஞன் மனமே விசித்திரமானதுதானே! பித்துக்கும் தெளிவுக்கும் நடுவில் மிகவும் மெல்லிய கோடுதானே!

பெண்மணி: பாவம்! அவருடன் கொஞ்சம் பேசுங்களேன்.

விசுவநாதன்: வேண்டாம்.

## காட்சி 24

பாரதி: பிருந்தா! இங்கே வா. தலை வாரிப் பின்னி விடுகிறேன்.

வித்வான்: மெள்ளச் சிடுக்கை எடுத்து விட்டுக் கோதிவிடு. எட்டு நாட்களில் எப்படி இளைத்து விட்டாள்?

பிருந்தா: தலை வலிக்கிறது, அம்மா! (இருமுகிறாள்)

பாரதி: இன்னமும் இருமல் விடவில்லை. மார்பில் சளி பிடித்திருக்கிறது.

வித்வான்: ஜுரம் இருக்கிறதா, பார்!

பாரதி: இல்லை. நேற்று முதல் ஜுரமேயில்லை. பலவீனம்தான் அவளுக்குப் பிரமாதமாக இருக்கிறது.

வித்வான்: இன்றைக்கு அனந்தராம பாகவதர் வருகிறேன் என்றார்...

பாரதி: நன்றாக இருக்கிறது. வருகிற நேரம்! பெண் பார்க்க ஏற்பாடு செய்யப் போகிறாரா?

வித்வான்: இல்லை. ராமகிருஷ்ணனை மட்டும் அழைத்துக் கொண்டு வருவார் போலத் தெரிகிறது!

பாரதி: வந்தால் கூட இன்றைக்கு இவளைப் பார்க்க வேண்டாம் அவர்கள்.

வித்வான்: பிருந்தா!

பிருந்தா: என்ன, அப்பா?

வித்வான்: அனந்தராம பாகவதர் வந்த விஷயம் தெரியுமல்லவா?

பிருந்தா: உம்!

வித்தான்: உன் அபிப்பிராயம் என்ன, அம்மா?

பாரதி: அவளை...

**வித்வான்:** நீ பேசாமல் இரு, பாரதி! அவனுக்கு வயசாகவில்லையா? சொல், அம்மா! ராமகிருஷ்ணனை நீ பார்த்திருக்கிறாயல்லவா?

**பிருந்தா:** அவரை உங்கள் சிஷ்யராக மாறச் சொல்லுங்கள், அப்பா! அப்பொழுது எனக்கு அவரை மணந்து கொள்வதற்கு ஆட்சேபணையில்லை.

**வித்வான்:** பார்த்தாயா? அதுதான் குணமுள்ள பெண்ணுக்கு அடையாளம்!

## காட்சி 25

**விசுவநாதன்:** இன்றைக்கு ஒரு கவிதை பாடியிருக்கிறான் பார். அற்புதம்!

**பெண்மணி:** நீங்கள் அதைக் குறுக்கெழுத்தில் எழுதிக் கொண்டீர்களா?

**விசுவநாதன்:** ஆமாம், ஏன்?

**பெண்மணி:** அவர் அனுமதி யில்லாமல் அவர் பாடலைத் திருடலாமா?

**விசுவநாதன்:** அவன் ரகசியமாக வைத்தால்தானே? ஆற்று வெள்ளம்போல, ஆண்டவன் அருள்போல, எல்லோர் முன்னிலையிலும் உதிர்க்கிறான். அதைப் பொறுக்கி ஆரமாக்குவதில் தவறு என்ன?

**பெண்மணி:** ஒரு நாள் கூட அவரை நெருங்கிப் பேசவே யில்லையே!

**விசுவநாதன்:** சமயம் வரும். அவனை உனக்குத் தெரியாது; மிகவும் பக்குவமாகப் பிடிக்க வேண்டிய பறவை அவன்.

**பெண்மணி:** என்னதான் அந்த மனசில் வேலை செய்கிறதோ?

**விசுவநாதன்:** அற்புதமல்லவா அவன் மனம்!...அவன் ஏன் இப்படி வந்தான் என்று விசாரிக்க வேண்டும்...

**பெண்மணி:** எப்பொழுது?

**விசுவநாதன்:** சமயம் வரும், பார்!

**பெண்மணி:** எத்தனை பாட்டுக்கள் தொகுத்து வைத்திருக்கிறீர்கள்?

**விசுவநாதன்:** ஆறு. என் சிநேகிதன் பதிப்பாளன் ஒருவன் இருக்கிறான். நாளைக்கே அவனுக்கு அனுப்பி விடுவேன்.

**பெண்மணி:** பின்னால் ஏதாவது தகராறு வரப் போகிறது!

**விசுவநாதன்:** சாரங்கனு தகராறு செய்பவன்? அவன் தெய்வமல்லவா!

## காட்சி 26

*(திருச்செந்தூர்)*

**பெண்மணி:** யாருடைய கடிதம் அது?

**விசுவநாதன்:** என்னுடைய நண்பன் ராமகிருஷ்ணன் எழுதியிருக்கிறான்.

**பெண்மணி:** என்னவாம்?

**விசுவநாதன்:** நான் ஏதோ விசாரித்துச் சொல்லச் சொல்லியிருந்தேன்.

**பெண்மணி:** உங்களுக்கு ஒரு நற்செய்தி!

**விசுவநாதன்:** என்ன அது?

**பெண்மணி:** படித்துவிட்டு வாருங்கள்.

**விசுவநாதன்:** படித்தாயிற்று_என்ன அது? சொல்லேன்!

**பெண்மணி:** இதோ பாருங்கள்.

**விசுவநாதன்:** புத்தகமா! வந்துவிட்டதா? எங்கே? இங்கே கொடு, பார்ப்போம்!

**பெண்மணி:** என்ன புனை பெயர் அவருக்குக் கொடுத்தீர்கள்?

**விசுவநாதன்:** "ஆசு" என்று கொடுத்தேன். அவன் ஆசு கவியல்லவா?

**பெண்மணி:** எல்லாம் சரிதான். இது அந்த மனிதனுக்குத் தெரிந்து...

**விசுவநாதன்:** அவனுக்குத் தெரியாமலா செய்வேன்? இது வரவேண்டும் என்று இருந்தேன். இனிமேல் அவனைப் போய்ப் பார்க்கலாம். அதுவும் தவிர...

**பெண்மணி:** என்ன?

**விசுவநாதன்:** அவனுக்கு வேண்டிய ஓர் உயிர் மன்றாடிக் கொண்டிருக்கிறதாம்.

**பெண்மணி:** அவர் இருக்கும் நிலையில் எதையாவது சொல்லி...

**விசுவநாதன்:** சமுத்திரத்தில் விழுந்துவிடுவான் என்று நினைக்கிறாயா?

**பெண்மணி:** ஏன் நேரக் கூடாது?

**விசுவநாதன்:** அவன் தெய்வ பக்தி நிறைந்தவன். அட்டூழியமான செயலில் இறங்கவே மாட்டான்.

**பெண்மணி:** வாருங்கள், போகலாம்.

## காட்சி 27

*(ரேடியோவில் "ஸ்ரீ ரங்கபுர விஹார" பாடப்படுகிறது)*

**பிருந்தா:** (மிகவும் பலஹீனமான குரலில்) அம்மா, அந்த ரேடியோவை நிறுத்தேன்.



[ரேடியோ நிறுத்தப்படுகிறது]

**பாரதி:** அலட்டிக் கொள்ளாதே, அம்மா! பேசாமல் படுத்துக் கொள்.

**பிருந்தா:** நான் அவரை இனி பார்க்கவே போவதில்லை, அம்மா! ஆண்டவன் அருள் இருந்தால் சேருவோம் என்றாரே!

**பாரதி:** வருவான் பார். என் மனத்தில் உறுதி இருக்கிறது. நான் ஏதாவது படிக்கட்டுமா? நீ கடவுளை நம்பு.

**பிருந்தா:** கடவுளை தினமும்... கடைசியில்.

**பாரதி:** எனக்காகச் செய் அம்மா. சாரங்கனை நினைத்து என் மனம் உருகவில்லையா? வளர்த்த பாசம்......

**பிருந்தா:** சரி, அம்மா! நீ என் பக்கத்திலேயே இரு அம்மா.

**பாரதி:** இருக்கிறேன். கண்ணை மூடிக் கொண்டு தூங்கு.

**பிருந்தா:** தூக்கம் வரவில்லை, அம்மா. துக்கம் தான் வருகிறது.

**பாரதி:** அன்றைக்கு உனக்கு நினைவே யில்லை. உன் பக்கத்திலேயே உட்கார்ந்து ராத்திரியெல்லாம் பஜனை செய்தேன்.

**பிருந்தா:** அப்புறம்?...

பாரதி: நினைவு உடனே வந்துவிட்டது. 'அம்மா' என்று என்னைத்தான் முதலில் கூப்பிட்டாய்.

பிருந்தா: அம்மா! எல்லாத் தாய்மாரும் உன்னைப் போலவே குழந்தைகள்மீது இப்படி உயிராக, அன்பாக இருப்பார்களா?

பாரதி: நானைக்கு உனக்கு......

பிருந்தா: (பெருமூச்சு விடுகிறாள்) படிக்கிறேன் என்றாயே?

பாரதி: ஒரு புது கவிதைப் புத்தகம் வந்திருக்கிறது.

பிருந்தா: உம்.

பாரதி: பாட்டாகப் படிக்கட்டுமா?

பிருந்தா: வேண்டாம். அபிப்பிராயத்தை மட்டும் சொல். ஏதாவது புதுமாதிரி கற்பனை....

பாரதி: ஒவ்வொன்றும் பிரமாதமாக இருக்கிறது. ஆனால் ஆறே ஆறு பாட்டுத்தான் இருக்கிறது.

பிருந்தா: ஏதாவது உனக்கு நிரம்பப் பிடித்ததாக ஒன்று, சொல்லு, அம்மா.

பாரதி: அது ரொம்ப நீளமாக இருக்கிறது. ஒரு வண்டு இருக்கிறதாம். ஒரு மலரைக் கண்டு ஆவலோடு போகிறதாம். ஆனால் கிட்டே போனால் அம்மலர் உண்மை யல்ல, சித்திரம் என்று தெரிகிறது. மறுபடியும் தூரப் போனால் பழைய பிரமை......

பிருந்தா: கடைசியில் முட்டி முட்டி இறந்து விடுகிறது.

பாரதி: ஆமாம். உனக்கு எப்படித் தெரியும்?

பிருந்தா: அது யார் கற்பனை தெரியுமா, அம்மா?

பாரதி: யார்?

பிருந்தா: ஆமாம் அவர்தான். அந்தச் சித்திர மலர் நான்தான். அம்மா! அது அவர் எழுதினதுதான். ஆனால் ஒரு சந்தேகம்.

பாரதி: என்ன, அம்மா?

பிருந்தா: அவர் புத்தகம் போட முன் வர மாட்டாரே?

பாரதி: புனை பெயரில் இருக்கிறது...

பிருந்தா: அம்மா, அந்தப் பதிப்பகத்துக்குப் போய்ப் பார்க்கச் சொல், அம்மா.

## காட்சி 28

[கல்யாண மேளம் கேட்கிறது.]

பிருந்தா: அப்பா நில்லுங்கள். நமஸ்காரம் செய்கிறோம்.

வித்வான்: உன் அம்மாவுக்கு முதலில் செய்யுங்கள். அவள்தான் அதற்கு அருகதையுடையவள்.

பிருந்தா: (சிரித்துக் கொண்டே) அப்பா, அப்பா! அப்படி எல்லாம் சொல்லி வைக்காதீர்கள். இவர் அதைக் குருவின் சாபம் என்று நினைத்து விடுவார்.

சாரங்கன்: விளையாடுகிற விஷயமா இது, பிருந்தா?

பிருந்தா: இல்லை! வேடிக்கையே செய்யக் கூடாதா?

அனந்தராம பாகவதர்: அப்பா! அவள் மீண்டும் எழுந்து சிரிக்கப் போகிறாளா என்று நினைத்தோம் நாங்கள்.

ராமகிருஷ்ணன்: நான் ஒரு மன்னிப்பு கேட்டுக்கொள்ள வேண்டும்.

அனந்தராம பாகவதர்: என்ன அது, ராமகிருஷ்ணா?

ராமகிருஷ்ணன்: பெரியவரை ஒரு சமயம் மதிப்புக் குறைவாகப் பேசி விட்டேன்.

அனந்தராம பாகவதர்: எப்பொழுது?

வித்வான்: ஒன்றுமில்லை. ஒரு சந்தர்ப்பத்தில் நான் அவனிடம் போனேன்.

அனந்தராம பாகவதர்: எப்பொழுது அது?

வித்வான்: என்னுடைய பூர்வாசிரம சேஷ்டைகளில் ஒன்று. விட்டுத் தள்ளும்.

அனந்தராம பாகவதர்: (சிரிக்கிறார்)...... இருந்தாலும் என் சிஷ்யன் ஒருவன்...

விசுவநாதன்: பழையது பழையதோடு போகட்டுமே? இந்த மங்கள வாத்தியத்துடன் புதுவாழ்வும், புதுக் கொள்கைகளும் ஆரம்பிக்கட்டுமே?

அனந்தராம பாகவதர்: ஆமாம், அப்பா...

விசுவநாதன்: (தாழ்வான குரலில்) ராமகிருஷ்ணா, இந்தப் பக்கம் வா.

[இருவரும் தனியாக ஒதுங்கிச் செல்கின்றனர்.]

விசுவநாதன்: என்ன விஷயம் ராமகிருஷ்ணா?

ராமகிருஷ்ணன்: அவர் என்னைத் தம்முடைய சிஷ்யனாக வரும்படி அழைத்தார்.

விசுவநாதன்: சாரங்கனுக்குக் கிடைத்த சிட்சையே போதும் என்றாயாக்கும்?

ராமகிருஷ்ணன்: ஆமாம். உனக்கு எப்படித் தெரிந்தது?

விசுவநாதன்: நீ என்ன சொல்வாய் என்று எனக்குத் தெரியாதா?

ராமகிருஷ்ணன்: சாரங்கனுக்கு என்ன பரிசு கொடுக்கலாம்?

விசுவநாதன்: அன்பு ஒன்று போதும் அவனுக்கு.

பிருந்தா: (வந்துகொண்டே) யாருக்குமே அதுதான் பரிசு.

விசுவநாதன்: யாரு, பிருந்தாவா? சாரங்கன் எங்கே?

பிருந்தா: வீணை கொண்டு வரப் போயிருக்கிறார்.

ராமகிருஷ்ணன்: நீங்கள் வீணை வாசிப்பீர்களா?

விசுவநாதன்: அதற்குத்தான் சாரங்கனை விரட்டியிருக்கிறான்.

ராமகிருஷ்ணன்: இதோ சாரங்கன் வந்து விட்டாரே.

விசுவநாதன்: இப்படி வை, சாரங்கா! சாரங்கன் பக்கத்தில் உட்கார், பிருந்தா.

ராமகிருஷ்ணன்: முதலில் என்ன பாடப் போகிறீர்கள்?

சாரங்கன்: முதலில் பாடுவது ஒன்று இருக்கிறது. அதன் பிறகு வேண்டுமானால்......

ராமகிருஷ்ணன்: எல்லோரையும் கூப்பிடலாமே.

விசுவநாதன்: அவர்களே வந்து விட்டார்கள். சரி ஆரம்பியுங்கள், நிம்மதியாகக் கேட்போம்.

[பிருந்தாவன சாரங்க ராகம் வாசிக்கப்படுகிறது.]

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10
for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam





பூவைப் போல ...

உங்கள் மேனியை மலரச்

செய்வது **ரெக்ஸோனா**

ரெக்ஸோனா சோப்பில் இருப்பது கேடில் — சருமத்திற்கு ஊட்டமளித்து உங்கள் இயற்கையழகை வெளிக்கொணரத் துணை புரியும் எண்ணெய்கள் கலந்த விசேஷத் தைலமே கேடில்!








கேடில் கலந்த டாய்லெட் சோப்
இது ஒன்றே

ரெக்ஸோனா ப்ரொப்ரைடரி லிமிடெடுக்காக பம்பாயிலுள்ள
ஹிந்துஸ்தான் லீவர் லிமிடெடின் தயாரிப்பு

RP. 150-50 TM.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon